# ஆரோக்கியத்தை விரும்புவோர் எக்காலமும்
# லைப்பாய் உபயோகித்தே நீராடுவார்.

கண்மணிகளுக்குக் கொண்டாட்டம் என்றாலும்
உடம்பு அழுக்காகிவிடுகிறதே. அழுக்கிலே உள்ள
நோய்க் கிருமிகள் ஆரோக்கியத்திற்கு
என்றென்றும் ஆபத்தானவை.

அக் கிருமிகளைக் கழுவிக்
களைந்து ஆரோக்கியத்தைப்
பாதுகாப்பது லைப்பாய் சோப்.
நீங்களும் உங்கள் குழந்தை
களும் எக்காலமும் லைப்பாயி
னால் ஸ்நானம் செய்து
புதுமலர்ச்சி யுடன் இருங்கள்.




இந்துஸ்தான் லீவர் லிமிடெட் தயாரிப்பு L/P. 4-X29 TM

# கல்கி

## பொருளடக்கம்

**நவம்பர் 8, 1959**



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள் ; சம்பவங்களும் கற்பனையே.

# அழகைப் பற்றி பேசுகிறார்கள்...

25 வருஷங்களாக தாய்மார்கள் தங்கள் கூந்தலின் அழகிற்குக் காரணம் டாடாவின் பரிமள கோகோனட் ஹெயர் ஆயில் என்ற ரகஸியத்தை தங்கள் பெண்களுக்கு போதித்து வருகிறார்கள். பூமணம் கமழும் இந்த சுத்தமான தேங்காய் எண்ணெய் லேசானது, கூந்தலுக்கு போஷாக்களிப்பது.... உங்கள் பெண்ணின் கூந்தலை ஆரோக்கியமாக வைத்து அதற்கு கண்கவர் கவர்ச்சியூட்டச் சிறந்தது.




## டாடாவின் பரிமள
# கோகோனட் ஹெயர் ஆயில்

தி டாடா ஆயில் மில்ஸ் கம்பெனி லிமிடெட்



மலர் 19
இதழ் 14

தமிழ்த்திரு நாடுதன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —*பாரதியார்*

விகாரி ௵
ஐப்பசி 22உ

# சரித்திரம் பேசுகிறது

நாட்டின் சரித்திரமும், காங்கிரஸின் சரித்திரமும் சரியாக அறியாதவர் என்பதை ஸ்ரீமதி இந்திரா மிகத் தெளிவாகச் சமீபத்தில் காண்பித்துக் கொண்டார்கள்.

ராஜாஜி காந்திய வாதியல்லவாம். சுதந்திரக் கட்சியோ ராஜாஜியோ காந்தியக் கொள்கைகளைப் பின்பற்றியதாகச் சொல்லிக்கொள்ளக் கூட முடியாதாம். முக்கியமான தேசப் பிரச்னைகள் எழுந்தபோதெல்லாம் ராஜாஜி காந்திஜியுடன் மாறுபட்ட அபிப்பிராயம் கொண்டிருந்தாராம்.

மேம்போக்காக, காங்கிரஸின் சரித்திரமும், இந்திய நாட்டின் விடுதலைச் சரித்திரமும் தெரிந்தவர்கள் கூட, இந்திரா காந்தியின் இந்த வார்த்தைகளைக் கேட்டுச் சிரிப்பார்கள். வருந்தவேண்டியிருக்கிறது.

காந்தி மகான் சத்தியாக்கிரக இயக்கத்தை ஆரம்பித்து, 1920ல் சிறை சென்று விட்டார். ஒத்துழையாமை இயக்கம் பிசுபிசுத்து விட்டாற்போன்ற நிலை ஏற்பட்டது; அப்போது 1922ல் டிசம்பரில் காங்கிரஸிலிருந்த சித்தரஞ்சன் தாஸ், விட்டல்பாய் படேல் போன்றவர்கள் காந்தி மகானின் சத்தியாக்கிரகத் திட்டத்தை விட்டுவிட வேண்டும் என்று பார்த்தார்கள். அந்தச் சமயத்தில் காந்தி மகானின் சத்தியாக்கிரகத் திட்டத்தின் நுட்பங்களை எடுத்துரைத்து, சத்தியாக்கிரகக் கொள்கையை நிலைநிறுத்தினார் ராஜாஜி. இந்தச் சம்பவம் கயா காங்கிரஸில் நடைபெற்றது. காந்தி மகான் இல்லாத குறையை அவர் நிறைவு செய்தார்.

பாகிஸ்தான் விஷயத்தில் ராஜாஜியின் கொள்கையைச் சரியாக முதலில் புரிந்து கொள்ளவில்லை. பின்னர் விளங்கியவுடன் 'நான் அதை முற்றிலும் ஒப்புக்கொள்கிறேன்' என்று காந்திஜி சொன்னதும் அந்தத் திட்டத்துடன் ஜின்னா அவர்களைச் சந்தித்துக் காந்திஜி பேசியதும் உலகம் அறியும்.

1942ல் காந்திஜி சிறை சென்றதும் நேரத்தில் சில காங்கிரஸ்காரர்கள் நடத்திய காரியங்களை ராஜாஜி ஒப்புக்கொள்ளவில்லை. காந்திஜியின் கொள்கைகளுக்கு விரோதமானவை என்றார். பிறகு காந்திஜி வெளியே வந்ததும் ராஜாஜி கண்டித்ததே சரி என்பது தெளிவாயிற்று. காந்திஜியும் அந்த நடவடிக்கைகளைக் கண்டித்தார்.

பிரிட்டிஷ் அரசாங்கம் ஹிட்லரால் கடுமையாகத் தாக்கப்பட்ட நிலையில், ஒரு தூது வரை அனுப்பிச் சமாதானம் செய்து கொள்ளப் பார்க்கும்போது, கடும் நிபந்தனைகள் விதித்து, இன்னும் பல சலுகைகள் பெறப் பார்ப்பது பலாத்காரத்துக்குச் சமமாகும். அதனால், கிரிப்ஸ் திட்டத்தை நிராகரிப்பது, காந்திய அஹிம்சாவாதமும் அல்ல; ராஜ தந்திரமும் அல்ல என்பதை ராஜாஜி வற்புறுத்தினார். ராஜாஜி சொல்வதிலுள்ள உண்மையைக் காலந் தாழ்ந்து காந்தி மகானும், மற்றக் காங்கிரஸ் தலைவர்களும் உணர்ந்தனர் என்பது நாடு நன்கு அறியும். ஸ்ரீமதி இந்திராவுக்கு இதெல்லாம் எப்படித் தெரியும் ?

காந்தி மகானின் திட்டங்களில் மிக முக்கியமான திட்டம், கதர்த் திட்டமும், மது விலக்குத் திட்டமும். இவையே விடுதலைப் போரைவிடக் காந்தி மகான் முக்கியமாகக்

கருதினர். ராஜாஜி, ரயில், மோட்டார்கள் எட்ட முடியாத ஒரு கிராமத்தில் ஏழு ஆண்டுகள் ஆசிரமம் அமைத்து எளிய வாழ்க்கை நடத்திக் கொண்டு, கதர்த் திட்டமும், மதுவிலக்குப் பிரசாரமும் தீவிரமாகச் செய்து வந்தார்.

ஸ்ரீமதி இந்திரா, தான் ஏதோ காந்திய வாதிபோல் பேசுவதைப் பார்த்து நாம் என்ன சொல்வது?

ஜமீன்தாரி உரிமைகளைப் பறித்து விட்ட பின்னரும் ராம்கட் ராஜா, என்ன காரணத்தினால் குடியானவர்களின் அன்புக்குப் பாத்திரமாயிருக்கிறார் என்று விசாரித்து அறிந்து கொண்டிருந்தால் இந்திரா காந்தி ராம்கட் ராஜாவைப் பெரிதும் போற்றி யிருப்பார். அரசாங்கத்தைவிட ராம்கட் ராஜாவே நல்லவர் என்று குடியானவர்கள் ஏன் இன்னும் நம்பி வருகின்றனர்? இதையல்லவோ காங்கிரஸ் தலைமை வகிக்கும் இந்திரா காந்தி ஆராய வேண்டும்? அதற்குப் பதில் அர்த்தமற்றபடி கோபித்துக் கொண்டு பேசுகிறார். சர்க்கார் புள்ளி விவரங்களின்படியே பீகார் மாகாணத்தில் குடியானவர்கள் ஜமீன்தாருக்குக் கொடுத்துவந்த நிலவரியைப்போல் பதினைந்துமடங்கு நிலவரியாகச் சர்க்காருக்குக் கொடுத்து வருகின்றனர். அரசாங்கம் குடியானவர்களுக்கு யாதொரு நன்மையும் செய்யவில்லை, செய்யப் போவதுமில்லை என்று குடியானவர்கள் கண்டுகொண்டனர். இதை இந்திரா காந்தி உணரவில்லை. உணர்ந்தாலும் ஒப்புக்கொள்ள மாட்டார்.

# காப்பிக்கொட்டை விஷயம்

**கா**ப்பிக்கொட்டைக்கு ஏற்பட்டுள்ள விலை உயர்வு நமக்கெல்லாம் எரிச்சலை உண்டாக்குகிறது. டி. யு. வி. எஸ். ஸில் அங்கத்தினர்களுக்கும், அதிர்ஷ்டமுள்ள மற்றவர்களுக்கும், 6¾ ரூபாய்க்குக் கிடைக்கும் காப்பிக் கொட்டை வெளி வியாபாரிகளிடம் 9¾ ரூபாய்க்குக் கிடைக்கிறது. வியாபாரிகளைக் கரித்துக் கொட்டுகிறோம். ஆனால் இது ஏகபோக உரிமையுடன் நடத்தப்படும் ஒரு வியாபாரம் என்பது அநேகமாகப் பலருக்கும் தெரியாது. ஏகபோக வியாபாரத்தில் காணப்படும் எல்லாவித தீமைகளும் காப்பிக்கொட்டை வியாபாரத்திலும் காணப்படுகின்றன. இதில் அரசாங்கத்துக்கும் அக்கறையுண்டு என்பதும் மறைமுகமான விஷயம்.

காப்பிக் கொட்டை வியாபாரத்துக்குப் பூரண உரிமை பெற்றவர்கள் காப்பி போர்ட் என்ற ஸ்தாபனம். மத்திய அரசாங்கத்தின் சட்டத்தின்படி நியமிக்கப்பட்டுள்ளது. தோட்டக் கம்பெனிகளுக்கும்,மத்தியசர்க்காருக்கும், ராஜ்ய சர்க்கார்களுக்கும் வியாபாரிகளுக்கும், உபயோகிப்பவர்களுக்கும் இந்தப் போர்டில் பிரதிநிதிகள் இருக்கிறார்கள். நாட்டில் உற்பத்தி செய்யப்படும் காப்பிக் கொட்டை முழுவதும் இந்தப் போர்டுக்கு ஒப்படைத்துவிடப் படுகின்றன. இதைக் குண்டுக் கொட்டை, தட்டைக் கொட்டை என்றெல்லாம் தரம் பிரித்து, வெளிநாடுகளுக்கு ஏற்றுமதிக்கென ஒரு பாகத்தை ஒதுக்கி வைத்து, உள்நாட்டுத் தேவைக்கென ஒரு பாகத்தை ஒதுக்கி, கையிருப்புக்கென ஒரு பகுதியை நிறுத்திக் கொண்டு விநியோகத்துக்கு ஏற்பாடு செய்கிறது இந்தக் காப்பி போர்டு. எக்ஸைஸ் வரி விதிப்பினால் சர்க்காருக்கு வருமானத்தை வருவித்துக் கொடுக்கிறது.

உள்நாட்டுத் தேவைக்கு எவ்வளவு ஒதுக்க வேண்டும் என்று நிர்ணயிப்பதில் இந்தப் போர்டின் தீர்ப்பே முடிவானது. போர்டினுடைய சொந்த டிப்போக்கள் மூலமும், டி.யு.வி.எஸ். போன்ற கூட்டுறவு ஸ்தாபனங்கள் மூலமும் எவ்வளவு டன்கள் விநியோகம் செய்வது; ''டெண்டர்'' ஏலங்கள் மூலமும், வியாபாரிகள் மூலமும் எவ்வளவு டன்கள் விநியோகம் செய்வது என்பதையும் இது நிர்ணயிக்கிறது. நேரடி விநியோகத்துக்கு எந்த விலைக்குச் சரக்கு அனுப்புவது என்பதையும் போர்டு தான் நிர்ணயம் செய்கிறது.

அன்னியச் செலாவணி சம்பாதிக்க முடிகிறது என்பதால் காப்பிக்கொட்டையை ஏற்றுமதி செய்வது அவசியமாகிறது. இதை விட்டுவிடுவதற்கில்லை. ஆனால் வெளிநாடுகளில் காப்பிக் கொட்டையின் விலைவாசி வேகமாகச் சரிந்துவிட்டது. லாபம் கிடைப்பதில்லை. இதனால், ஏற்றுமதி வியாபாரத்தில் கிடைக்காத லாபத்தை, உள்நாட்டு விநியோகத்திலிருந்து சம்பாதித்துக் கொள்ள வேண்டிய அவசியம் ஏற்பட்டுள்ளது. இதை இரண்டு வகையில் காப்பிபோர்டு நிறைவேற்றிக் கொள்ளுகிறது. முதலாவது, உள்நாட்டு விநியோகத்துக்கென ஒதுக்கப்பட்டுள்ள அளவைக் குறைத்து, பற்றாக்குறை நிலைமை உண்டாக்குவது. இரண்டாவது, ஒதுக்கப்பட்ட காப்பிக்கொட்டையில் பெரும் பகுதியை 'டெண்டர்' ஏலத்தில் விட்டு, அதிக லாபம் சம்பாதிப்பது. இப்படி ஏலத்தில் விற்கப்படும் காப்பிக்கொட்டைக்கு விலையாக வீசைக்கு எட்டேமுக்கால் ரூபாய் காப்பி போர்டுக்குக் கிடைக்கிறது. தாங்களாகவே காப்பி போர்டின் டிப்போக்கள் மூலமும் டி. யு. வி. எஸ். ஸ்தாபனங்கள் மூலமும் விநியோகிக்கும் காப்பிக்கொட்டைக்கு ஆறேகால் ரூபாய் தான் கிடைக்கிறது. லாபத்தை விட்டுக் கொடுக்க மனமில்லாது, காப்பி போர்டார் சென்ற மூன்று அல்லது நான்கு மாதங்களில் சுமார் 2000 டன்கள் ஏலத்தில் வியாபாரிகளுக்கு விற்றுச் சுமார் முப்பது லட்சத்துக்கு மேல் லாபம் சம்பாதித்திருப்பதாகத் தெரிகிறது.

இந்த 'டெண்டர்' ஏலத்தில் காப்பிபோர்டிலிருந்து பகிரங்கமாக வாங்கும் விலையோ, காப்பிபோர்டு நேரிடையாக வழங்கும் விலையை விட ஒன்றரை மடங்கு அதிகம். மேலும், வியாபாரிகள் வாங்குவது ஏலம் நடக்குமிடங்களில்-சில சமயம் மைசூர், கேரள ராஜ்யங்களிலுள்ள இடங்களில்கூட. அதனால் இரண்டு விற்பனை வரிகள் அவர்கள் கொடுக்கவும் நேருகின்றன. எட்டேமுக்கால் ரூபாய்க்கு


உங்கள் காந்தி சரியாக இல்லை
இந்திராகாந்தி ராஜாஜியை உண்மையான காந்தீயவாதியல்ல என்று சொல்லி -யிருக்கிறார்
நீங்கள் எங்கள் நாட்டுக்கு வர வேண்டும்
சூ யென் லாய்
டாக்டர் ராதாகிருஷ்ணன்
நீ ஒரு இந்தியன் - மறவாதே
உலக கம்யூனிஸத்தை மறவாதே சீனாவை நம்பு
கம்யூனிஸ்ட்

வாங்கிய காப்பிக்கொட்டையை விற்பனே வரியைக்கூட்டி ஒன்பதேகால் ரூபாய்க்குக் குறைவாக எப்படி விற்க முடியும் ?

வியாபாரிகள் காப்பிக்கொட்டையை அதிக விலேக்கு ஏன் விற்கிருர்கள் என்பதற்கு இப்போது காரணம் தெரிகிறதல்லவா? காப்பி போர்டார் கூறுவதுபோல், இது பதுக்கலினுல் ஏற்பட்ட விலே உயர்வு அல்ல. மாமுக, அதிக விலே கொடுத்து மக்கள் வாங்க முடியாதபடியால், வியாபாரிகளிடம் சரக்கு விற்காமல் தேக்கம் ஏற்பட்டு விட்டதாகக் கூடச் சொல்ல வேண்டும்.

காப்பி உற்பத்தியாவது பெரும்பாலும் நமது அண்டை ராஜ்யங்களான கேரளத்திலும் மைசூரிலும் இருந்தாலும், காப்பியை உபயோகிப்பவர்கள் தமிழ் நாட்டில்தான் அதிகம். ஆகையால் காப்பிபோர்டின் கஜானவை நிரப்புவதற்குத் தமிழ் மக்களின் காணிக்கைதான் கணிசமானது.

காப்பிக் கொட்டை ஆறரை ரூபாய்க்கே எல்லா மக்களுக்கும் கிடைக்க வேண்டுமென்று காப்பி போர்டு உண்மையாகவே விரும்பினுல், பகிரங்க ஏலம் விட்டு லாபம் அடிப்பதை நிறுத்திவிட்டு, போர்டின் சொந்த டிப்போக்கள் மூலம் என்ன விலேயில் காப்பிக் கொட்டை வினியோகம் செய்கிருர்களோ, அதே விலேக்கு வியாபாரிகளுக்கும் வினியோகம் செய்ய வேண்டும்.

# என்ன சேதி?

## தவறி வந்தவர்

இந்தியக் கம்யூனிஸ்ட் 'கட்சியில் பெரும் பிளவு ஏற்பட்டிருக்கிறது.

சீனுவின் இந்திய ஆதிக்க வெறியை ஆமோதித்தும், வெளிப் பார்வைக்கு எதிர்த்தும் இரண்டு கோஷ்டிகள் ஏற்பட்டுள்ளன.

ஒரு நாட்டின்மீது இன்னெரு நாடு தகாத முறையில் ஆதிக்கம் செலுத்திஞல், சந்தேகத்துக்கு இடமின்றி ஆதிக்கத்துக்குள்ளான நாட்டின் எல்லா மக்களும் எதிர்த்து நிற்பதுதான் இயல்பான காரியம். ஆனல் துரதிர்ஷ்டவசமாக, கம்யூனிஸ்டுகளிடையே சொந்த நாட்டுப் பற்றைவிட, ருஷ்யா - சீனு முதலிய கம்யூனிஸ்ட் நாடுகளின் பற்றுதான் அதிகம் என்பதை அவர்கள் பல சந்தர்ப்பங்களிலும் காட்டிக் கொண்டிருக்கிருர்கள். இப்பொழுதும் அதே பண்பைத்தான் காட்டிக் கொண்டிருக்கிருர்கள். கம்யூனிஸ்ட் டாங்கே அவர்கள் சீனுவின் ஆதிக்கத்தை எதிர்த்துத் தமது அறுபதாவது வயது நிறைவு விழாவில் பேசியிருப்பது ஒரு சிறிது ஆறுதல் அளிக்கிறது.

## உப ஜனதிபதியின் சரியான பதில்

சீன கம்யூனிஸ்டுகள் இந்தியாவுடன் 'பஞ்ச சீலம்' பேசிக்கொண்டே இந்திய எல்லேயில் பெரும் பகுதியைக் கபளீகரம் செய்திருக்கின்றனர். 'இந்தி - சீனி பாய்பாய்' என்று சகோதர உறவு கொண்டாடுவதாகச் சொல்லிக் கொண்டே இந்தியப் பகுதியான லடாக்கில் நுழைந்து ஒரு பெருஞ் சாலேயே அமைத்திருக்கிருர்கள்! இதை யெல்லாம் பார்த்துக் கொண்டு இந்திய சர்க்கார் சும்மா இருந்தது பெரும் வியப்பாக இருக்கிறது!

இவ்வளவு போதாதென்று, இந்திய உப ஜனதிபதி டாக்டர் ராதாகிருஷ்ணனேச் சீனுவுக்கு வருமாறு அழைப்பு அனுப்பி யிருக்கிருர்கள். இந்தியர்களே எவ்வளவு அவமானப் படுத்தினுலும் சும்மா இருப்பார்கள் என்பது சீனுவின் எண்ணம் போலும். இல்லேயேல், ஒரு கையால் கொள்ளி வைத்துக் கொண்டு, இன்னெரு கையால் இந்திய உப ஜனதிபதி டாக்டர் ராதாகிருஷ்ணனே வரவேற்க அழைப்பு அனுப்புவார்களா? எனினும், டாக்டர் ராதாகிருஷ்ணன் அவர்கள் அழைப்பை மறுத்தது வரவேற்கவேண்டிய விஷயமாகும். இதனுல் சீனுவுக்கு ஏதாகிலும் நல்ல புத்தி ஏற்பட்டு விடுமென்று நாம் கருதவில்லே. உருப்படியான முறையில் சீனுவின் போக்கை எதிர்த்தால்தான் சீனு சுயபுத்தியை அடையும்.

## ராஜாஜிக்குப் பாராட்டு

பிரிட்டனில் கன்ஸர்வேடிவ் கட்சி ஜெயித்தது. இந்த வெற்றியை ராஜாஜி முன்னமேயே எதிர்பார்த்துப் பலரிடம் சொல்லி வந்தார். மக்கள் இடதுசாரிக் கொள்கைகளேக் கண்டு அலுத்துவிட்டனர் என்பதை உலகத்தின் நாடிபார்த்துச் சொன்னுர். கம்யூனிஸ்ட் நாடுகளிலேயே, இப்பொழுதெல்லாம் வலதுசாரிக் கொள்கைகளுக்கும் எண்ணங்களுக்கும் ஆதரவு பெருகி வருகிறது. இதனுடைய வெளிப்படையான உருவமே, ருஷ்யப் பிரதமர் குருஷேவ் அமெரிக்காவுக்குச் சென்றதும், அமெரிக்க ஜனதிபதி ஐஸன் ஹோவரைச் சந்தித்ததும்.

இன்னெரு சம்பவமும் நடந்தது. பிரிட்டனில் தொழிற்கட்சியில் நீண்ட நாட்களாக அங்கத்தினராக இருந்தவரும், தொழிற்கட்சி மந்திரி சபை அமைத்தபோது மந்திரியாக இருந்தவரும், தொழிற்கட்சி அங்கத்தினராகச் சமீபத்திய தேர்தலில் வெற்றி பெற்றவருமான லார்டு ஓக்மோர் தொழிற் கட்சியை விட்டு விலகி லிபரல் கட்சியில் சேர்ந்தார். அவர் அப்படிச் சேர்ந்ததற்குக் காரணம் தெரிவிக்கும்போது, ''சர்க்கார் தொழில்கள் நடத்தும் முறை பெருவாரியான மக்களுக்குப் பிடிக்கவில்லே. இந்த மக்களின் எண்ணிக்கை நாளுக்கு நாள் அதிகமாகி வருகிறது'' என்ருர்.

நம் நாட்டிலும் இதுதான் நிலே. சர்க்கார் மேற்கொண்டு நடத்தும் தொழிலும் வாணிபமும் மக்களுக்குப் பெரும் நஷ்டத்தையும் கஷ்டத்தையும்தான் விளேவித்திருக்கின்றன!

## கல்வித் திருப்பணி

பம்பாய் நகரின் முக்கிய பகுதியான அந்தேரியில் தமிழர்கள் கூட்டுறவு விடுதிச் சங்கம் ஒன்று 1951ல் ஆரம்பித்து, தங்களுக்கெனச் சுமார் நூறு வீடுகள் கட்டிக்

கொண்டு வசிக்கிறார்கள். எட்டு ஆண்டுகளுக்கு முன்னர் இவ்விடுதிகளிலுள்ள குழந்தைகளின் கல்விக்காகவும் இன்னும் மேற்கு பம்பாயிலும் அந்தேரியின் சுற்றுப்புறமுமுள்ள குழந்தைகளுக்காகவும் ஸ்ரீராம் க்ஷேம நல சங்கத்தால் ஆரம்பிக்கப்பட்ட ஒரு சிறு பள்ளிக்கூடம் இன்று உயர்நிலைப் பள்ளியாகத் திகழ்ந்து மிகச் சிறந்த முறையில் நடந்து வருகிறது. இந்தப் பள்ளிக்கூடத்துக்குத் தக்க கட்டடம் அமைக்கப் பொது மக்களின் ஆதரவாலும், பள்ளி நிர்வாகிகளின் முயற்சியினாலும் நிதி திரட்டப்பட்டு வருகிறது. இந்த உயர்நிலைப் பள்ளியின் கட்டட நிதிக்கு ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்கள் உதவிக் கச்சேரி செய்கிறார்கள். நவம்பர் மாதம் 8ம் தேதி பம்பாய் மரைன் லேனில் பிர்லா மாதுஸ்ரீ சபாகரில் நடைபெறுகிறது.

பம்பாய் வாழ் தமிழர்கள் இந்த அரிய சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக்கொண்டு, இன்னிசை விருந்தையும் அனுபவித்து, ஒரு சிறந்த பணிக்கு உதவியும் அளிப்பார்கள் என்று எதிர்பார்க்கிறோம்.

# ஆகாசவெடி!

''சீனமீது எல்லைச் சம்பவங்கள் குறித்து நேரு சர்க்கார் எடுக்கும் கொள்கைகளை பி. சோ. முழு மனத்துடன் பின்பற்றும்.''

—பி. சோ. தலைவர் ஒருவர்

**ஆனால், சீன விஷயத்தில் உறங்கி விழும் நேரு சர்க்கார் கொள்கையைப் பின்பற்ற பி. சோ. தலைவர் படுத்துறங்கத் தயாரா?**

✱

''இங்கு ஒரு வாக்குச் சாவடியில் நுழைந்து ஆத்திரமடைந்த ஜனங்கள் வாக்குச் சீட்டுக்களைக் கிழித்தெறிந்துவிட்டு ஓடினர்.''

—அமிர்தசரஸில்

**யாருடைய வாக்கைக் கேட்டு இப்படி நடந்து கொண்டார்களோ?**

✱

''பல்லடம் பஸ் ஸ்டாண்டில் பேப்பர் படித்துக்கொண்டிருந்த ஒரு பேர்வழியைப் போலீஸார் சோதித்தபோது, காங்கிரஸ் எம்.பி. ஒருவரின் பர்ஸ் அவனிடமிருந்து கிடைத்தது.''

—சேலம் செய்தி

**இந்தச் செய்தி வெளியான பிறகல்லவா அவன் பேப்பர் படித்துக் கொண்டிருக்க வேண்டும்!**

''வெங்காயக் குழம்பில் அதிகமாகத் தண்ணீர் கலந்த ஹோட்டல் முதலாளி மீது வழக்கு.''

—பாகிஸ்தான் செய்தி

**உடனே அதை 'வெங்காய ரசம்' என்று அவர் சாதிக்கவில்லையா?**

✱

''சந்திரனின் பின்புறம் ஒரு பூசணிக்காயைப் போலிருக்கிறது.''

—ருஷ்ய ராக்கெட் விஞ்ஞானி

**''சந்திரனில் பூசணிக்காயைக் கண்ட அவரால் சாம்பாரில் ஒரு பூசணித் துண்டைக் காட்ட முடியுமா?'' என்று இரைகிறார் ஹோட்டலில் சாப்பிடும் ஒருவர்.**

✱

''ரயில் வண்டி முதல் வகுப்பில் டிக்கெட் வாங்காமல் தூங்கிக்கொண்டு வந்த பல பிரயாணிகள் மீது வழக்கு.''

—அலகாபாத் செய்தி

**''டிக்கெட் வாங்காததை யாராவது நினைப்பூட்டியிருந்தால் நாங்கள் தூங்கியிருப்போமா?'' என்று அவர்கள் இனி சொல்லிக் கொள்ளலாம்!**

## சென்னை மாவட்ட சுதந்திரக் கட்சி மகாநாடு

சென்னை நகர மக்கள் தீபாவளித் திருநாளன்று சுதந்திரக் கட்சியின் மகாநாட்டில் கலந்துகொண்டு குதூகலித்தார்கள். 1. பிரார்த்தனை கீதம். 2. திரு வி. பி. மேனன் பேசுகிறார். 3. மகாநாட்டு அக்கிராசனர் திரு எம். ஆர். மஸானி. 4. பிரதிநிதிகளுக்கு எளிய விருந்து. 5. மினர்வா கல்லூரி பிரின்ஸ்பால் திரு ஏ. என். பரசுராம் சொற்பொழிவாற்றுகிறார். 6. சித்ரா நாராயணசாமி ஒரு தீர்மானத்தை அலசிப் பேசுகிறார். 7. கூடியிருந்த பிரதிநிதிகளின் ஒரு பகுதி. 8. தலைவர் மஸானியிடம் ஒரு வாலிபர் அறிமுகம்.

1

2

3

5

4

6

7














9. ராஜாஜியின் உற்சாகப் பேருரை. 10. டாக்டர் சந்தோஷம் வரவேற்புரை. 11. பேராசிரியர் திரு என். ஜி. ரங்காவின் உரை. 12, 16. தீர்மானங்களுக்கு வோட்டளித்து ஏகமனதாக நிறைவேற்றி வைக்கும் பிரதிநிதிகள். 13. திரு கே. எஸ். ராமஸ்வாமி சாஸ்திரியார் 14. பேராசிரியர் திரு எம். ரத்தினசாமி. 15. திரு வீரஜின்னு செட்டியார் ஆகியோர் சொற்பொழிவாற்றுகிறார்கள்.









# சந்தோஷ மகாநாடு

'கொக்கி'

இம் முறை சென்னை நகர வாசிகள் தீபாவளிப் பண்டிகையை மிக உபயோகமான முறையில் கொண்டாடினார்கள்.

சாதாரணமாக, தீபாவளித் திருநாளில் புது ஆடைகள் அணிந்து பட்டாசு வெடிகளை முழக்கிவிட்டு, நண்பர்கள் உறவினர்களுடன் விருந்துகளில் ஈடுபடுவது வழக்கம். ஆனால், இந்தத் தடவை, நண்பர்கள் உறவினர்களுடன் சுதந்திரக் கட்சியின் சென்னை மாவட்ட மகாநாட்டுக்குச் சென்று அங்கு கருத்துக்கு அளிக்கப்பட்ட விருந்தை ஏற்று சந்தோஷப் படலானார்கள். இம் மகாநாடு சென்டிரல் ஸ்டேஷனுக்கு அருகேயுள்ள எஸ். ஐ. ஏ. ஏ. திடலில் அமைத்திருந்த பிரும்மாண்டமான பந்தலில் நடந்தேறியது.

சென்னை நகரில் சுதந்திரக் கட்சி அமைந்து அங்கத்தினர்கள் சேர்க்கும் பணி தொடங்கி ஒன்றரை மாதங்கள்தான் ஆகின்றன. இதற்குள் இம் மகாநாட்டுக்கு டெலிகேட்டுகளாக - பிரதிநிதிகளாக—மூவாயிரம் பேருக்குமேல் கலந்து கொண்டார்களெனில் சுதந்திரக் கட்சி எவ்வளவு துரிதமாக வளர்ந்து வருகிறதென்பதை ஊகித்துக் கொள்ளலாம். மூவாயிரத்துக்கு மேற்பட்ட பிரதிநிதிகள் மட்டுமின்றி வரவேற்புக் கமிட்டி அங்கத்தினர்களாக ஏராளமானவர்களும் கலந்து கொண்டார்கள். எட்டணா கட்டணம் செலுத்திக்கொண்டு பார்வையாளர்களாகவும் ஆயிரக்கணக்கானவர்கள், கொட்டகை நிரம்பி வழியக் கூடியிருந்தனர்.

சென்னையில் இதுவரை எந்த மகாநாட்டுக்கும் புது ஆடைகள் அணிந்து மக்கள் கூடியதில்லை. இந்த மகாநாட்டில் கண்ணுக்கெட்டிய தூரம் வரை புது உடைகள் தோற்றமளித்தன. சுதந்திரக் கட்சி மூலம் அரசியலில் புதிய சகாப்தமே பிறந்து விட்டதற்கு இது அடையாளமாக விளங்கியது.

மேடையில் சென்னை நகர சுதந்திரக் கட்சி தலைவர்கள்பலரும் பிரசன்னமாயிருந்தார்கள். ராஜாஜி, பேராசிரியர் என். ஜி. ரங்கா, திரு எம். ஆர். மஸானி, திரு வி. பி. மேனன் முதலியவர்கள் முன் வரிசையில் அமர்ந்திருந்தனர். உழைப்பாளிகள், நெசவாளர்கள், வர்த்தகர்கள், தொழில் புரிந்து வாழ்க்கை நடத்தும் மத்தியதர வகுப்பினர், படிப்பாளிகள், டாக்டர்கள், பட்டதாரிகள், பாட்டாளிகள் ஆகிய பல சாராரும் சபையில் காணப்பட்டனர். எல்லோருடைய கவனத்தையும் கவர்ந்த மற்றொரு காட்சி: மேடையில் வீற்றிருந்த தலைவர்கள் இரண்டொருவரைத் தவிர மகாநாட்டில் கலந்துகொண்ட அவ்வளவு பேரும் வாலிபர்கள்.

கருத்துள்ள இளைஞர் சமூகம் சுதந்திரக் கட்சிக்கு ஆர்வமாக ஆதரவு அளிக்கத் தொடங்கிவிட்டதென்பதற்கு, இம் மகாநாடு ஒரு சான்றாக விளங்கிற்று.

இறை வணக்கத்துடன் மகாநாடு ஆரம்பமானதும், டாக்டர் எம். சந்தோஷம் அவர்கள், தலைவர்களையும் பிரதிநிதிகளையும் வரவேற்றுச் சொற்பொழிவாற்றினார்.

காங்கிரஸின் தகிடுதத்தக் கொள்கைகள் இனி நடக்காது என்று எச்சரித்தார். சென்ற பன்னிரண்டு வருஷகால ஆட்சியில் தேசப் பொருளாதாரத்தை அடியோடு சீர்குலைத்து நாட்டு மக்களை வறுமையிலும், வேலையில்லாத் திண்டாட்டத்திலும் ஆழ்த்தி வைத்துக் கொடுமை புரியும் காங்கிரஸ் பதவிப் பித்தர்களுக்குச் சூடுகள் பல போட்டார். தமது உரையில், காங்கிரஸின் இன்றைய நிலைமையை அவர் விளக்கும்போது, நாட்டு மக்கள் விழிப்படைந்து விட்டபடியால் காங்கிரஸ் கடையைக் கட்டவேண்டும் என்று எச்சரித்தார். காங்கிரஸ் இப்போதெல்லாம் போடும் கடைசி நேர கர்ஜனையின் காரணங்களை அவர், தக்க உவமைகளுடனும், புள்ளி விவரங்களுடனும் விளக்கினார்.

வரவேற்பு உரைக்குப்பின், சுதந்திரக் கட்சித் தலைவர் ஸ்ரீ ரங்கா அவர்கள், 'காங்கிரஸ் வண்டி' மக்களை எப்படித் திக்குத் தெரியாத ஒரு வனாந்தரத்திலே கொண்டுபோய் விட்டிருக்கிறதென்பதை, பொருளாதார, அரசியல், சர்வதேச அடிப்படையில் விளக்கினார். நாட்டில் நாணய மதிப்பு குறைந்து, நோட்டுப் பெருக்கம் அதிகரித்துக் கொண்டுபோகும் அபாயத்தை விளக்கும்போது, ''ரூபாய் மதிப்பு அப்படித்தான் குறையும். இதைத் தவிர்க்க முடியாது என்று தேசத்தின் பிரதமர் பதவி வகிக்கும் நேரு கூறுகிறாரே?'' என்று இடித்துரைத்தார். பிரிட்டிஷார் இந்தியாவை ஆண்டகாலத்தில் பண மதிப்பு குறைந்தால் இந்திய மக்கள் மனத்தில் தங்களைப் பற்றித் தாழ்ந்த அபிப்பிராயம் ஏற்பட்டுவிடுமென்று, நாணயங்களில் வெள்ளியின் அளவைக் குறைக்காமலிருந்து வந்தார்கள். பவுன் விலை ஏறாமல் கவனித்துக் கொண்டார்கள். இப்போது காங்கிரஸ் ஆட்சியிலோ, நாணயங்களில் வெள்ளி அநேகமாக மறைந்துவிட்டதென்றே கூறலாம். நோட்டு மதிப்பு தாழ்ந்து கொண்டே போகிறது. இந்த நிலைமைதான் சோஷலிஸம் என்கிறார்கள். இந்தப் பொருளாதார அபாயத்திலிருந்து மீள ஒரே ஒரு வழிதான் உண்டு. அதுதான் சுதந்திரக் கட்சியின் வழி!'' என்று பலத்த கரகோஷத்தினிடையே உரைத்தார்.

அடுத்தபடியாகப் பேசிய மகாநாட்டுத் தலைவர் திரு எம். ஆர். மஸானி பிரிட்டிஷ் மக்கள் இந்தத் தேர்தலில் தொழிற்கட்சியைத் தோற்கடித்ததற்குக் காரணமே, சோஷலிஸத்தின்மீது வெறுப்படைந்ததால்தான் என்று கூறினார்.

மேற்கு ஜெர்மனியிலுள்ள சோஷலிஸ சார்பு கொண்ட ''ஸோஷல் டெமோக்ராட்'' கட்சி சமீபத்தில் தனது கொள்கைகளைத் திருத்தியமைத்து ஒரு பிரகடனமும் வெளியிட்டிருக்கிறது. அந்தப் பிரகடனத்தைச் சபையோருக்கு ஸ்ரீ மஸானி படித்து, சுதந்திரக் கட்சியின் பல கொள்கைகளை ஜெர்மானியக் கட்சி, எழுத்துக்கு எழுத்து மாறுமலே அங்கீகரித்திருப்பதை எடுத்துக்காட்டி எல்லோரையும் பிரமிக்க வைத்தார்.

மேற்கு ஜெர்மனி போன்ற நாடுகளே ''சோஷலிஸம் கவைக்குதவாது, தனியார் முயற்சியே தேச வளத்தைப் பெருக்கும்'' என்று கருதும்போது, இங்குள்ள காங்கிரஸ்காரர்கள் கண்மூடித்தனமாக அதைப் பொது மக்கள்மீது திணிக்கமுயல்வதைக்கண்டித்தார்.

ஸ்ரீ மஸானிக்குப் பிறகு பேசிய திரு வி. பி. மேனன் அவர்கள், காங்கிரஸிலும், அதன் நிர்வாகத்திலும் மலிந்துவிட்ட ஊழல்களை விவரித்து, லஞ்சக் குற்றச் சாட்டுகளினின்று பல மந்திரிகளும் தப்பவில்லை எனினும் காங்கிரஸின் பெயர் கெட்டு விடுமென்று அவை மூடி மறைக்கப்பட்டிருக்கின்றன என்று இடிமுழக்கம் செய்தபோது, ''வெட்கம்! வெட்கம்!'' என்று சபையோர் எதிரொலி செய்தனர்.

எல்லோருக்கும் கடைசியாக ராஜாஜி அவர்கள் பேசினார்கள். ''திரு மஸானி சோஷலிஸத்தை எதிர்க்கிறார் என்றால் அது சாதாரணமான செயலல்ல. ஏனெனில், சோஷலிஸத்தைக் கொண்டு வரவேண்டுமென்பதில் முதன்மையாய் விளங்கி, காந்திமகானுடனேயே தர்க்கவாதம் செய்து காங்கிரஸிலேயே சோஷலிஸ்டுகள் என்று ஒரு கட்சியைத் தோற்றுவித்தவர் மஸானி. அவரே இப்போது சோஷலிஸம் உதவாது என்று கூறுகிறாரென்றால், இவரைவிட அதிகாரத்துடன் பேச வேறு யாருக்கு முடியும்?'' என்று வினவினார்கள். சர்க்காருக்குக் குறைந்த அதிகாரமும், மக்களுக்கு நிறைந்த உரிமைகளும் பெற்றுத் தருவதே சுதந்திரக்கட்சியின் குறிக்கோள் என்றுரைத்தார்கள்.

ஜனங்களுக்கு அதிக உரிமைகளை அளிக்கலாமா என்று சந்தேகப்படக்கூடாது. ஜனங்களை நம்பித்தான் ஆகவேண்டும். ஜனங்களை நம்பாத கட்சிகள் நாட்டுக்கே கேடு என்று விளக்கினார்கள். இந்த மகாநாட்டுக்கு, வீட்டில் பண்டிகை, விருந்து முதலியவைகளைக்கூட மறந்து திரளாக வந்திருந்த சபையினரைக் காணத் தமக்குப் பெரிதும் பூரிப்பு ஏற்படுகிறதென்பதை உள்ளன்பு ததும்ப அவர் கூறிய போது, பிரதிநிதிகளும் மற்றும் கூடியிருந்தவர்களும் சந்தோஷ ஆரவாரம் செய்து ''ராஜாஜி வாழ்க!'' என்று வாழ்த்தொலி எழுப்பினார்கள். சென்னைநகர மக்கள் இன்னும் அதிகமாகக் கட்சியில் சேருமாறு ராஜாஜி முடிவாக கேட்டுக் கொண்டார். இத்துடன் முற்பகல் நடவடிக்கைகள் முடிவடைந்தன. பிரதிநிதிகள், பார்வையாளர்கள் முதலியவர்களுக்கு மாநாட்டு நிர்வாகிகள் சாப்பாட்டுக்கு ஏற்பாடுகள் செய்திருந்தார்கள். ராஜாஜி, ரங்கா முதலிய தலைவர்கள், சாப்பாட்டுப் பந்தலுக்குச் சென்று அங்கு பிரதிநிதிகள், தொண்டர்கள் முதலியவர்களுடன் அமர்ந்து எளிய முறையில் தயாரித்த உணவை விருந்தென சாப்பிட்ட காட்சி, உருக்கமாயிருந்தது.

இரண்டரை மணிக்கு மீண்டும் கூடிய பிற்பகல் மகாநாடு, கட்சி சம்பந்தப்பட்ட அலுவல்களைக் கவனித்தது. பல தீர்மானங்கள் நிறைவேறின. அவற்றில் கைத்தறியாளர் துயர் போக்க வழிகூறும் தீர்மானம், எல்லையில் தொல்லை தரும் சீனைப்பற்றிய தீர்மானம் போன்றவற்றை முக்கியமாகக் குறிப்பிடலாம். மகாநாட்டு அலுவல்கள் முடிந்தபின் மாலை ஆறு மணிக்கு அங்கேயே பொதுக்கூட்டமும் நடைபெற்றது. பொதுக் கூட்டத்தின்போது ஜனக்கூட்டம் இன்னும் திரளாகக் கூடிவிட்டது. தலைவர்கள் அனைவரும் பேசினார்கள். காலை முதல் இரவு ஏழுமணி வரை தலைவர்கள் அங்கேயே இருந்து மகாநாட்டு நடவடிக்கைகளைக் கவனித்ததுபோல், வந்திருந்த கூட்டத்தினரும் அன்று முழுவதும் விட்டுச் சிந்தனையின்றி அமர்ந்திருந்தது குறிப்பிடத்தக்கது.

எவ்வித குறைவுமின்றி மகாநாடு நடந்தேற வரவேற்புக் கமிட்டித் தலைவர் டாக்டர் சந்தோஷம் அவர்களுடன் ஊழியர்களும் பாடுபட்டனர். மகாநாடும் சந்தோஷ மகாநாடாக விளங்கிற்று!

# தருமம் தலை காக்கும்

"ஈந்தவர் அல்லது இருந்தது யாரே" என்றார் கம்பர். செல்வம் படைத்தவர் சமூகத்துக்குத் தர்மகர்த்தாக்கள்; தமக்கென்று மட்டும் இன்றி மற்றவருக்குக் கொடுத்து வாழ்வதே அற வாழ்வு என்பது நம் நாட்டின் பண்டைக் கொள்கை. ஆகவேதான் தருமம் என்ற சொல்லும் தானம் என்ற சொல்லும் ஒன்றாக உபயோகிக்கப்படலாயின. "தா" என்று கேட்பவருக்கு "தருமம் செய்" என்று சொல்வது நம் நாட்டு வழக்கம். இருப்பவர் இல்லாதவருக்கு உதவித்தான் சமூகம் காப்பாற்றப்பட்டு வந்திருக்கிறது. கொடுப்பதினால் நன்மை ஏழைக்கு மட்டும் அல்ல; கொடுப்பவனுக்குத்தான் மேன்மை என்று நமது சாத்திரங்கள் கூறுகின்றன. நான், என்னுடையது என்பது முத்தி அடைவதற்கே இடையூறன்றோ?

பாரத நாட்டில், வியாபாரத் துறையில் வாழ்வு நடத்தும் சில வகுப்பினர் வருமானத்தில் ஒரு பங்கைத் தருமத்துக்கென்று ஒதுக்கிவைப்பதை நாம் அறிவோம். நாடெங்கும் கோயில்களும் குளங்களும் இருக்கின்றன. எத்தனையோ சத்திரங்கள், சாவடிகள், பசுமடங்கள், பள்ளிகள். இவை எல்லாம் சமூகத் தொண்டல்லவா? இவை எல்லாம் அரசாங்கம் "சமூகத் திட்டங்கள்" போட்டுத்தான் உண்டாயினவா?

ஆனால் தருமம் செய்வதற்குத் தனம் வேண்டும். தனக்குப் போக மிஞ்சினால் தான் தருமம் செய்ய முடியும். மீந்ததை எல்லாம் வரி என்று அரசாங்கம் அபகரித்துக் கொண்டால் தனி மனிதன் எப்படி தான தர்மங்கள் செய்வது? இல்லை, இன்று பாரத நாட்டில் நடக்கும் தான தர்மங்களையெல்லாம் அரசாங்கம் எடுத்து நடத்த முடியுமா? நமது கிராமங்களில் தொழில் இல்லாதவருக்கும் பட்டினி என்பது கிடையாது. அன்னமிடாதவர் நம் நாட்டிலேயே இல்லை. இது பணக்காரன் ஏழைக்குச் செய்யும் உதவி என்று எண்ணுவது தவறு. ஒருவருக் கொருவர் உதவி வாழும் பண்பாடென்று நாம் அறிய வேண்டும். தாம் உணவு அருந்தும் வேளையில் வாயிலில் சென்று அதிதிகள் யாராவது இருக்கின்றனரா என்று பார்த்து, வந்தவருக்கு உணவளிப்பதும் நமது கிராமங்களில் வழக்கம்.

ஒருவரை ஒருவர் காப்பாற்றி வருவர், இருப்பவர் தமது தனத்தை மற்றவருக்கு உதவுவர் என்று சமூகத்தை நம்பி அரசாங்கம் நடத்துவது ஒரு வழி. இவ்வழி தருமத்தை வளர்க்கும். இவ்வழிதான் பாரதப் பண்பாட்டின் அடிப்படைக் கொள்கை. ஒருவன் மட்டும் பணக்காரனாக இருப்பதா, இதென்ன அநியாயம், அதை அரசாங்கம் பறித்து ஏழைகளுக்கென்று சமூகத் திட்டங்கள் போடவேண்டும் என்பது மற்றொரு வழி. இவ்வழியைத்தான் நமது அரசாங்கம் இப்பொழுது அமுல் செய்து வருகிறது. அதனால் என்ன பயன்? நாட்டிலும் நகரத்திலும் ஒற்றுமையோடு வாழ்ந்தவர் 'நான் வேறு நீ வேறு' என்று பிரிந்து போய்ப் போராடுகின்றனர். திட்டங்களை நடத்துவதற்கென்று ஆயிரக்கணக்கான அதிகாரிகள் கிளம்பியிருக்கின்றனர். "ஒருவரையும் நம்பக் கூடாது, ஏமாற்றி விடுவார்கள்" என்ற கொள்கை முன்னேறியிருக்கிறது. "அவர்களுக்குத்தான் அரசாங்கம் எல்லாம் செய்கிறதே. நான் வேறு என்ன செய்ய வேண்டும்" என்று சமூகத்தில் அவரவர்கள் தனிவாழ்வு நடத்துகின்றனர். பல வரித் திட்டங்கள் போட்டு வருமானத்துக்கு வழியையும் அரசாங்கம் அடைத்து வருகிறது. ஜனத் தொகை அதிகமான நாடுகளில் ஒருவரையொருவர் அண்டித்தான் சமூகம் நிலைக்க வேண்டும். இந்தியாவில் நடைபெறும் தான தருமங்களை அரசாங்கம் ஏற்று நடத்த முடியாது; இல்லையேல், அனைவருக்கும் தொழிலளித்து ஊதியம் கொடுக்கவும் முடியாது. இதை அறியாது, நிலமிருப்பவரிடமிருந்து நிலத்தைப் பறிப்பதும் வரி வசூலித்து வருமானத்தை அழிப்பதும் ஏழைகளுக்கு உதவும் என்று எண்ணுவது பேதைமை. இத்தகைய வழிகள் ஜனங்களுக்கு இடையே விரோதத்தை அதிகரித்து, சமூகத்தைச் சீரழிக்குமேயன்றி, நாற்பது கோடி மக்களுக்கு நன்மை நல்காது.

இதை அறிந்துதான் காந்தியடிகள் "பணம் படைத்தவர்கள் தங்களைத் தர்மகர்த்தா என்று எண்ணி மற்றவர்களுக்கு ஈன்று வாழவேண்டும்" என்று கூறினார்.

"நீ நன்மை செய்ய மாட்டாய். கொடு வரியை. நாங்கள் செய்வோம்" என்று கூறும் கொள்கை சமூகத்தை நம்பாத தப்பு வழி. சந்தேகித்து வாழ்வதில் சுகம் இல்லை. ஆகவே சமூகத்தை நம்பி ஒருவரோடு ஒருவர் இணைந்து வாழச் செய்வதே சுதந்திரக் கட்சியின் கொள்கை.










பெரம்பூர் ஏரிக்கரை மைதானத்தில் சென்ற வாரம் சுதந்திரக் கட்சிக் கூட்டம் சிறப்பாக நடைபெற்றது. ஏராளமான தொழிலாளர்களும், நடுத்தர மக்களும் ஆர்வத்தோடு கலந்து கொண்டனர். திரு தங்கவேலு முதலியார் தலைமை வகித்தார். டாக்டர் சந்தோஷம், திரு ஆதிகேசவலு பேசினர். 1. திரு தங்கவேலு பேசுகிறார். 2. கூட்டத்தின் ஒரு பகுதி. 3. ராஜாஜி பேசுகிறார்.







திருவல்லிக்கேணி சூரப்ப முதலித் தெரு பெரும்பாலும் முஸ்லிம் நெசவுத் தொழிலாளர்கள் குடியிருக்கும் பகுதி. அங்கு சுதந்திரக் கட்சி கூட்டம் நடைபெற்றது. 1. ராஜாஜி பேசுகிறார். 2. திரு ஏ.எஸ்.எம். அலி தலைமை வகிக்கிறார். 3. திரு காதர் நகைச்சுவை ததும்பப் பேசுகிறார். 4. தெரு பூராவும் அடைத்து நின்று கேட்ட கூட்டத்தின் ஒரு பகுதி.









தாந்தன்

சமீப காலத்தில் வெளிவந்த தமிழ்ப் படங்களெல்லாம் அனேகமாகக் கதைப் போக்கில் புதுமையில்லாதவை. மீண்டும் மீண்டும் பார்த்த சம்பவங்களையே பார்த்து, கேட்ட வசனங்களையே கேட்டுப் படம் பார்ப்பவர்கள் அலுப்படைந்து விட்டார்கள். இதில், அதிசயம் என்ன இருக்கிறது, பழைய விஷயம் தானே என்று நினைக்கலாம். ஆனால் அதிசயம் இருக்கிறது. நம் படாதிபதிகளில் ஒருவர் கூட இன்னும் அலுப்படைய வில்லை. அது அதிசயம் இல்லையா ?

ஒரு படத்தில் கதாநாயகன் கார் விபத்தில் சிக்கிக் கொண்டால் அந்த விபத்து சுமார் பத்துப் படங்களிலாவது தொடர்கதை மாதிரி தொடர்ந்து வரும் அதிசயத்தை நம் தமிழ்ப் படங்களில் மட்டும் தான் பார்க்க முடியும்! இந்த நிகழ்ச்சியை எந்தப் படத்தில் பார்த்தோம், இந்த வசனத்தை ஏதோ ஒரு படத்தில் கேட்டோமே, இதே காட்சி ஜோடனையை எங்கேயோ பார்த்தோமே என்று தமிழ்ப் படம் பார்க்கும்போது ஒரே குழப்பமாயிருப்பது வழக்கமாகி விட்டது. அதுவும் என்னைப் போல் விடாமல் படம் பார்ப்பவனுக்கு இந்தக் குழப்பம் ஒரு தண்டனை மாதிரி ஆகிவிடுகிறது!

இந்தமாதிரி குழப்பத்தில் சிக்கி வேதனைப் பட்டுக்கொண்டிருக்கும் தருணத்தில் நாராயணன் கம்பெனியின் தயாரிப்பான "கண் திறந்தது" என்ற படத்தைப் பார்க்க நேர்ந்தது. உண்மையிலேயே நம் படாதிபதிகளின் கண்கள் திறந்து கொள்ள ஆரம்பித்து விட்டனவோ என்று எண்ணத் தோன்றுகிறது.

பிரசித்தி பெற்ற நட்சத்திரங்கள் இல்லாமல் ஒரு படத்தைத் தயாரிக்கத் துணிந்தது மிகவும் பாராட்டப்பட வேண்டிய விஷயம். நந்தவனத்தையும், பொய் நிலவையும், புளித்துப் போன காதல் காட்சிகளையும் மட்டும் நம்பிப் படம் தயாரிக்காமல், மனித உணர்ச்சிகளையும், இதயக் கொந்தளிப்புகளையும் மட்டும் ஆதாரங்களாகக் கொண்டு நாராயணன் கம்பெனியார் இந்தப் படத்தைத் தயாரித்திருக்கின்றனர். இந்தப் படத்துக்கு முன்பு வெளியான "இல்லறமே நல்லறம்" என்னும் நாராயணன் கம்பெனியின் படத்தைப் பார்த்துவிட்டு 'இது என்ன படம்?' என்று வேதனைப்பட்டேன். அந்த வேதனை "கண் திறந்தது" என்ற இந்தப் படத்தைப் பார்த்ததும் தீர்ந்துபோய் விட்டது.

புகழ் பெற்ற நடிகர்கள் என்று சொல்லுவதற்கு இப்படத்தில் எஸ். வி. சகஸ்ரநாமத்தையும் மைனாவதியையும் தவிர என்.எஸ்.கே. மதுரம் மட்டும்தான் இருக்கிறார்.

தாயை இழந்த முத்து தந்தை கருப்பையாவின் ஆதரவில் வளர்கிறான். அவனுக்குப் படிப்பில் ஆர்வம் இல்லை. கருப்பையா சிங்கம்பட்டி ஜமீன்தாரின் விசுவாசமுள்ள வேலைக்காரன். புது ஜமீன்தார் பூபதி உண்மையான ஜமீன் உரிமையாளனான சந்திரனைச் சின்னஞ் சிறு வயதிலேயே வெளியேற்றி விடுகிறான். நோயுற்றுக் கிடந்த பெரிய ஜமீன்தார் தம் மகன் சந்திரனுக்கே ஜமீன் உரிமையை உயில் எழுதி உண்மை ஊழியன் மாணிக்கத்தினிடம் கொடுத்து விட்டு இறந்து விடுகிறார். (அதுவரையில் மந்த கதியில்

சென்று கொண்டிருந்த படம் அதற்குப் பிறகு உயிர் பெற்று விடுகிறது!)

மாணிக்கத்தின் மகள் வள்ளியை முத்து தன் அக்காவாக மதிக்கிறான். பெரிய ஜமீன்தாரின் உயில் விஷயத்தை முத்து தன் தந்தை கருப்பையாவிடம் சொல்ல, அவன் பூபதியிடம் சொல்ல, பூபதி அந்த உயிலைப் பெற மாணிக்கத்தைத் துன்புறுத்துகிறான்.

ஜமீன்தாரின் வேலைக்காரனாக வரும் எஸ். வி. சகஸ்ரநாமம் தாம் ஒரு சிறந்த நடிகர் என்பதை நிரூபிக்கிறார். பகுத்தறிவும் பண்பாடும் இல்லாத முரட்டு மனிதன் பாத்திரம் கருப்பையா. ஜமீன்தார் பூபதியிடம் அளவு கடந்த விசுவாசத்தோடு இருந்து வந்த அவன், உயிலுக்காகத் தன் பிள்ளை முத்துவைப் பூபதி கொடுமைப் படுத்தவே, அவனைக் கொன்று விடுகிறான். அந்தக் கட்டத்தில் சகஸ்ரநாமம் தம் சிறந்த நடிப்பினால் எல்லோரையும் உருக்கி விடுகிறார்.

* * *

சிறுவன் முத்துதான் படத்தின் முக்கியமான பாத்திரம். ஆரம்பத்தில் எதிலும் அக்கறையும் பொறுப்பும் இல்லாதவனாயிருந்த முத்து பின்னால் மிக மிக நல்லவனாகி விடுகிறான். மரணப் படுக்கையில் கிடந்த மாணிக்கத்துக்கு மருந்து வாங்கி வரச் சென்ற முத்து, அந்தப் பணத்தைத் தேர்த் திருவிழாவில் செலவிட்டு விடுகிறான். மாணிக்கம் இறந்து விடுகிறான். அநாதையாகி விட்ட வள்ளி கதறுகிறாள். முத்துவின் மனம் ஒளி பெறுகிறது. பரிவும், பாசமும், பண்பும் அவன் மனத்தில் தழைக்கின்றன.

சினிமாவுக்குப் புது முகமான மாஸ்டர் வியாஸ் முத்துவாக வந்து, கண்ணீரில் கரைந்து அற்புதமாக நடிக்கிறான். இந்தச் சிறுவனைப் படவுலகத்துக்கு அறிமுகம் செய்து வைத்தது பாராட்டுக்குரியது.

மைனாவதி வள்ளியின் பாகத்தை ஏற்று வீட்டை விட்டு வெளியேறி, கண்ணீர் விட்டு, காதலித்து, கடையில் உண்மை ஜமீன்தார் சந்திரனைக் கல்யாணம் செய்து கொள்கிறார்.

மருதாயியாக வந்து வள்ளிக்கும் முத்துவுக்கும் ஆதரவளிக்கும் என். எஸ். கே. மதுரம் தம்முடைய இயல்பான நடிப்பினால் படத்துக்கும் ஆதரவளிக்கிறார்.

பூபதியின் காதலி ரமாமணியாக வரும் சூரியகலா இந்தப் படத்தில் தேவையில்லாத பாத்திரம்தான் என்றாலும் பூபதியின் கொலைக்குச் சாட்சியாகப் பயன்படுகிறார்.

பூபதியாக டி. ஆர். நடராஜன் வந்து நன்றாக நடிக்கிறார். மாணிக்கமாக வரும் பி. எஸ். வெங்கடாசலத்தின் நடிப்பு அருமையாயிருக்கிறது. ராமநாதன் சந்திரனாக வருகிறார். நடிப்பு பிரமாதம் என்று கூற முடியா தென்றாலும், குறைவாகச் சொல்லுவதற்கில்லை.

படத்தின் கவர்ச்சிக்காக, சாயி, சுப்புலக்ஷ்மி நடனமும், பலதரப்பட்ட கிராமிய நடனங்களும் சேர்க்கப்பட்டிருந்தாலும் அலுப்பாய்த்தான் இருக்கிறது.

வசனம் கரடு முரடாயிராமல் நன்றாயிருக்கிறது. பாத்திரங்களுக்கு ஏற்றபடியும் இருக்கிறது. கே. வி. சீனிவாசன் கதை, வசனம், டைரக்ஷன் ஆகிய பெரிய பொறுப்புக்களை ஏற்று நன்கு நிறைவேற்றி யிருக்கிறார்.

ஜமீன்தார் சம்பந்தப்பட்ட கதையானாலும் இந்தப் படத்தில் பிரமாதமான காட்சி ஜோடனைகளும், மாடகூடங்களும் இல்லை. எல்லாம் அனேகமாக இயற்கைக் காட்சிகள்தான். ஏழை, எளியவர்கள் வாழும் குப்பத்தின் தோற்றம் தத்ரூபமாய்க் காட்டப்படுகிறது.

"கண் திறந்தது" படத்தில் மொத்தம் எட்டுப் பாடல்கள். மெட்டோ, பாட்டோ அப்படிப் பிரமாதமாக—அதாவது மறுமுறை கேட்க ஆசைப்படும் விதத்தில்—அமைந்து விட்டதாகச் சொல்ல முடியாது. சிறுவனின் உள்ளப் போராட்டத்தை உருக்கமாகச் சித்திரிக்கும் கதையானதால், சதா உள்ளத்தில் ஒலிக்கும் கருத்துள்ள பாட்டாக இரண்டொரு பாடலாவது அமைந்திருந்தால் மனசுக்கு மிகவும் மகிழ்ச்சியா யிருந்திருக்கும்.



# ஆளும் கட்சிக்குத் தலைமைப் பதவி

—கொழும்பு, அக்டோபர் 27உ.

இலங்கை அரசியல் இப்பொழுது இருக்கும் நிலைமையில் எப்பொழுது என்ன நடந்தாலும் நாம் ஆச்சரியப்படுவதற்கில்லை. முன்னாள் பிரதமர் பண்டாரநாயகா காலமாகி, புதிய பிரதமராகத் திரு விஜயானந்த தஹநாயகா பதவி ஏற்ற ஒரு மாத காலத்துக்குள்ளாக அவருடைய மந்திரி சபையின் ஆயுள் மயிரிழையில் தொங்கிக் கொண்டிருக்கிறது. மந்திரிகளுக்கிடையிலேயே பல விஷயங்களைக் குறித்தும் புகைச்சல் இருப்பதைத் தெளிவாகக் காண முடிகிறது. உதாரணமாக நிதி மந்திரியின் ஆலோசனையின் பேரில் பிரதமர் தஹநாயகா இரண்டு வாரங்களுக்கு முன்னால் பத்திரிகைகளுக்கு வாய்ப்பூட்டுச் சட்டத்தைப் போட்டார். ஆனால் ஏழு மந்திரிகள் கடுமையாக ஆட்சேபித்ததின் பேரில் பிரதமர் அவசரப்பட்டுப் போட்ட சட்டத்தை அவசரமாகவே வாபஸ் வாங்கிக் கொள்ள வேண்டியதாகி விட்டது. ஆளும் கட்சியான ஸ்ரீ லங்கா சுதந்திரக் கட்சிக்கு, பிரதம மந்திரிப் பதவியை வகிப்பவரே தலைவராக இருப்பதென்பது இப்பொழுது அசாத்தியமாகி வருகிறது. யு. என். பி. என்ற ஐக்கிய தேசியக் கட்சி சுமார் பத்து வருட காலம் ஆளும் கட்சியாக இருந்த பொழுது அதன் தலைவரே பிரதமராக இருந்தார். அல்லது பிரதமர் பதவியை வகிப்பவர் அக் கட்சியின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். காலஞ்சென்ற திரு டி. எஸ். சேனநாயகா, ஸர் ஜான் கொத்தலாவலை ஆகியவர்களெல்லாம் ஆளும் கட்சியின் தலைவரென்ற முறையிலேயே பிரதம மந்திரியாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். சென்ற பொதுத் தேர்தலில் ஐக்கிய தேசியக் கட்சி படுதோல்வி அடைந்து மக்கள் ஐக்கிய முன்னணிக் கட்சி மெஜாரிட்டி பெற்றபொழுது அதன் தலைவரான திரு பண்டாரநாயகா பிரதமராக நியமிக்கப்பட்டார். இப்பொழுது மக்கள் ஐக்கிய முன்னணி சிதைந்து போய் ஸ்ரீ லங்கா சுதந்திரக் கட்சி மட்டுமே ஆளும் கட்சியாயிருக்கையில் அதன் தலைவரைப் பிரதம மந்திரியாகத் தெரிவு செய்வதோ அல்லது பிரதம மந்திரிப் பதவியை வகிப்பவரை ஆளும் கட்சியின் தலைவராகத் தேர்ந்தெடுப்பதோதான் இலங்கையின் சம்பிரதாயத்துக்குப் பொருத்தம்.

இதற்கு மாறாக, திரு பண்டாரநாயகாவின் மரணத்துக்குப் பின் ஆளும் கட்சிக்கு யாரைத் தலைவராகத் தெரிவு செய்வதென்ற பேச்சுகளில் பிரதமர் தஹநாயகாவின் பெயரைத் தவிர மற்ற எல்லோருடைய பெயர்களும் பிரஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன. தலைவர் பதவிக்குத் திரு தஹநாயகாவின் பெயரை யாரும் யோசனை கூறக்காணோம். இது விந்தையாக இருக்கிறது. காலஞ்சென்ற பிரதமரின் மனைவியாரான ஸ்ரீமதி பண்டாரநாயகாவின் பெயரைப் பலர் சிபாரிசு செய்திருக்கிறார்கள். தலைமைப் பதவியை ஸ்ரீமதி பண்டாரநாயகா ஏற்கவுமில்லை, மறுக்கவுமில்லை.

## ராணுவ ஆட்சி ஏற்படுமா?

இதற்கிடையில் இலங்கையிலே பாகிஸ்தானைப் பின்பற்றி ராணுவ ஆட்சி கவர்னர் ஜெனரல் தலைமையில் ஏற்படக் கூடுமென்றும் சர்வ சகஜமாகப் பேச்சுகள் அடிபடுகின்றன. அத்தகைய ராணுவ அரசாங்கத்தில் நிர்வாகப் பொறுப்பை ஏற்குமாறு முன்னாள் பிரதம மந்திரியான ஸர் ஜான் கொத்தலாவலையைக் கேட்டுக் கொண்டதாகவும் ஒரு செய்தி உலவுகிறது. இவை எப்படியிருப்பினும் திரு தஹநாயகா மந்திரி சபை அதிக காலத்துக்கு நீடிக்க முடியாதென்பதில் அரசியல் விமர்சகர்களுக்கிடையில் கருத்து வேற்றுமையில்லை. காரணம், திரு தஹநாயகாவுக்குப் பலதரப்பட்ட மனோபாவமுடையவர்களையும் அணைத்துக் கொண்டு போகப் போதிய அனுபவம் கிடையாது. இரண்டாவதாக, அவருக்குப் போதிய மெஜாரிட்டியில்லை. ஓரிரண்டு ஓட்டு மெஜாரிட்டியில் அவருடைய மந்திரி சபையின் உயிர் ஊசலாடிக் கொண்டிருக்கிறது. எந்த நிமிடம் அரசாங்கக் கட்சியைச் சேர்ந்தவர்கள் இடம் மாறுவார்களென்பதையும் அரசாங்கம் கவிழ்ந்து போகுமென்பதையும் சொல்ல முடியாமல் இருக்கிறது. மூன்றாவதாக, நியமன அங்கத்தினர்களின் ஓட்டு பலத்தைக் கொண்டு




''எதற்காகப்பா தள்ளுபடி செய்கிறார்கள்?''
''தேங்கிக் கிடக்கும் துணிகளைத் தள்ளும்படி செய்யத்தான் தள்ளுபடி!''

ஒரு மந்திரி சபை உயிர் வாழ்வது பார்லி மெண்டரி ஜனநாயகத்துக்கே வெட்கக் கேடானது. முக்கியமாக மந்திரிகளிடையி லேயே 'கசமுசல்' தினந்தோறும் அதிகரித்துக் கொண்டிருக்கிறது.

திரு தஹநாயகா நாட்டின் நெருக்கடியான கட்டத்தில் பதவிக்கு வந்தபொழுது அவருக்கு அமோகமான ஆதரவு இருந்தது. அதை அவர் சரிவரப் பயன்படுத்திக் கொண்டிருந்தால் தமது அரசாங்கத்தின் கையை நிச்சயம் பலப் படுத்திக் கொண்டிருக்கலாம். துரதிர்ஷ்ட வசமாக, பத்திரிகைகளின் வாயை அடைத்து அவற்றின் பகையையும் நாட்டு மக்களின் வெறுப்பையும் கட்டிக் கொண்டுவிட்டார். செல்வாக்கு மிக்க பத்திரிகைகளின் பகையை கட்டிக் கொண்டது அவர் செய்த மிகப் பெரிய ராஜதந்திரத் தவறாகும். இவ்வாரம் அவரது மந்திரி சபை மீது ஒரு நம்பிக்கையில்லாத் தீர் மானம் விவாதத்துக்கு வருகிறது.

இக்கடிதம் பிரசுரமாவதன் முன்னால் அந்தத் தீர்மானத்தின் மீது ஓட்டு எடுக்கப்பட்டிருக் கும். சொற்ப மெஜாரிட்டியுடன் அரசாங்கம் தப்பிப் பிழைத்துக் கொண்டுவிடலாம். ஆயி னும் இச் சூழ்நிலையில் நிர்வாகம்தான் எவ் வாறு திறம்பட நடைபெறும்? அமைதியை எவ்வாறு நிலைநாட்ட முடியும்? நான்கு அல் லது ஐந்து ஓட்டுகள் மெஜாரிட்டியில் எந்த மந்திரி சபைதான் எதைச் சாதித்துவிட முடி யும்? அதன் காலம் நித்திய கண்டமும் பூரண ஆயுசுமாகத்தான் கழிந்தாக வேண்டும்.

## கவலையில்லை!



"என் மாப்பிள்ளை பிளேனில் வருகிறாரோ, இல்லே ரயில்லே வருவாரோங்கற கவலையே எனக்கில்லை!"

"ஏன்? உங்க மாப்பிள்ளை வீட்டோடயே இருக்காரோ?"

"இல்லே! எனக்கு இருப்பது எல்லாம் பெண்களதான்!"

## அவசர கால நிலைமை விஸ்தரிப்பு

திரு பண்டாரநாயகாவின் படுகொலையை அடுத்து அரசாங்கம் பிரகடனப்படுத்திய அவசரகால நிலைமைச் சட்டத்தை மேலும் ஒரு மாதத்துக்கு நீடித்து வைத்திருக்கிறார்கள். நாட்டின் தற்போதையச் சூழ்நிலையில் அவசரகாலச் சட்டம் நீடிக்கப்பட வேண்டுமா அல்லது வேண்டாமா என்பதைப் பற்றிக் கடுமையான கருத்து வேற்றுமை இருந்து வருகிறது. அவசரகாலச் சட்டம் பொது ஜனங் களின் பாதுகாப்புக்கு அல்லவென்றும் அர சாங்கத்தின் பாதுகாப்புக்குத்தான் என்றும் எதிர்க் கட்சியினர் வாதிக்கிறார்கள். அரசாங் கமோ அபாயகரமான நிலைமை நாட்டில் இன்னும் இருந்து வருகிறதென்றும் அவசர காலச் சட்டம் வாபஸானால் வகுப்புக் கலகமும் சமயச் சச்சரவுகளும் தலையெடுக்கு மென்றும் கூறுகிறது. அவசர காலச் சட்டத்தில் பொது ஜனங்களின் ஜனநாயக அடிப்படை உரிமை களைக் கட்டுப்படுத்தக் கூடிய விரும்பத்தகாத அம்சங்களெல்லாம் ஏற்கனவே வாபஸாகி விட்டபடியால் தற்சமயமுள்ளமாதிரி அவசர காலச் சட்டம் தொடர்ந்து அமுல் நடப்ப தால் யாருக்கும் நஷ்டமில்லையென்று தமிழர் வட்டாரங்கள் கருதுகின்றன. பிரபல தமிழ்த் தினசரியான வீரகேசரி இவ்வாரம் எழுதி யுள்ள ஒரு தலையங்கத்தில், சட்டத்துக்கு மதிப் பும் சமாதானமும் திட்ட வட்டமாகப் புனருத் தாரணம் செய்யப்படும் வரையில் தற்சமய முள்ளபடி அவசரகாலச் சட்டத்தை அமுல் நடத்துவது விரும்பத்தக்கதென்று வற்புறுத்தி யிருக்கிறது. இது தமிழ் பேசும் மக்களின் கருத்தைப் பிரதிபலிப்பதாகும். ஆங்கிலப் பத்திரிகைகள் அவசர காலச் சட்டம் உடனே வாபஸ் வாங்கப்பட வேண்டுமென்று கோரி யிருக்கின்றன.

## சட்டத்துக்கு இங்கு மதிப்பில்லை

லஞ்ச விசாரணைக்கமிஷனர் திரு. வால்டல் தல்கொடபிட்டிய என்பவர் கண்டியில் ஒரு கூட்டத்தில் பேசிய பொழுது, இலங்கையில் இன்று நிலவும் அராஜக நிலைமையைப் படம் பிடித்துக் காட்டுவதைப் போல் எடுத்துச் சொல்லிச் சட்டத்தை மதிக்கும் பண்பு மக்களிடம் திரும்ப ஏற்பட்டாலன்றி ஜன நாயகம் இந்த நாட்டிலிருப்பதாகக் கூறுவது வெறும் கேலிக்கூத்து என்றார். பிரதமர் பண்டாரநாயகாவின் படுகொலைக்கு உண்மை யான காரணம் ஜனநாயகம் என்றால், சட்டத்தை மதியாமல் யாரும் எதுவும் செய்யலாமென்ற ஒரு தப்பெண்ணம் இருந்து வருவதுதானென்றும் நாட்டின் பிரஜைக ளென்ற முறையில் ஒவ்வொருவருக்கும் தங்க ளுக்குள்ள பொதுவான கடமைகளை உணரா மல் இருக்கின்றனரென்றும் இஷ்டம்போல எதுவும் செய்யலாமென்ற விபரீத மனோபாவம் மக்கள் மனத்தில் வளர்ந்து அராஜகம் நிலை பெற்றுவிட்டதுதான் காலஞ்சென்ற பண்டார நாயகாவின் மரணத்துக்கு அடிப்படையான காரணமென்றும் அவர் சொன்னார். —ரஜனி



# பிரகாசிக்கும் கிராமம்

- சிறந்த சாலைகள், கழிவு நீர் கால்வாய்கள்
- சுத்தமான கிராமம், சிறந்த தேக ஆரோக்யம்
- அபிவிருத்தியடைந்த விவசாயம், அதிகரித்த மகசூல்
- எழுத்தறியாமையையும் தீண்டாமையையும் ஒழித்துக்கட்ட தீவிர முயற்சி
- தண்ணீர்-குழாய்கள்போன்ற நல்ல வசதிகள், மாட்டுச் சாணத்திலிருந்து காஸ் தயாரிக்கும் அரியதோர் இயந்திரம்

இவைகளும் மற்றும் சில அபிவிருத்திகளும் மத்தியப் பிரதேசத்தின் ரெய்கார் சமுதாய நல வளர்ச்சி பிளாக்கைச் சேர்ந்த படேல் பாலி கிராமத்தின் சாதனைகளாகும். அக் கிராமத்தினர் தாங்களே முன் வந்து அபிவிருத்தி முயற்சியில் ஈடுபட்டதின் பலன்களே அவை.

படேல்பாலி அடைந்த வசதிகளை உங்கள் கிராமமும் அடைய முடியும். கிராம அபிவிருத்தி உங்களுக்கு சிறந்த வாழ்க்கையை அளிப்பதுடன் நாட்டின் முன்னேற்றத்தையும் துரிதப்படுத்துகிறது.

**திட்டத்துக்கு உதவுங்கள் —**

**முன்னேற்றம் அடையுங்கள்**

DA- 59/353

[ கூட்டுப் பண்ணை பற்றிக் 'கல்கி'யில் வெளிவந்த கட்டுரைகளைப் படித்துவிட்டுப் பல வாசகர்கள் தங்களுடைய அனுபவங்களை எழுதி அனுப்பியுள்ளார்கள். அவற்றில் ஒன்று கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது. கூட்டுறவு இலாக்காவில் நீண்ட காலம் அனுபவமுள்ள இந் நண்பர் வெளியிடும் சம்பவமும் 1947-ம் ஆண்டிலேயே சென்னை மாநில சர்க்கார் கண்ட தீர்வும் தற்போதைய நிலையில் கலங்கரை விளக்கெனப் பிரகாசிக்கின்றன. —ஆசிரியர் ]

# கூட்டுறவு முறையில் சாகுபடி

1937-ம் ஆண்டு அக்டோபர் மாதம் 1-ந்தேதி முதல் சேலம் ஜில்லாவில், அச் சமயம் மதுவிலக்கு அமுல் செய்யப்பட்டதன் காரணமாகத் தங்கள் தொழிலை இழந்த கள் இறக்குபவர்களின் வாழ்க்கைக்கு வகை செய்யும் நோக்கத்துடன், "விவசாய குடியமைப்புச் சங்கங்கள்" (Land colonization societies) என்ற பெயரில் சில கூட்டுறவுச் சங்கங்கள் ஆரம்பிக்கப்பட்டன. மாஜி கள் இறக்குபவர் ஒவ்வொருவருக்கும் அரசாங்கத்தாரின் தரிசு நிலங்களிலிருந்து தலா மூன்று ஏக்கரா முதல் ஐந்து ஏக்கரா வரையில், நிலத்தின் தன்மைக்கேற்ப ஒதுக்கப்பட்டு, அந்த நிலங்களில் விவசாயம் செய்ய வசதிகளும் செய்து கொடுக்கப்பட்டன. உழவுக்கு மாடுகள் வாங்கவும், எரு, விதை முதலியவைகள் வாங்கவும், உழவு, நாற்று நடவு, அறுவடை முதலிய செலவுகளுக்குமாக, கடனாகவும், மான்யத் தொகையாகவும் (Grant or subsidy) அரசாங்கத்தாரால் பண உதவி செய்யப்பட்டது. விவசாயிகள் குடியிருக்க வீடுகள், குடிதண்ணீர்க் கிணறுகள், வைத்திய வசதி, பள்ளிக்கூடம் முதலிய தேவைகளும் அமைத்துக் கொடுக்கப்பட்டன. விவசாயத் தொழிலுக்குத் தேவையான, கலப்பை, கொழு, மண் வெட்டி, அரிவாள் போன்ற கருவிகளும், குடும்பத்துக்குத் தேவையான மண்ணெண்ணெய், உப்பு, சர்க்கரை, தீப்பெட்டி, துணிமணிகள் முதலிய சாமான்களும், சங்கத்தின் மூலம் மொத்தமாக வாங்கி, லாபம் ஏதும் சேர்க்காமல், கொள்முதல் கிரயத்துக்கே விநியோகம் செய்யப்பட்டன. விவசாயத் தொழிலும், சங்கத்தின் நிர்வாகமும் நன்கு நடைபெறுவதற்காக, விவசாய இலாகா கூட்டுறவு இலாகா அதிகாரிகளின் சேவையும் இந்தச் சங்கங்களுக்கென்று பிரத்தியேகமாகக் கொடுக்கப்பட்டது. தற்சமயம் யோசனையில் இருக்கும் "கூட்டுறவு சேவா சங்கங்கள்" (Service co-operatives) போன்றதொரு அமைப்பைக் கொண்ட சங்கங்கள் அப்பொழுதே அமைக்கப்பட்டன. வேலையிழந்த கள் இறக்குபவர்கள் மட்டுமல்லாமல், சொந்த நிலமில்லாத விவசாயிகள், இதர வேலையில்லாத தொழிலாளர்கள் முதலிய எல்லோரையும் இந்தச் சங்கங்களில் நாளாவட்டத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டது.

2. இந்தச் சங்கங்களின் முக்கியமான தொழில் நடைமுறை விதிகள் கீழ்க்கண்டவாறு வகுக்கப்பட்டன. ஒவ்வொருவருக்கும் ஒதுக்கப்பட்ட நிலத்தில் விளைகிற மகசூல் பூராவும் அவருக்கே சொந்தமாக்கப்பட்டது. தன் உழைப்புக்குத் தக்க வருமானம் தனக்கு உண்டு என்ற நிலை இருந்தது. தன் நிலத்தில் அதிக விளைவுக்கோ, அல்லது குறைந்த விளைவுக்கோ தானேதான் காரணம் என்ற நிலை இருந்தது. அதன் காரணமாக ஒவ்வொருவரும் அதிக ஊக்கத்துடன் உழைக்கத் தூண்டுகோலும் போடப்பட்டது. நிலங்கள் முழுதும் அரசாங்கத்துக்குச் சொந்தமான தரிசு நிலங்களானபடியால், நிலம் சொந்தம் என்ற உரிமையை மட்டும் கொடுக்கவில்லை. "உழுபவனுக்கே நிலம் சொந்தம்" என்ற கொள்கைக்குப் பதில் "உழுபவனுக்கே நிலத்தின் வருமானம் பூராவும் சொந்தம்" என்ற ஒரு கொள்கை அமுலாக்கப்பட்டது. நன்கு உழைத்துத் தனக்கு ஒதுக்கப்பட்ட நிலத்தில் நியாயமான கண்டுமுதல் எடுக்காத ஒருவரைச் சங்கத்திலிருந்து விலக்கி விடுவது என்ற ஒரு கண்டிப்பும் இருந்தது. மேலே சொன்ன காரணங்களினால் அதாவது அரசாங்கத்தாரால் கடனாகவும், மான்யமாகவும் பண உதவியும் இதர வசதிகளும் செய்து கொடுக்கப்பட்டதாலும், நிலத்தின் விளைச்சல் முழுதும் உழவர்களுக்கே சொந்தமாக்கப்பட்டதாலும், உழைக்காமல் சோம்பேறிகளா விருப்பவர்களுக்கு நிலம் வழங்கப்படமாட்டாது என்ற நிலை இருந்தபடியாலும், மேலே சொன்ன விவசாயக் குடியமைப்புச் சங்கங்கள் ஓரளவு நல்ல முறையில் நடந்தன. அவைகளில் நிர்வாகத் துறையிலும், நடைமுறையிலும் எவ்வளவோ குறைபாடுகளும், சிக்கல்களும், குழப்பங்களும் இருந்த போதிலும், பொதுவாக இந்தச் சங்கங்கள் நல்ல முறையில் இயங்கி வந்தன என்றே சொல்லலாம்.

3. இந்த விவசாயக் குடியமைப்புச் சங்கங்களில் "கூட்டுப் பண்ணை" முறையை (Collective farming) அமுலாக்க வேண்டும் என்று ஒரு முயற்சியை, சென்னை அரசாங்கத்தார் 1944-ம் வருஷத்தில் ஆரம்பித்தார்கள். சுமார் மூன்று வருஷ காலம் இந்தத் துறையில் பிரசாரமும், இதர நடவடிக்கைகளும் மேற்கொள்ளப்பட்டன. "கூட்டுப் பண்ணை" முறையில் மிக முக்கியமான விதி முறைகள் கீழ் வருமாறு:- ஒவ்வொரு விவசாயியும், தன் சொந்தக் கணக்கில் தனக்கு ஒதுக்கப்பட்ட நிலத்தில் சாகுபடி செய்வதற்குப் பதில், எல்லோருக்கும் ஒதுக்கப்பட்ட எல்லா நிலங்களையும் ஒன்றாகச் சேர்த்து, சங்கத்தின் கணக்கில், சாகுபடி செய்ய வேண்டும். விவசாயிகள் நிலத்தில் உழைத்துத் தங்கள் உழைப்புக்காக, சங்கத்தால் நிர்ணயிக்கும் அளவு கூலி பெற்றுக் கொள்ளலாம். முதலில் நிலம் ஒதுக்கப்பட்டவர்கள் மட்டுமல்லாமல்,

வேறு ஆட்கள் தேவையானால், அவர்களையும் கூலிக்கு அமர்த்திக் கொள்ளலாம். உழவு, நடவு, தண்ணீர்ப்பாய்ச்சுதல், களை எடுத்தல், அறுவடை முதலிய எல்லாக் காரியங்களும், எல்லோருக்கும் பொதுவில், சங்கக் கணக்கில் மேற்கொள்ளப்படும். இவைகளுக்கு ஆகும் செலவுகளெல்லாம் பொதுக் கணக்கில் தாக்கல் செய்யப்படும். நிலவரி, தண்ணீர் வரி முதலிய செலவுகளும் பொதுக் கணக்கில் தாக்கல் செய்யப்படும். அறுவடையான மகசூலையும் பொதுக் கணக்கில் ஒன்றாக விற்கப்படும். மொத்த வருமானம் எவ்வளவோ அதில் மொத்த செலவுகள் போக, மிகுதி உள்ளதை எல்லோருக்கும், அவரவர்கள் சம்பாதித்த கூலியின் விகிதப்படியோ, அவரவர்களுக்கு முதலில் ஒதுக்கிய நிலத்தின் அளவுப்படியோ பிரித்துக் கொடுக்கப்படும். இப்படிப்பட்ட கூட்டுப் பண்ணை முறையைப் பின்பற்றும்படி முன்சொன்ன சங்க விவசாயிகளிடத்தில் தீவிரப் பிரசாரம் செய்யப்பட்டது. அப்படிப்பட்ட கூட்டுப் பண்ணை முறையால் உற்பத்திச் செலவைக் கணிசமாகக் குறைக்கலாம்; அதாவது நவீன யந்திரங்களின் உதவியால் கூலியாட்களின் செலவைக் குறைக்கலாம் என்றும், தனித்தனியாகச் சாகுபடி செய்வதால் விளைச்சல் அதிகரிக்கும் என்றும், பல காரணங்களையும் அவர்களுக்கு எடுத்துச் சொல்லப்பட்டது. ஆனால் எதிர்பார்த்த பலன் உண்டாகவில்லை. அதிகமோ, குறைவோ ஒவ்வொரு விவசாயியும் தனக்கு ஒதுக்கிய நிலத்தில் தான் உழைத்துப் பயிர் செய்வதையே விரும்பினான். பொதுக் கணக்கில் எல்லோருடனும் சேர்ந்து கூலிக்காக உழைப்பதை அவன் விரும்பவில்லை.

4. 1947-ம் வருஷம் அரசாங்கத்தார் இது விஷயமாகப் புனராலோசனை செய்து, கீழ்க்கண்ட முடிவுகளுக்கு வந்தனர் :-

விவசாயத் துறையில் தற்சமயம் கூட்டுப் பண்ணை முறையைப் (Collective farming) புகுத்தக் கூடாது. அதனால் சிறிய நிலமுள்ள விவசாயி ஒரு விவசாயக் கூலி போன்று மாறிவிடுவதால், அவனுக்குத் தினக்கூலி பெறுவதில்தான் அக்கறை இருக்குமே யொழிய, நிலத்தின் விளைச்சலில் அதிக அக்கறை இருக்காது. ஆகையால் பொதுவாக எல்லா நிலங்களிலும் விளைச்சல் குறைந்து விடலாம். மிகக் கடுமையான கட்டுத் திட்டங்களை வைத்து, கண்டிப்பான முறையில் வேலை வாங்கினாலொழிய, பண்ணை வேலை ஒழுங்காக நடைபெறும் என்று நினைப்பதற்கில்லை. ஒரு கூட்டுறவுச் சங்கத்தில் அப்படிப்பட்ட கண்டிப்பான நடவடிக்கைகள் நடைமுறையில் சாத்தியமுமில்லை. ஆகவே கூட்டுப் பண்ணை முறை ஒத்து வராது. விவசாயிகளுக்கு உதவி செய்யக் கூடிய சாதாரண சங்கங்களை மட்டும் நிறுவ வேண்டும். எங்கெல்லாம் தன்னிச்சையாக விவசாயிகளிடத்தில் உண்மையான விருப்பம் இருக்கிறதோ, அங்கெல்லாம் சாதாரணக் கூட்டுறவு விவசாய சங்கங்கள் ஏற்படுத்தப்பட வேண்டும். இந்தச் சங்கங்களில் விவசாயிகளுக்கு, உழவுக்காகக் கால் நடை, கருவிகள், கூலியாட்கள், நீர்ப்பாசனம், எரு, விதை முதலியவை கிடைக்க வழி வகைகள் செய்து உதவ வேண்டும். உற்பத்தியாகும் மகசூலின் தரம் ஒரே மாதிரியாக இருக்க வேண்டும் என்பதற்காகச் சங்கத்தில் சேர்ந்த எல்லோரும் ஒரே மாதிரியான விதையை உபயோகிக்க வேண்டும் என்று கட்டாயப்படுத்தலாம். விளைபொருள்களின் பேரில் முன்பணம் கொடுத்து மகசூலைச் சங்கத்தின் மூலமே விற்க வேண்டும் என்றும் கட்டாயப்படுத்தலாம். இப்படிப்பட்ட சாதாரண விவசாய கூட்டுறவுச் சங்கங்களே நடைமுறைக்கு ஏற்றவை யென்பதாகச் சென்னை சர்க்கார் 1947-ல் முடிவுக்கு வந்தனர்.

5. இதில் இன்னொரு முக்கியமான விஷயத்தையும் மனத்தில் கொள்ள வேண்டும். விவசாய குடியமைப்புச் சங்கங்களில் இருந்த விவசாயிகளுக்கு நிலம் சொந்தமல்ல. நிலமில்லாத வார சாகுபடிதாரர்கள் போல் சர்க்கார் தரிசு நிலங்களில் சாகுபடி செய்து வந்தார்கள். ஆனால் சர்க்காருக்கு வாரம் அல்லது குத்தகை ஏதும் செலுத்தாமல் முழு மகசூலையும் அவர்களே அனுபவித்து வந்தார்கள். அப்படித் தங்களுக்குச் சொந்தமில்லாத, ஆனால் சுவாதீன அனுபவ உரிமை மட்டும் கொண்ட நிலங்களிலேயே, கூட்டுப் பண்ணை முறையைப் புகுத்த அவர்கள் விரும்பவில்லை; தனித்தனியாக அவர்களுக்கென்று ஒதுக்கிய நிலத்தில் உழைத்து அதன் பலனை, அது அதிகமானாலும் சரி, குறைவானாலும் சரி, அனுபவிக்கவே அவர்கள் விரும்பினார்கள். அப்படிப்பட்ட சொந்த நிலமில்லாத விவசாயிகளிடத்திலேயே புகுத்த முடியாது என்று அரசாங்கத்தார் 1947-ம் வருஷத்தில் ஒரு முடிவுக்கு வந்த ஒரு விவசாய முறையை, தற்சமயம் சொந்த நிலமுள்ள பட்டாதாரர்களிடத்தில் புகுத்த வேண்டும் என்று நாகபுரி காங்கிரஸ் தீர்மானம் செய்துள்ளது. இது எவ்வளவு தூரம் அனுபவ சாத்தியம் என்பதைச் சிறிதும் ஆராயாமல், அவசர முடிவுக்கு வந்து விட்டார்கள் என்றே சொல்ல வேண்டியிருக்கிறது. அதிலும் நம் சென்னை ராஜ்யத்தைப் பொறுத்த மட்டும், 1947ல் அரசாங்க நிலத்தில் சாகுபடி செய்து வந்த சாகுபடிதாரர்களிடமே புகுத்த முடியாத ஒரு விவசாய முறையை 1959, 1960ல் சொந்த நிலமுள்ள விவசாயிகளிடத்தில் புகுத்த முடியுமா என்று நன்கு சிந்தித்துப் பார்க்க வேண்டும். பத்துப் பன்னிரண்டு வருஷங்களுக்குள், விவசாயத் தொழிலிலோ அல்லது விவசாயிகளின் மனோபாவத்திலோ அப்படிப் பெருத்த மாறுதல் ஒன்றும் நிகழ்ந்து விடவில்லை. கூட்டுப் பண்ணை முறையை நன்கு விளக்கமாக எடுத்துக் கூறினால், சிறு சிறு நிலங்கள் கொண்ட விவசாயிகள் தன்னிச்சையாக அந்த முறைக்கு ஒத்துக் கொள்ள மாட்டார்கள். ஏதாவது ஒரு வகையில் நிர்ப்பந்தம் செய்தாலொழிய, நாகபுரி காங்கிரஸ் தீர்மானம் எதிர்பார்க்கும் கூட்டுப் பண்ணை முறையை) Collective farming or Joint farming) நம் விவசாயிகளிடத்தில் புகுத்த முடியாது என்பது அனுபவ ரீதியான உண்மை. இதை ஒளிவு மறைவு இல்லாமல் நல்ல எண்ணத்துடன் எடுத்துச் சொல்பவர்களை, ஏமாற்றுபவர்கள் என்றும், புத்தியில்லாதவர்கள் என்றும் ஏசப்படுவதைக் கண்டு வருந்த வேண்டியிருக்கிறது.

# இருமல் தொல்லையா!

ஸெப்ரால்

சாப்பிடுங்கள்

அது உடனடியாக

நிவாரணம்

அளிக்கிறது






# 'ZEPHROL'

trade mark brand

## ஸெப்ரால் காப் ஸிரப்




தயாரிப்பாளர்கள் மே ஆன்ட் பேக்கர் லிமிடெட்,

விநியோகஸ்தர்கள் :

மே ஆன்ட் பேக்கர் (இந்தியா) பிரைவேட் லிட்

பம்பாய் . கல்கத்தா . கொஹாத்தி

மதராஸ் . புதுடில்லி.




போர்தொடுக்கும் மின்னலில்லை, இடியிடிக்கும் இன்னலில்லை,
  புதுநன்னாள் வந்ததெனை வளைக்கரமே கோலமிடு!
கார்முகிலும் கவியவில்லை, கதிரவனும் நீலவானில்
  களையுடனே பவனிவர வளைக்கரமே கோலமிடு!

பழமையென்னும் இருளகன்றே புதுமையின்றே வருவதென்றே
  பண்டிகையின் பொன்னொளியைக் கொண்டாடிக்கோலமிடு!
ஒழிவிலாது உழைத்தபயன் புதுமையின்பத் திருநாளாய்
  உன்னதமாய் விடிந்ததென வளைக்கரமே கோலமிடு!

இன்னல்கள் ஓரளவு குறைந்திட்டே, இன்பமோங்க
இன்றையநன் முயற்சிகளால் நாளையநல் வாழ்வமையும்!

இன்று,—சென்ற பல காலம்போலவே இந்துஸ்தான் லீவர் தயாரிப்புக்கள் வீடுதோறும் பரிசுத்தம் பரவ, ஒளி துலங்க, இன்பமிலங்கத் துணைபுரிகின்றன...

நாளை,—நாளொரு மேனியாக வளரும் நல்வாழ்வு வேட்கையை யொட்டிப் புதுப்புது எண்ணங்கள்; புதுப்புதுப் பண்டங்களோடு சிறந்த பணிபுரிந்திடச் சித்தமாயிருக்கிறோம்.

PR. 10-50 TM.

# படித்துப் பாருங்கள்

## நாம் வந்த வழி

உயிர் என்றால் என்ன? அது முதன் முதலில் எப்படித் தோன்றிற்று? அது உலகுக்குப் புறம்பான ஒரு தெய்விகச் சக்தியா, அல்லது ரசாயனப் பொருள்கள் தற்செயலாகக் கலந்ததனால் தோன்றிய ஒன்றா? உயிரினங்கள் எவ்வாறு தோன்றின? எவ்வாறு படிப்படியாக வளர்ச்சியுற்று மாறுதல் பெற்றன? மனிதன் எவ்வாறு தோன்றினான்? இன்னும் ஒரு கோடி ஆண்டுகளுக்குப் பின்னர் அவன் எப்படி இருப்பான்? சிருஷ்டித் தத்துவமும் பரிணாமத் தத்துவமும் எப்படி வேறுபடுகின்றன ?

இத்தனை கேள்விகளும் சாதாரணமாக நமக்குத் தோன்றுவதில்லை. தப்பித் தவறித் தோன்றினாலும் குழப்பம் தரும் விடைகள் தான் முன்னால் வந்து நிற்கும். ஆனால் உயிரியல் அறிஞர்கள் பல காலமாகவே இந்தக் கேள்விப் புதிர்களுக்கு ஆதார பூர்வமான விடை காண முயன்று வந்திருக்கிறார்கள். இன்னும் முயன்று கொண்டுதான் இருக்கிறார்கள். ஆயினும் உலகத்தின் பிறப்பையோ, உயிரின் தோற்றத்தையோ பற்றி நிச்சயமான ஒரு முடிவுக்கு யாரும் இன்னும் வரவில்லை. புராதன காலம் முதல் இத்தகைய கேள்விகளுக்குப் பலவிதமான விடைகள் இருந்து வருகின்றன.

இவற்றுள் முக்கியமானவை இரண்டு. ஒன்று, சிருஷ்டி முறைக் கொள்கை என்பது. மற்றொன்று பரிணாமக் கொள்கை என்பது. எல்லா உயிரினங்களையும் இறைவன் இப்போதுள்ள உருவத்திலேயே படைத்தான் என்பது சிருஷ்டி முறைக் கொள்கையின் சாரம்.

நெருப்புப் பிழம்பாக இருந்த உலகம் மெள்ள மெள்ளக் குளிர்ந்து உயிர்கள் வாழத் தகுந்ததாக மாறியதுபோலவே, பிண்டப் பொருள்களிலிருந்து எளிய உயிர்ராசிகள் தோன்றி, படிப்படியாக மாறி, ஒன்றிலிருந்து ஒன்றாகப் புதிய உயிரினங்கள் தோன்றின என்பதே பரிணாமக் கொள்கையின் சாரம்.

இந்தப் பரிணாமக் கொள்கை சமீபகாலத்தில் ஏற்பட்டது என்று கொள்வது தவறு. கி. மு. நாலாம் நூற்றாண்டிலேயே இது தோன்றிவிட்டது. ஆனால் சிருஷ்டி முறைக் கொள்கையை மறுக்கவோ எதிர்க்கவோ யாரும் துணியவில்லை. பதினெட்டாம் நூற்றாண்டுக்குப் பிறகுதான் சார்லஸ் டார்வின் போன்ற பரிணாமவாதிகள் உயிரினங்கள், கடவுள் படைப்பு என்பதை ஒத்துக்கொண்டு அவை மாறிய முறையை மட்டும் விளக்க முயன்றார்கள்.

'இயற்கைத் தேர்தலால் இனங்கள் தோன்றுதல்' என்ற நூல் 1859-ம் ஆண்டு வெளிவந்து, விஞ்ஞான உலகிலேயே ஒரு புரட்சியை உண்டாக்கிவிட்டது. அதை எழுதியவர் சார்லஸ் டார்வின் என்ற ஆங்கிலேயர்தான். அந்த நூலின் நூற்றாண்டு விழாவை இந்த ஆண்டு எங்கும் கொண்டாடுகிறார்கள். அதை ஒட்டியே 'நாம் வந்த வழி' என்ற இந்தப் புத்தகமும் தமிழில் வெளியிடப்பட்டிருக்கிறது.

இன்று பரிணாமம் என்பது நிலைநாட்டப்பட்ட உண்மையாகி விட்டது. உயிரினங்கள் ஒரேமாதிரியாக இருந்தவை அல்ல என்றும், எளிய நிலையிலிருந்து அவை படிப்படியாக மாறி இன்றுள்ள நிலையை அடைந்துள்ளன என்றும் பெரும்பாலும் எல்லா அறிஞர்களும் ஒப்புக் கொள்கிறார்கள். ஆனால் ஏன், எவ்வாறு அவை மாற்றம் பெறுகின்றன என்பதைப் பற்றி மட்டும் அவர்களிடையே கருத்து வேற்றுமை இன்னும் இருந்துதான் வருகிறது.

பரிணாமக் கொள்கை மூன்று அடிப்படையான அம்சங்களைக் கொண்டிருக்கிறது. சூழ்நிலை, வேறுபாடுகள், பாரம்பரியம் ஆகிய மூன்றுமே அந்த அடிப்படையான அம்சங்கள். இதையும் டார்வின், லாமார், டீவிரீஸ் போன்ற உயிரியல் அறிஞர்களின் கருத்துக்களையும் விளக்கி, பரிணாம வளர்ச்சியையும் கொள்கைகளையும் விரிவாக, எளிய முறையில் எடுத்துக் கூறுகிறது இந்தப் புத்தகம்.

தமிழ் மொழியில் அறிவியற் கலைகள் மிகவும் குறைவு என்பதை நாம் அறிந்ததே. அந்தத் துறையில் பத்மா ராஜகோபால் அவர்கள் உயிரினங்களின் தோற்ற வளர்ச்சியைப் பற்றி எழுதிய இந்த நூல் வரவேற்கத் தகுந்தது.

ஆஜ்மீர் சாவித்திரி மகளிர் கல்லூரியில் விலங்கியல் பேராசிரியையாக இருக்கும் அவர்கள் பரிணாமக் கொள்கையின் பல அம்சங்களையும் அந்தக் கொள்கைக்கு ஆராய்ச்சியாளர்கள் தரும் அத்தாட்சிகளையும் விளக்கி இந்த நூலை எழுதியிருக்கிறார்கள்.

விஞ்ஞான நூல்களை எளிய முறையில், அழகான தமிழில் தெளிவாகக் கதை போலக் கூற முடியுமா என்று மலைத்து நிற்பவர்களுக்கு, 'முடியும், முடியும்' என்று வன்மையாக விடை கூறுகிறது இந்தப் புத்தகம். இந்த அறிவியல் நூல் மாணவர் முதல் பெரியவர்கள் வரையில் அனைவருக்கும் பயன்படக் கூடியது.—ஆர். வி.

பிரசுரம்: வள்ளுவர்-பண்ணை, சென்னை-1
விலை: ரூ. 3.

## அம்ப பாலி

"அம்ப பாலி", புத்தர் காலத்திய சரித்திர நிகழ்ச்சிகளை அடிப்படையாகக் கொண்டு புனையப்பட்ட சிறு நாடகமாகும். இந்தியாவின் புராதன நகரங்களில் ஒன்றான வைசாலியில் வசித்து வந்த அம்ப பாலி என்ற இளநங்கை ஈடில்லாத அழகியாகத் திகழ்ந்தாள். அவள் அழகுக்கு ஏற்ற குணமும் கலைஞானமும் வாய்க்கப் பெற்றிருந்ததால், அவளது சுயம்வரத்துக்கு வந்திருந்த இளவரசர்களிடையே பெரும் போட்டி ஏற்பட்டது. அந்தப் பிரச்னையைத் தீர்க்க வகையறியாது தவித்தார் அம்ப பாலியின் வளர்ப்புத் தந்தையான சோணப் பிரபு. அந்தச் சிக்கலைத் தீர்க்க இளவரசர்கள் ஒரு யோசனை கூறி

னூர்கள். அம்ப பாலி பொது மகளாக இருக்கட்டும் என்றூர்கள். அந்த யோசனையை அவர்கள் ஏகோபித்து வற்புறுத்தினூர்கள். அவர்களுடைய ஆணையை மீறச் சோணப் பிரபு விரும்பவில்லை. அழகி அம்ப பாலியின் மனத்தில் புயல் வீசத் தொடங்கியது. ஒரு சிறு சம்பவம் அவளது வாழ்க்கையையே மாற்றி அவளைத் துறவியாக்கி விட்டது. சிற்றின்பத்தில் உழன்று கொண்டிருந்த அம்ப பாலி பேரின்பப் பேற்றை அடைந்த சம்பவத்தை உருக்கமாகச் சித்திரிக்கும் இந்த நாடகத்தின் ஆசிரியர் ஸ்ரீ அ. தியாகராஜன் எம்.ஏ.,எம்.பி., பி.எல். அவர்கள் பௌத்த நூல்களிலிருந்து அம்ப பாலியின் வாழ்க்கைக் குறிப்புகளைச் சேகரித்து நாடகத்தை உருவாக்கியுள்ளார். நாடகம் சிறியதாயினும், வாசிப்போரின் மனத்தில் உயர்ந்த சிந்தனைகளை எழுப்பும் ஆற்றல் பெற்றதாக இருக்கிறது.—ஜெயமணி

கிடைக்குமிடம்: பாரதி பிரிண்டர்ஸ், 119, பிராட்வே, சென்னை-1. விலை: ரூ. 1.

# வட்ட மேஜை

மீரச் செக்கால் ஆட்டித் தயார் செய்யும் ஒவ்வொரு ராத்தல் எண்ணெய்க்கும் ஒரு அணு விதம் சென்ட்ரல் எக்ஸைஸ் வரி போட்டு, குடிசைத் தொழிலாகிய பிண்டோ (Pinto) செக்கு வைத்துச் செய்யும் தொழிலை நசுக்கிப் பெரிய எக்ஸ்பில்லர் (Expillor) வைத்து நடத்தும் முதலாளிகளுக்கு ஆதரவு காட்டுகிறது சர்க்கார். சென்னை சர்க்கார் விதித்திருக்கும் ஒரு முனை விற்பனை வரியும் எக்ஸைஸ் வரியும் சேர்ந்து மறைமுகமான வரியாக ஒரு வீசை ஒன்றுக்கு மூன்றணு விதம் வசூலிக்கப்படுகிறது. சாதாரணமாகப் பஞ்சாயத்துப் போர்டார் கொடுத்துவந்த ரைஸ்மில் லைசன்ஸ்களை ஜில்லா கலெக்டர் அவர்கள் கொடுக்கும்படியாக அதிகாரம் மாறியது. பிறகு மாகாண சர்க்காரின் சிவில் சப்ளை அதிகாரிகளுக்கு மாறியது. 1959-ம் வருஷம் ஏப்ரல் மாதம் 22-ந் தேதி முதல் டெல்லி சர்க்கார் மேற்படி லைசன்ஸ் கொடுக்கும் அதிகாரத்தைத் தன் மேற்பார்வையில் எடுத்துக் கொண்டது. ஆனால் படிப்படியாக,பஞ்சாயத்துக்கு அதிகாரத்தை வழங்குவதாக நமது நேருஜி அவர்கள் சொல்லுகிறுர்.

ஒவ்வொரு ஊரிலுமுள்ள தேவஸ்தானங்களுக்கு உள்ளூரில் யோக்கியதாம்சமுள்ளவர்களை நிர்வாக தர்மாகர்த்தாவாக நியமித்து வந்தார்கள். ஜனங்களின் நம்பிக்கைக்குப் பாத்திரமானவர்கள் என்ற முறையில் இந்துக்களுடைய புனிதத் தன்மைக்குப் பங்கமில்லாமல் அவர்கள் மேற் பார்வை செய்து வந்தார்கள். தற்போதுள்ள இந்து மத பரிபாலன சட்டப்படி இந்துக்களுடைய கலாசாரத்துக்கு மாறுபட்டவர்களை நிர்வாக அதிகாரியாக நியமித்து வருவதல்லாமல், இதனுலேயே நிர்வாகத்தில் ஒற்றுமை இல்லாமல் இருந்து வரும் இந்தச் சமயத்தில் டெல்லி சர்க்கார் இந்துமத பரிபாலன தேவஸ்தான கண்ட்ரோல்களையும் தனது ஒருமுக மேற்பார்வைக்குக் கொண்டுவரச் சட்டம் இயற்றப் போவதாகப் பத்திரிகைகளில் பிரகரமாகியிருக்கிறது.

21—10—59 வி. எஸ். மணி



திருக்குடந்தை பஸ் நிலையத்தில் பிரயாணிகள் தங்குமிடத்தில் நீண்டதொரு பலகை பொருத்தப்பட்டு அதில் குடந்தையிலிருந்து பஸ்கள் புறப்படும் நேரத்தையும், குடந்தைக்கு பஸ்கள் வரும் நேரத்தையும் குறித்துக் காட்டப்பட்டிருக்கிறது. அதில் இருக்கும் நேரத்துக்கும் பஸ்கள் வந்து போகும் நேரத்துக்கும் அதிக மாறுதல்கள் இருக்கின்றன. இதுபற்றி விசாரித்ததில் அது இரண்டு மூன்று ஆண்டுகளுக்கு முன்பு எழுதியது எனத் தெரிய வந்தது.

குடந்தை
16—10—59 ஆர். லக்ஷ்மணன்



நான் செங்கற்பட்டு தாலூக்கா கொத்திமங்கலம் கிராமத்தைச் சேர்ந்தவன். நாங்கள் சொந்தக் கிணற்றில் மின்சாரப் பம்பு செட் போட்டு விவசாயம் செய்வதற்காக ரூபாய் 1500-ம் மாடு பிடிப்பதற்காக ரூ. 500-ம் நிலங்களின் ஈட்டின்மீது கடன் வேண்டுமென்று மனு செய்தோம். எங்கள் மனுவை 20—8—58-ல் செங்கற்பட்டு ஜில்லா கலெக்டர் ஆபீஸில் பெற்றுக் கொண்டார்கள்.

பிறகு ஒன்பது மாதம் கழித்து விசாரணை செய்தார்கள். அதன் பிறகு நாளதுவரையில் ஒரு தகவலும் தெரியவில்லை.

நாங்கள் ஈடுகாட்டும் நிலங்களின் மதிப்பையறிய பக்கத்து நிலங்களின் கிரய பத்திர நகல்களையும் நாங்கள் மின்சார பம்புசெட் போடப் போவது உண்மையென்பதை யறிவுறுத்த மின்சார இன்ஜினீயர் அவர்களிடமிருந்து அத்தாட்சிப் பத்திரத்தையும் வாங்கித் தாக்கல் செய்தோம். நாங்கள் விண்ணப்பித்து ஒன்றே கால் வருஷமாகியும் ஒரு தகவலும் தெரியவில்லை.

இதைப் பற்றி மேலதிகாரிகளுக்கு எழுதினுல் ஏதாவது அனுவசியமான காரணம் காட்டிக் கடன் கோரிக்கையை நிராகரித்து விடுவார்களோ என்று ஐயப்பட்டு இதுவரை மேலதிகாரிகளுக்கு எழுதவில்லை.

இப்போது விசாரித்ததில் எங்களுக்குச் சொந்தமான நாங்கள் ஈடுகாட்டும் நிலத்தை எட்டு வருஷங்களுக்கு முன்பு வேறொருவர் ஈடுகாட்டிக் கடன் வாங்கி யிருக்கிறுராம். அதனுல்தான் தாமதம் என்கிறுர்கள்.

வேறொருவரின் நிலத்தை ஈடு வைத்துக் கொண்டு எவ்வாறு அரசாங்கத்தில் கடன் கொடுத்தார்கள்? அரசாங்க அதிகாரிகள் கிராம உத்தியோகஸ்தர்களை விசாரித்து உண்மையறிந்து கடன் கொடுத்தார்களா? அல்லது கிராம அதிகாரிகளும் இம்மாதிரியான அநியாயத்துக்கு உடந்தையா?

செங்கற்பட்டு
22—10—59 கே. ஆர். ஜி. சக்கரவர்த்தி

# மிஸ் இ.பி.கோ.

## வாசவன்

பெரியவர் நல்லவர். ரொம்ப ரொம்ப நல்லவர். பகவத்கீதை படிப்பவர்; பாகவதம் கேட்பார். 'பகவத்கீதையும், பாகவதமும் நல்லவை என்பதில் சந்தேகம் இல்லை. ஆனால் அதைப் படிப்பவரும் கேட்பவரும் நல்லவராகத்தான் இருக்க வேண்டுமா?" என்று கேட்பவர்களுக்கும் நல்ல பதில் இல்லாமல் இல்லை.

பெரியவர் போலீஸில் பெரிய பெரிய பதவிகளையெல்லாம் வகித்தவர். அப்படிப் பட்ட காலத்திலும் அவர் நல்லவராகத்தான் இருந்தார். அவர் மட்டும் கெட்டுப் போகத் தயாராக இருந்திருந்தால் இந்தப் பழைய வீட்டில் வாழ வேண்டிய துர்ப்பாக்கியம் அவருக்குக் கிடைத்திருக்காது. வஞ்ச மோகினி அவரை வானத்துக்கு உயர்த்த வலை வீசினாள். நல்ல குணம் அவரைப் பூமியிலேயே நிறுத்தி வைத்துக் கூத்துப் பார்த்து விட்டது. பைத்தியக்கார மனிதர்! கற்பகத் தருவை நாடிப் போய் யாராவது காஞ்சிரங் கனியைப் பெற்றுத் திரும்புவதுண்டா?

இந்தப் பித்துக்குளியை நல்லவர் என்று சொல்லி அழுவதைத் தவிர, கெட்டிக்காரர் என்று சொல்லிப் பெருமைப் படுவதற்கு என்ன இருக்கிறது? பலமுறைகள் படித்து அழுக்காக்கிய பகவத்கீதைதான் இருக்கிறது!

நிரபராதிகள் சட்டத்தின் இரும்புப் பிடியில் அகப்பட்டுத் தண்டனை பெறக் கூடாது என்பதில் ரொம்பக் கண்டிப்பானவர். அதே போலக் குற்றவாளிகளும் பெற வேண்டிய தண்டனையிலிருந்து தப்பிவிடக் கூடாது அவருக்கு. கறுப்புக் கற்களுக் கிடையே வைரத்தைப் பொறுக்கும் வேலை போலீஸ் உத்தியோகத்துக்கு லாயக்கோ? ஆயிரம் பேர்களைக் கொன்றவன் அரை வைத்தியன். அதேபோல் அந்தக் காலத்தில் ஆயிரம் நீதிகளைக் கொன்றவன் அரை ஐ.ஜி. நீதியைக் கொல்லத் தெரியாததால் ஜில்லா சூப்பரின்டெண்டெண்ட் பதவிக்கு மேல் அவரை உயர்த்தாமல் 'நீதி'யை நிலை நாட்டிக் கொண்டது அப்பொழுது ஆண்ட ஆங்கில சர்க்கார்!

இந்த ஏமாளிக்கு அதெல்லாம் தெரியவில்லை. கடமை பெரிதாம்! எவ்வளவு பெரியது? இந்திய சர்க்காரின் மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டத்துக்குச் செலவாகப் போகும் அந்நியக்



கடன் தொகையை விடவா பெரியது? அவருக்கு இப்படியெல்லாம் கேள்வி கேட்கத் தெரியாது. தெரிந்திருந்தால் வாழ்க்கையின் இனிமையான இளமைப் பகுதியைப் புரிந்து கொண்டிருக்க மாட்டாரா? தலையின் விளிம்புகளில் நரைப் பாத்தி கட்டிய ஐம்பது வயது வரையில் ஒரு குழந்தைக்குத் தந்தையாகத் தெரியாமல் திண்டாடிப் போலிஸில் அகப்பட்டுக் கொண்டிருப்பாரா?

மாஜி இளமை பழி வாங்கி விட்டது. அதைப் பிரவேசித்த முதுமையின் பரிசு என்று கூடச் சொல்லலாம். கோமதி பிறந்தாள்!

அப்பொழுது அவர் கூட சந்தோஷப் பட்டார். நாலைந்து வருஷங்களுக்குள் 'பென்ஷன்' என்ற பயங்கர ஆயுதத்தைக் காட்டித் தன்னிடமிருந்து பதவியைப் பிடுங்கிக் கொள்ளப் போகிறார்கள். பிறகு பட்டம் பதவி ஏது? துக்கம் சூழ்ந்த அந்த வேளையில் தான் கோமதி அவருக்குத் தந்தைப் பதவியை அளித்து மகிழ்வூட்டினாள்.

எவள் அவருக்கு மகிழ்வூட்டினாளோ, அவள் இப்பொழுது வேதனையை விதைத்திருக்கிறாள். இந்த வினையை விதைக்கத்தானா இருபது வருஷங்களாக அவள் செழித்து வளர்ந்தாள்? எழுபது வருஷங்களாக எவ்வளவு நல்லவராக இருந்தாரோ அவ்வளவு பொல்லாதவராக அவரை மாற்றவா பகவத்கீதையை அவள் விழுந்து விழுந்து போற்றினாள்?

பெரியவர் கையிலிருந்த பகவத்கீதையைப் பிரித்தார். முதல் அத்தியாயத்தின் எட்டாவது பக்கம் சரக்கென்று திறந்து கொண்டது. பகவான், அர்ஜுனனுக்குப் பந்துமித்திரர்கள் என்பதற்காகத் தர்மம் என்கிற ஆண்மையை இழந்து விடக் கூடாது என்பதை உபதேசிக்கிற கட்டம் அங்கே இருந்தது.

பெரியவர் கண்களில் கண்ணன் காட்சி அளிக்கவில்லை; 'மிஸ் இ.பி.கோ.'வுக்கு என்று முகவரி இட்ட கடிதம்தான் பயங்கரப் பைசாசம் போல் தெரிந்தது. நான்குமுறை படித்து உள்ளத்தை மாய்த்துக் கொண்டவர், ஐந்தாவது முறையும் அந்த காரியத்தைச் செய்தார்.

''எந்தன் ஆருயிர்க் காதலி இ.பி.கோ.,

''உனக்காக நான் உயிரைவிடத் தயார். அதற்காக அந்த உயிரை நீ கொஞ்சம் கொஞ்சமாகச் சித்திரவதை செய்யலாமா? பகவத்கீதையும், பாரதமும் நான் வணங்கும் தெய்வீக சித்துக்கள். ஆனால் நீ புகுந்துகொண்ட மனத்தில் அவை வழுக்கிக்கொண்டு ஓடுகின்றன. வயதின் கோளாற்றைப் புரிந்து கொள்ளாத உன் அப்பா, நான் படிக்காத பகவத்கீதையிலிருந்து கேள்விகள் கேட்கிறார். நான் விழிக்கிறேன். என்னை இப்படி அவரிடம் சிக்க வைத்து வேடிக்கை பார்க்கிறாயே, இது நியாயமா?

''என் அப்பாவுக்கு நீதி நியம நெறி நூல்களைப் படிப்பவர்கள் மேலானவர்கள் என்ற நினைப்பு. என்னை நீங்கள் வீட்டுக்கு வந்து அடிக்கடி சந்திக்க விரும்பினாலும், என் அப்பாவின் பிரியத்தைச் சம்பாதித்துப் பிறகு என்னைக் கல்யாணம் செய்து கொள்ள ஆசைப் பட்டாலும், நான் கூறுகிறபடி நடந்து காட்டுங்கள். எங்கள் வீட்டுக்கு வாருங்கள். உங்களை அவரிடம் பகவத்கீதையின் பக்தர் என்று அறிமுகம் செய்து வைக்கிறேன். பிறகு பாருங்களேன்! உங்களைக் கட்டித் தழுவுவார். தம்மிடம் இருக்கும் நூல்களையெல்லாம் கொடுத்து உங்களைப் படிக்கச் சொல்வார். நீங்களும் அப்படியே நடந்து கொள்ளுங்கள். அவர் ரொம்ப ரொம்ப நல்லவர். ஆதலால் நம்முடைய தந்திரத்தைப் புரிந்துகொள்ள மாட்டார். நாமும் விருப்பம் போல் வீட்டில் கூத்தடிக்கலாம். அப்பா தவறாக நினைக்க மாட்டார். ஏனென்றால் உங்களைப் பகவத்கீதை காப்பாற்றிவிடும்' என்றாய். நானும் அதன்படியே செய்து, உன் அப்பாவின் பிரியத்தைச் சம்பாதித்துக் கொண்டேன். ஆனால் வாங்கிய புத்தகத்தைத் திருப்பிக் கொடுக்கும் போதெல்லாம் 'எந்த இடம் உனக்குப் பிடித்தது?' என்று கேட்கிறார். 'மிஸ் இ.பி. கோ.வின் இதயம்' என்று நான் பதில் சொல்ல முடியுமா? எனவேதான் இந்தப் புத்தகத்தை அவரிடம் கொடுக்கப் பயந்து உன்னிடம் கொடுத்து விட்டு ஓடப் போகிறேன். இனித் திட்டத்தை மாற்றினால் தவிர நான் அங்கு தலைகாட்ட முடியாது. ஆனால் உன்னைப் பார்க்காமலும் என்னால் இருக்க முடியாது. சீக்கிரம் மாற்றுத் திட்டம் ஒன்றைத் தயார் செய் என் அன்பே—உன் ராஜா நாராயணன்.''

மிஸ் இ. பி. கோ. யார் என்பதைப் புரிந்து கொள்ள ஆரம்பத்திலிருந்தே அவர் சிரமப் படவில்லை. பெற்றவனை இளிச்சவாயனுக்கப் பிறந்த கோமதிதான் அந்த மிஸ் இ.பி.கோ. அவருடைய பகவத்கீதையின் மேலுள்ள பக்தியை இவள் தன் காதல் களியாட்டத்துக்கல்லவா மடக்கி விட்டுக் கொண்டாள்? சண்டாளி! இது கள்ளச் சாராயம் காய்ச்சுவதை விடக் கேவலமாக இல்லையா?

அயோக்கிய நாராயணன்! எப்படியெல்லாம் வேஷம் போட்டான்? நெற்றி நிறையத் திருநீறு வாய் மணக்க 'ஹரே ராம்'. உத்தமன் என்று அவனை மதித்ததற்கு அள்ளிப் போட்டு விட்டானே ஒரு சட்டி நெருப்பை? தோட்டத்தில் அவனும் கோமதியும் அடித்த கொட்டத்தை யெல்லாம் 'வேதாந்த விசாரம்' என்றல்லவா நினைத்து ஏமாந்து விட்டார்? பெற்றவனின் நல்லதனத்தைக் குருடாக்கி விட்டு அவன் முன்னிலையில் இந்த அநியாயக் காதல் நாடகம் நடந்திருக்கிறது! எங்கேயாவது இப்படி ஒரு கொடுமை நடந்திருக்குமா? தேர்ந்த கேடிகள் கூட இம்மாதிரியான சதியை நடத்தி இருக்க மாட்டார்களே!

அந்தப் பயல் கடிதத்தில் எழுதி இருந்தது போல் கோமதியிடம் புத்தகத்தைக் கொடுத்து விட்டு ஓட முடியாதபடி பெரியவரே வாசலில் நின்று கொண்டிருந்தார். பயல் அப்படியே வீதியோடு நழுவப் பார்த்தான். இவர்தான் விடவில்லை. வீட்டுக்கு அவனை இழுத்துக் கொண்டு வந்து பகவத்கீதையில் கேள்வி கேட்க ஆரம்பித்து விட்டார். ஏதோ கூறி விட்டுத் தப்பித்துக் கொள்ள இருந்தவன் கையிலுள்ள பகவத்கீதை தனக்குள் மறைத்து வைக்கப் பட்டிருந்த ஒன்றைக் காட்டிக்

கொடுத்து விட்டது. அதிலிருந்து பொத்தென்று ஒரு கடிதம் விழுந்தது. பயல் ஆடு திருடிய கள்ளனைப் போல் விழித்தான். அடுத்த விநாடி கிதையையும் போட்டுவிட்டு எடுத்தான் ஓட்டம்.

அவன் அதிர்ச்சி நடத்தைக்குக் காரணம் என்ன? நல்லவருக்குப் புரியவில்லை. இறக்கை ஒடிந்து விழுந்த பறவையைப் போலத் தரையில் கிடந்த கடிதத்தை எடுத்துப் படித்தார். பிறகுதான் அவருக்கு அவன் செய்கையின் பொருள் புரிந்தது. காதலிக்கு எழுதிய கடிதம் அவள் அப்பாவின் காலடியில் சரணடைந்துவிட்டது. இனி ஓட்டம் எடுத்திருக்காவிட்டால் அவன் முதுகு அல்லவா பிளக்கப்பட்டிருக்கும்?

ஆத்திரத்தால் வாயைக் கடித்தார்—பல் இல்லாத தோஷம்! 'காதலினால் மரணம் பொய்யாம்' என்றார் பாரதியார். மரணம் மட்டும் பொய்யல்ல. பெற்றவள் பொய்! பெற்றவன் பொய். குடும்ப மானம், மரியாதை என்பனவெல்லாம் பொய்! காதல் என்பது நிஜமானால் ஏமாற்றத்துக்காளான இத்தனையும் பொய்களாகத்தானே இருக்க வேண்டும்! நினைத்துப் பார்த்த அந்த ஒரேயொரு கணத்தில் அவர் எழுபது வருஷங்களாக அடைந்திராத எழுச்சியைப் பெற்றார்.

ரொம்ப ரொம்ப நல்லவராக இருந்த ஒரேயொரு காரணத்துக்காக இந்த வயதான காலத்தில் இப்படியொரு தாக்குதல் கிடைக்குமானால் அந்த ரொம்ப ரொம்ப நல்லவர் அடியோடு ஒழிக!

ஆமாம், இனி அவர் நல்லவர் இல்லை. ரொம்ப ரொம்பக் கெட்டவர். கோமதியின் காதலைக் கிள்ளி எறியும் வரையிலோ, அதற்கும் அப்பாலோ அவருடைய கெட்டதனம் அயர்ந்திருக்காது.

"கோமதி!..." மனம் கிழிந்து அல்லவா அலறுகிறது? அது வீட்டையே அதிர வைத்தது.

கோமதி அவர் முன்னிலையில் வந்து நின்றாள். அவள் முகத்தில் கலவரமோ, கலக்கமோ இல்லை. இப்படியொரு பூகம்பத்தை முன்னாலேயே எதிர்பார்த்துத் திட்டத்தோடு தயாராக வந்தவள்போல் நிதானத்துடன் அவரைப் பார்த்தாள்.

"உன் பெயர் மிஸ் இ. பி. கோ.வா?" இப்பொழுது அவருடைய கோபம் புலன் விசாரணை ரூபத்தில் மாறியது.

"ஆமாம்!" கொஞ்சமாவது பதற வேண்டுமே அவள்?

"அதன் அர்த்தம்?"

"தெரிந்தவருக்குத் தெரியும். தெரியாதவர்கள் தெரிந்து கொள்ள முடியாது."

"ஏன் தெரிந்து கொள்ள முடியாது? இந்தியன் பினல் கோட்!"

"வைத்துக் கொள்ளுங்கள்!"

"இந்தியன் பினல் கோட் செக்ஷன் 503 என்பது தெரியுமா உனக்கு?"

"இனி தெரிந்து கொள்கிறேன்."

"பிளாக் மெயிலிங்!"

"பிளாக் மெயிலோ? போட் மெயிலோ! அதைப் பற்றி விளக்கம் கொடுக்கவா என்னைக் கூப்பிட்டீர்கள்?"

"விளக்கம் கொடுக்க அல்ல; இ. பி. கோ. 503படி உன்னையும், அந்தத் திருட்டு நாராயணனையும் உள்ளே தள்ளச் சொல்லப் போகிறேன் என்பதைத் தெரிவிக்க!"

"நாங்கள் உள்ளே போகத் தயார். அதற்காக நீங்கள் ஏன் தள்ள வேண்டும்? அப்படி நாங்கள் என்ன தவறு செய்தோம்?"

"காதலித்தீர்கள். அது தவறல்லவா?"

"தவறாக இருக்கலாம். ஆனால் அது எப்படி பிளாக் மெயிலாகும்?"

"என் நல்லதனத்தை 'பிளாக் மெயில்' செய்வதற்கு நீ திட்டம் போட்டுக் கொடுத்தாய். அதை அந்தப் பயல் செய்து கொண்டிருந்தான்."

"இது இ. பி. கோ. 503 அல்ல. மோசடிக் கேஸ் இது. இ.பி.கோ. செக்ஷன் 420தான் இதற்குப் பொருத்தமாகும்."

பெரியவர் நாக்கைக் கடித்துக் கொண்டார். 'டிபார்ட்மெண்டை விட்டதும் செக்ஷன்கள் கூட அல்லவா மறந்து போய்விட்டன? இவள் காதலையும் வேறு செய்து விட்டு எத்தனை



நெஞ்சழுத்தத்துடன் செக்ஷன் மாறாட்டத்தை விளாசித் தள்ளுகிறாள்? ஒரே பெண்ணாயிற்றே என்று செல்லம் கொடுத்து வளர்த்ததற்கு இப்பொழுது தலையில் ஏறுகிறாள். இதற்கு ஒரு முடிவு கட்ட வேண்டும்.'

"கோமதி! நடந்ததை மன்னித்து விடுகிறேன். இனியாவது நல்ல பெண்ணாக நடந்துகொள்."

"எப்படி?"

"காதலை மறந்துவிடு."

"அப்பா!...

"அலறாதே!....,வேண்டுமானால் காதலை ஞாபகத்தில் வைத்துக்கொள். அந்த நாராயணனை மறந்துவிடு."

"அவரை மறப்பதா? இந்த ஜன்மத்தில் அது சாத்தியமில்லை அப்பா! அதைவிட விஷத்தைக் கொடுங்கள். குடித்துவிட்டு ஆனந்தமாகச் சாகிறேன்."

"நீ சாவதற்குத் தயாராக இருந்தால் சரியாகப் போயிற்றே? நீ செத்துப் போனால் நாங்களும் உடனே செத்துப் போவோமே!

அப்படிச் சாவதற்கு நாங்கள் தயாராக இல்லாதபடியினால் உன்னைச் சாகடிக்க முடியாது. அதற்குப் பதிலாக அந்தப் படுகாலிப் பயலை ஜெயிலில் தள்ள ஏற்பாடு செய்வேன், அங்கே அவனைச் சாகடிக்கச் செய்வேன்!''

''அப்படியானால் என்னையும் அந்த ஜெயிலில் தள்ளச் செய்யுங்கள். மரணத்திலாவது நாங்கள் ஒன்று சேர்கிறோம்.''

''அத்தனை தூரத்துக்கு வந்துவிட்டாயா?''

''வரச் செய்து விட்டீர்கள்.''

''பகவத்கீதையைப் படித்த பெண் பேசும் பேச்சா இது? அவனுக்காகப் பெற்றவர்களான எங்களை யெல்லாம் உதறி விடுவது பாவம் இல்லையா?''

''உங்களை உதறவில்லை. காதலைக் கண்டு நீங்கள்தான் உதறல் எடுத்து அலைகிறீர்கள். காரணம் உங்கள் மாஜித் தொழில். தடித்த உணர்ச்சிகளுள்ள குற்றவாளிகளோடு பழகிப் பழகி நீங்கள் மெல்லிய உணர்ச்சியின் இன்பக் காதலைப் புரிந்து கொள்ளாதவராகப் போனீர்கள். புரிந்து கொண்டவர்களையும் வாழவிடமாட்டீர்கள். உயர்ந்த இலட்சியம் ஒன்றுக்கு இடையூறாகத் தோன்றும் எதிரிகள் பெற்றவர்களாகவோ சுற்றத்தினராகவோ இருந்தாலும் அவர்களை உதறிவிட்டுச் செல்லக் கீதை அனுமதிக்கிறது.''

''எது அனுமதித்தாலும் நான் அனுமதிக்க மாட்டேன். சிறையில் உன் நாராயணன். வீட்டில் நீ. அடுத்த முகூர்த்தத்தில் உனக்குத் திருச்சானூரில் திருமணம். இம்முடிவுகள் நிறைவேறும் வரை நான் ரொம்ப ரொம்பக் கெட்டவனாக இருப்பேன்.''

எதுவும் சொல்ல முடியாதபோது வடிக்கத் தயாராக இருந்த கோமதியின் கண்கள் வெம்பனி கொட்டியது. அவள் அங்கே வருவதற்கு முன்னால் எந்த ஒரு இட்டத்தோடு வந்தாளோ. அந்தத் திட்டம் கண்ணீரில் கரைந்து அழிந்தது. துவண்ட கால்கள் குழைய, அந்த அறையை விட்டு வேகமாக வெளியேறினாள்.

எதிலும் சம்பந்தப்படாமல், எதையும் எதிர்பார்க்காமல் பழையகாலத்து மனுஷியாக அறுபது வருஷங்களை வாழ்க்கையில் கடத்தி விட்ட ஆண்டாள், வராந்தாவில் நின்று அறையில் நடந்து முடிந்த ஏசலையும், சவாலையும் கேட்டுப் பெருமூச்செறிந்தாள்.

கெட்ட மனிதராக மாறியிருந்த பெரியவர் அந்தக் காட்சியைப் பார்த்தார். ஆண்டாளும் கலந்துகொண்டிருக்க வேண்டிய ஒரு காரியம் அவள் இல்லாமலே அத்துபடியாகி விட்டது. இப்படித்தான் பெரியவர் சம்பந்தப்பட்ட எல்லாக் காரியங்களும் அவள் கலந்து கொள்ளாமலே நடந்து வந்திருக்கின்றன. அவளுடைய உணர்ச்சிகளுக்கு அது தாபப்படவும், அனுசரித்துப் போகவும் கூடிய கருணை அவரிடம் இல்லாமலே போனதற்கு அவருடைய பெற்றவர்கள் ஒரு காரணம். உத்தியோகம் மற்றொரு காரணம். ஒரே வீட்டில் வைத்துக்கொண்டு புருஷனையும் மனைவியையும் சண்டைக்காரர்களைப் போலப் பழக்கி விடுவது அந்தக் காலத்திய நாகரிகம். பெரியவர்களுக்காக அப்படி நடக்கப் போய் தம் பெரியவரின் சுபாவமே அதுவாகிவிட்டது.

கோமதியைப் போலக் காதலை இ. பி. கோ. செக்ஷன் ரீதியில் விளக்கத் தெரியாதவளாக இருக்கலாம் ஆண்டாள். ஆனால் அவளுடைய உள்ளத்தில் பொங்கி நின்ற காதலைப் போன்ற ஏதோ ஓர் ஆவேசத்தை அவளாவது விளங்கிக் கொண்டிருப்பாள் அல்லவா! அவளிடம் நெருங்கி, தன் இதமான மனத்தால் அவள் ஆவேசத்தை அணைபோட்டு நிறுத்தும் நினைப்பு அவருக்கு எப்பொழுதாவது இருந்திருக்கிறதா? உத்தியோகம் என்று ஓடினார். அயர்ந்து சளிசேரில் வந்து விழும் வயது வரையில் ஓடினார்.

அவளைக் கையைப் பிடித்த மாதிரி பிடித்து ஐம்பது வருஷங்களாகத் தூரத்திலேயே நிறுத்தி வைத்துவிட்ட கொடுமை இப்போது அவரைத் தகித்தது.

இந்தத் தகிப்பு இப்பொழுது ஏற்பட்டது தானா? இல்லை. என்று ஆண்டாளை மனுஷியாக, மனைவியாக அவர் நினைக்கவில்லையோ அன்றே இந்தத் தகிப்பு எழுந்து விட்டது. அது அவரைச் சூழ்ந்து படரத்தான் எத்தனை ஆண்டுகள் நீளம் நீளமாக? ஐம்பது வருஷங்கள்!

அந்தத் தகிப்பை உண்மையிலேயே சூழ விட்டவள் கோமதி அல்லவா! தொழில் துறையில் தடித்துப்போன உணர்ச்சிகளால்தான் மெல்லிய உணர்வு அலைகளை அவரால் புரிந்துகொள்ள முடியவில்லை என்று சாட்டை அடி கொடுத்தவள் அவள்தானே? சாட்டை அடி கிடைத்திருக்கா விட்டால் அந்தத் தகிப்பை இன்னும் உணர முடியாத, ஸ்மரணையற்ற ஜடமாகத்தான் இருந்திருப்பார்.

கெட்ட மனிதனுக்குயிதிலும் ஒரு நன்மையா?

ஆண்டாள் பழங் காலத்து அசல் ஹிந்து மனைவி. அவள் ஒரு வெள்ளைக்காரியாக இருந்திருந்தால் தன் உபயோகமற்ற கணவனை என்றோ உதறிவிட்டுப் போயிருப்பாள். இந்த அழகான சமூக அமைப்பால் எத்தனை கொடுமைக்காரக் கணவர்கள் கொட்டம் அடிக்கிறார்கள்?

தன்னையே கண்ணாடியாக வைத்துச் சமூகத்தைப் பார்த்தபோது நெல்லுக்கு இறைத்த நீரை மறைந்து அருந்தி சுகஜீவியாய் வாழும் எத்தனையோ புல் கூட்டத்தைப் பார்த்தார். பிறகு தம்மைப் பார்த்தார். நடந்து போய்க் கொண்டிருக்கும் ஆண்டாளைப் பார்த்தார்.

''ஆண்டாள்!...''

போனவள் திரும்பினாள்.

''இங்கே வா!''

வந்தாள். ஆனால் பத்தடிக்கு அப்பாலேயே நின்றாள். ஐம்பது வருஷ உறவின் இடைவெளி அது!

''நெருங்கி வா.''

தயங்கினாள்.

அவரே எழுந்து வந்தார். அவள் கைகளைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டார்.

பட்டப் பகல். என்றும் இல்லாத அதிசயம் வேறே! வெட்கமும் பயமும் அவள் முகத்தில் வண்ணம் காட்டின. அறுபது வயசானாலும் அவள் பெண்தானே! ''என்ன இதெல்லாம்? கையை விடுங்கள்.''

''விடமாட்டேன்! உன்னை வாழ்க்கை முழுதும் அலட்சியப் படுத்திவிட்டேன். இல்லையா?

கன்மையைச் சொல்; என்றாவது இதற்காகக் கண்ணீர் விட்டிருப்பாயா?''

''ஏன் விடுகிறேன்? உங்களைக் கைப்பிடிக்க நான் எவ்வளவு அதிர்ஷ்டம் செய்திருக்க வேண்டும்?'' கையை அவள் விடுவித்துக் கொள்ள முயலவில்லை. அப்படி ஒரு பிடிப்பை ஒன்பது ஜன்மங்களாக விரும்பியவள்போல் மெய் மறந்து போனாள்.

''இதுவரை ஆசையோடு உனக்கு ஒரு முழக் கதம்பம் வாங்கிக் கொடுத்திருக்கிறேனா? நல்ல தனமாக நாலு வார்த்தை பேசி இருக்கிறேனா? எந்தவிதத்தில் நான் கிடைத்ததில் உனக்கு அதிர்ஷ்டம்?''

''நாம் உரக்கப் பேசிக் கொள்ளவில்லை. பிறர் கண்டு திடுக்கிடும் மாதிரியில் சத்தம் போட்டுக் கொள்ளவில்லை. ஆனால் மிக மிக மெதுவாக, மனத்துக்கு மனம் பேசிக் கொண்டோம். மனமும் ஊமையாகி விட்டிருந்தால் ஒரு பெண்ணால் வாழ முடியாது!''

அவளை அவர் சாதாரணமாக, ஜடமாக நினைத்திருந்தார். எப்படிப் பேசுகிறாள்? பேசிப் பார்த்த பிறகல்லவோ தெரிகிறது. அவள் பெருமை? இத்தனை காலமாக நிமிஷத்துக்கு நிமிஷம் அநுபவித்து ரஸிக்க வேண்டிய அவள் சொல்லின் சுவையை அருந்தாமல் பாழாக்கி விட்டாரே!

''ஆண்டாள் நீ உயர்ந்தவள். உன்னை மனைவியாக அடைந்தது என் அதிர்ஷ்டம். இந்த அதிர்ஷ்டத்தை எழுபது வயதில் உணர்கிறேனே! ஐயோ, எனக்குத் திடீரென்று முப்பது வயதாகி விடக்கூடாதா? நீ இருபது வயதுக் குமரியாகி விடலாகாதா?...முதுமை துரத்துகிறதே! திடீரென்று கிடைத்த அதிர்ஷ்டத்தைக் தட்டிப் பறித்துக்கொள்ள வளர்கிறதே வயது!...ஆண்டாள், இருமனம் கலக்கும் இன்ப வேதனை நமக்கு இப்பொழுது தானா ஏற்படவேண்டும்? இதை எப்படிச் சகிப்பேன்? இனி வயதில்லையே, நாளில்லையே! யாராவது வயதுப் பிச்சை தருவார்களா? வாலிபப் பிச்சை தருவார்களா?...யாரும் தராவிட்டால் நம்மில் ஒருவர் சீக்கிரமே பிரிவோம். நாம் பிரியக் கூடாது. பிரிவு வேதனை கொடுமையானது. அதை நானும் தாங்கமாட்டேன். நீயும் தாங்கமாட்டாய்..'' பெரியவரின் குரல் நீராகி வழிந்தது.

அப்பொழுது செருமல் சத்தம் ஒன்று அறையினுள் புதிய பிரேமையால் தத்தளித்த கிழத் தம்பதிகளை உலுக்கியது. பெரியவரின் பிடி தளர்ந்தது. ஆண்டாள் காம்பிலிருந்து அவிழ்ந்த மலர்போல விலகி நின்றாள்.

தலை தெரியவில்லை. குரல் கேட்டது. ''வருகலாமோ?''

''வரலாமே...'' சரணம் பறிபோன ஏமாற்றத்தில் ராகம் இழுத்தார் பெரியவர்.

வந்தவள் கோமதி. ''இங்கே வராமலே போயிருப்பேன். ஆனால் என் வாழ்க்கை

இங்கே என்னைத் தள்ளிக்கொண்டு வந்துவிட்டது. மன்னியுங்கள், அப்பா! கடைசியில் அம்மாவிடம் என்ன சொன்னீர்கள்? 'பிரிவின் வேதனை கொடுமையானது. அதை நானும் தாங்கமாட்டேன். நீயும் தாங்கமாட்டாய்' என்றுதானே? இது உங்களுக்கு மட்டும்தானா? எங்களுக்கு இல்லையா? பிரிவு வேதனையை நாங்கள் மட்டும் தாங்குவோம் என்று எப்படி அப்பா நினைத்தீர்கள்? உங்களுக்கு வயதில்லை, வாலிபம் இல்லை என்று வருத்தப்பட்டுக் கொண்டீர்களே, அவை எங்களுக்கு இருக்கின்றன. உங்கள் அநுமதிதான் வேண்டும். தயவுசெய்து அவரைச் சிறையில் தள்ளிவிடாதீர்கள். அவர் பிரிவை நான் தாங்கமாட்டேன்!'' என்று பேச்சாக ரைந்தாள்; காந்தாக மின்னினாள்; கண்ணீராகப் பொழிந்தாள்.

''பேசாதே!'' என்று காட்டுக் கத்தாகக் கத்திய பெரியவர் வேலைக்காரனை அழைத்தார். நாராயணனை இழுத்துக் கொண்டு வரும்படி அவனை விரட்டி அடித்தார்.

'நாளைக்கு வரும் பூதத்தை இன்றே எழுப்பி விட்டோமா?' கோமதியின் உள்ளம் அசைவற்று நின்றது.

அடுத்த சில நிமிஷங்களுக்குள் நாராயணன் அவர் எதிரே நடுக்கத்துடன் வந்து நின்று கொண்டிருந்தான்.

பெரியவரின் பெரிய கண்கள் அவனைச் சிறுகச் சிறுகத் துளைத்தன. ''நாராயணா! நீ கோமதியைக் காதலிக்கிறாயா?''

இப்பொழுது நாராயணன் நடுங்கவில்லை. ''காதலிக்கிறேன்.''





''எதற்காகக் காதலிக்கிறாய்?''

''தெரியாது.''

''எனக்குத் தெரிந்தால் உன்னை என்ன செய்வேன் என்பதாவது தெரியுமா?''

''தெரியும்.''

''என்ன தெரியும்?''

''எனக்கு உடனே நீங்கள் தண்டனை கொடுப்பீர்கள் என்பது.''

''அப்படியே தண்டனையும் கொடுத்தால்?''

''தளரமாட்டேன். கோமதியைக் காதலிப்பேன். என் இதயமும் மூச்சும் உள்ளவரை காதலித்துக் கொண்டே இருப்பேன்.''

'ஏன் கல்யாணம் செய்து கொள்ள மாட்டாயோ?''

''என்ன?''

''ஏன் வாயைப் பிளக்கிறாய்? உன் மனத்தின் அழுத்தத்தைத் தெரிந்து கொண்ட பிறகும் உங்களைச் சும்மா காதலிக்க விட்டுக் கொண்டிருப்பேனா? உடனே கல்யாணம்தான்.''

கோமதி தன்னையும் மறந்து கூவினாள். ''அப்...பா!''

''ஆமாம்மா. வாழ்க்கையின் உயர்வை என் எழுபது வயதில் எனக்கு உபதேசித்தவள் ஆயிற்றே நீ! அதற்கு நன்றியாகத்தான் உங்கள் காதலைப் போற்றுகிறேனே தவிர, ஏமாந்தல்ல. நீ கெட்டிக்காரப் பெண் கோமதி! நான் நல்லவனாக இருந்தபோது என்னிடமிருந்த பலவீனத்தை உபயோகப்படுத்தி, நாராயணனைக் கிளைப் பிரியனாக எனக்கு அறிமுகம் செய்து என்னை ஏமாற்றினாய். பிறகு நான் கெட்டவனாகப் போவதாகச் சவால் விட்டேன். அங்கேயும் என்னிடமிருந்த பலவீனத்தை உசுப்பிவிட்டாய். அதனால் ஏவப்பட்டு நான் உன் அம்மாவின் காலடியில்போய் விழுந்தேன். அங்கும் பலவீனனாகி 'உளறிய' சந்தர்ப்பத்தில் நீ திமிர்ப் பிரவேசம் செய்து நீதி கேட்டு நின்றாய். கோமதி. நீதி உனக்கு, நாராயணா. நிதி உனக்கு!'' அவரின் நீண்டு சுருங்கிய விரல்கள் கோமதியின் பக்கம் இருந்தன.

''நான் ஒன்று கேட்கலாமா? மிஸ் இ. பி. கோ. என்று அடிபட்டதே! அதென்ன இ. பி. கோ.?'' என்று முதன் முறையாகத் தன் ஆவலைக் காட்டிக் கொண்டான் ஆண்டாள்.

''அதுவாம்மா. அப்பா பெயர் பிச்சமூர்த்தி. அதனால் நான் பி. கோமதி இல்லையா? நாராயணன் அதற்கு முன்னால் 'இனிய' என்ற அடைமொழியுடன் அழைக்க விரும்பினார்—! உங்களையெல்லாம் ஏமாற்றுவதற்காக இந்த மூன்றின் முதல் எழுத்துக்களை இ. பி.கோ. என்று சுருக்கி வைத்தார்!'' என்று மூன்றாம் பிறைபோலச் சிரித்தாள் கோமதி.

சிரித்தவளுக்குப் பிறகு பேச முடியவில்லை. தன்னைப் பாத்தியதையுடன் விழுங்கிக்கொண்டிருந்த நாராயணனின் விழிகளுக்குள் அவள் மறைந்துவிட்டாள்.

அந்த இளமை உலகத்தின் பாய்ச்சலைக் கடனாகப் பெற்று, நிதானத்துடன் அள்ளி மென்றன இரண்டு ஜோடிக் கிழட்டுக் கண்கள்.



வரவேற்பு அறை



சாப்பாட்டு அறை





படுக்கையறை

# பூர்வ கதை

தமிழக வரலாற்றில் பொன்னொளி பரப்பி நிற்கும் பதினோராம் நூற்றாண்டின் பிறப்புக் காலம். பிற்காலச் சோழர் பரம்பரையின் வழித் தோன்றலான முதலாம் இராஜேந்திரர் செங்கோலோச்சி வருகிறார்.

தமது தந்தையார் இராஜராஜ சோழர் அமைத்துக் கொடுத்த அடிப்படையின் மேல் மாபெரும் சாம்ராஜ்ய மாளிகை எழுப்ப விரும்புகிறார் இராஜேந்திரர். உலக நாடுகளின் முன்னிலையில் தமிழரது சாம்ராஜ்யம் தலை நிமிர்ந்து நிற்க வேண்டும் என்று கனவு காண்கிறார்.

ஆனால் அவர் கனவு நனவாகப் பல தடைகள். சோழ சாம்ராஜ்யத்தைக் குலைப்பதற்காகப் பாண்டியர்கள் தக்க சமயத்தை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். தெற்கே ஈழநாட்டரசர் மகிந்தரோடும், வடக்கே மேலைச் சளுக்கரோடும் உறவுபூண்டு சோழப் பேரரசைக் கவிழ்க்க வேண்டுமென்பது பாண்டியர்களின் திட்டம்.

இராஜேந்திர சோழர் நாட்டு மக்களுக்குப் போராட்டச் சக்தியை ஊட்ட, ஊக்கமும் உற்சாகமும் தர நினைக்கிறார். அவர்களுக்குப் புத்துயிர் அளிக்கும் சக்தி ராஜசிம்ம பாண்டியன் கோழைத்தனமாக ஈழத்து மன்னனிடம் கொடுத்து விட்டுத் திரும்பிய மணிமுடியைத் திரும்பக் கொணருவதில்தான் இருக்கிறது என உணர்கிறார். தமிழ்நாடு முழுவதும் சோழப் பேரரசுக்குள் இருந்த போதிலும் பாண்டியப் பகுதி மட்டிலும் தங்களிடமே இருக்கிறது என்று ஈழத்து அரசர் பறைசாற்றிக் கொண்டிருந்தார். சோழர்களுக்குத் திறை செலுத்திய போதிலும் பாண்டியர்களும் அதை ஒப்புக் கொண்டு பெருமை வேறு பேசினார்கள். இதற்கு முன்னால் மூன்று முறைகள் போர் தொடுத்தும் அதைக் கொணர முடியவில்லை. வேங்கைகள் உலவும் தமிழகத்தின் மானம் ரோகணத்துக் காட்டில் நரிப்புதருக்குள் சிறைப்பட்டிருப்பதைப் பொறுக்காத மாமன்னர், ''நமது முதற் போர் தமிழனுடைய மணிமுடிக்காக; சோழ மண்டலத்தை மேலைச் சளுக்கரும் பாண்டிய சேரரும் ஒன்று சேர்ந்து அழித்தாலும் அழித்துக் கொள்ளட்டும்'' என்று கர்ஜிக்கிறார்.

''சோழ மண்டலத்தின் வீடுதோறும் பாசறைகள். கடல் போன்ற பெரும் படையுடன் கடலைக் கடப்போம்'' என்கிறார் மதுராந்தகவேளார். இராஜேந்திர சோழரின் நாட்டமைச்சர் அவர். அவர் மகன் இளங்கோவேள் சக்கரவர்த்திகளிடம் ''ஈழத்துக்குச் செல்லும் பாக்கியம் எனக்கும் கிட்ட வேண்டும்'' என்று விண்ணப்பித்துக் கொள்கிறான். ''நீயும் வருகிறாய்'' என்கிறார் மாமன்னர். ''நீ மணிமுடியோடுதான் திரும்ப வேண்டும். நீ திரும்பா விட்டாலும் மணிமுடி திரும்ப வேண்டும்'' என்று கூறித் தமது ஒரே மகனைப் போருக்குச் செல்ல அனுமதியளிக்கிறார் வீர வேளிர்குலத்தைச் சேர்ந்த மதுராந்தகர்.

அருகே நின்று அதைக் கேட்டுக் கொண்டிருந்த இராஜேந்திரனின் புதல்வி அருள்மொழிநங்கை பெருமூச்சுடன் அரண்மனைப் பூங்காவுக்குள் புகுந்து நிலவிலே ஒரு பொற்சிலையாகச் சமைந்து விடுகிறாள். ''ஈழத்துக்குச் செல்லத் துடிக்கும் இளவல் இன்னல் ஏதும் இல்லாமல் திரும்ப வேண்டுமே'' என்று அவள் தவித்துக் கொண்டிருந்த போது



இளங்கோ அங்கு வருகிறான். "வெற்றி அல்லது வீர மரணம்" என வாளின்மேல் ஆணை இட்ட அவனிடம் "வீரமும் வேண்டும்; விவேகமும் வேண்டும்" என்று உபதேசிக்கிறாள் அருள்மொழி. வெற்றி பெறவும் வேண்டும்; திரும்பி வரவும் வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறாள். சக்கரவர்த்தித் திருமகள் மனம் விட்டுப் பேச முடியுமா?

நிலவில் கொடும்பாளூர் இளவரசனும் அருள்மொழியும் பேசியதை இளங்கோவின் நண்பன் வீரமல்ல முத்தரையன் கேட்டுக் கொண்டிருந்து விட்டு அவனைக் கேலி செய்கிறான். கொடும்பாளூர் வேளிர் குலத்துக்கும் சோழர்களுக்குமிடையே இருந்து வந்த நெருங்கிய நட்புறவு வீரமல்ல முத்தரையனின் உள்ளத்தில் பொறாமைத் தீயை வளர்க்கிறது. அவனால் தன் முன்னோர்கள் சீரும் சிறப்புமாக வாழ்ந்து வந்ததையும் இப்போது சோழர்களுக்குக் கீழ்ப்பணிந்து வாழவேண்டியிருப்பதையும் ஒப்பிட்டுப் பார்க்காமல் இருக்க முடியவில்லை. ஒப்பிட்டுப் பார்த்த பின் பொறாமைப் படாமலும் இருக்க முடியவில்லை. நண்பனுடைய கேலிப்பேச்சு பிடிக்கவில்லை என்றாலும் அவனுக்காக மாமன்னரிடம் பரிந்துபேசுகிறான் இளங்கோ. பாண்டிப் பகுதியில் வணிகனாக இருந்து நாட்டின் நடப்பறிந்து அப்போதைக்கப்போது மதுரையில் மாதண்டநாயகர் கிருஷ்ணன் ராமனிடம் சொல்ல வேண்டும் என்று வீரமல்லனுக்குக் கட்டளையிடுகிறார் மாமன்னர். ஈழப்போருக்குச் செல்ல எண்ணியவனுக்கு ஒற்றனாக உளவறியச் செல்லப் பிடிக்கவில்லை. மாமன்னரின் கட்டளையை மறுதளிக்கவும் அவனால் முடியவில்லை.

ஈழத்துக்குச் செல்ல வேங்கையின் மைந்தர் மரக்கலங்களாலேயே ஒரு பாலம் அமைத்து விட்டார்! திருமறைக்காட்டிலே அவரது கடைசிக்கலம் மிதக்க முதற்கலமோ ஈழத்தின் வடக்குக் கரை கண்ட ஆனந்தத்தில் கடல் அலைகளின் மேல் அற்புத நடனம் புரிந்து கொண்டிருந்தது!

படைகள் அனைத்தும் ஈழத்தில் இறங்கியிருக்க வல்லவரையரும் இளங்கோவும் மன்னர் மகிந்தர் ஆட்சியில் இருந்து வந்த ரோகணப் பகுதிக்குத் தூதுவர்களாக மாறுவேஷத்தில் செல்கிறார்கள்.

மணிமுடியைக் கொடுத்து விட்டு ரோகணத்து அரசராக, சோழப் பேரரசின் நண்பராக வாழும்படி கேட்டுக் கொள்கிறார்கள். மன்னர் மகிந்தர் வாய் திறக்கவில்லை. அமைச்சர் கீர்த்தி சீறுகிறார். "மூன்று முறை முயன்று பார்த்தார்களே, முடிந்ததா?" என்கிறார். "மூன்று முறை பதுங்கிய வேங்கை இப்போது பாய்ந்து முடியுடன் திரும்பப் போகிறது" என்று வீரம் பேசுகிறான் இளங்கோ. மன்னர் பதுங்க, மதியமைச்சர் "பாயட்டும், பார்ப்போம்" என்கிறார்.

போர் தொடங்குகிறது. இளங்கோ உக்கிரமான யுத்தகளத்தில் புயலெனப் புகுந்து போர் புரிகிறான். அவன் திரும்பிய திசையெல்லாம் ரோகணத்து வீரர்கள் சரிந்து வீழ்கின்றனர். சோழநாட்டு வீரர்கள் புத்துயிர் பெறுகின்றனர். மகிந்தரின் வீரர்கள் கோட்டைக்குள் பதுங்க, முற்றுகை தொடங்குகிறது. மத்தகம் மதம் சொரிய, சிறு கண்கள் செந்நீர் பாய்ச்ச, தந்தங்கள் முத்துதிர்க்கக் கலகலத்து விழுகின்றன கப்பகல்லகம் கோட்டைக் கதவுகள்.

உள்ளே பாய்ந்த இளங்கோ நேரே அரண்மனைக்குச் செல்கிறான். மகிந்தரைக் காணோம். அவர் மகன், சிறுவன் காசிபன் அவனைப் போருக்கு அழைக்கிறான். அவனை எட்டிப் பிடிக்க முயன்றபோது மென்தளிர்க்கரம்ஒன்று



அவனைத் தடுத்து நிறுத்துகிறது. அந்த வேல் விழியாள் ரோகிணியிடமிருந்து தன்னை மீட்டுக் கொண்டு வருவதற்குள் இளவரசன் காசிபன் அமைச்சர் கீர்த்தியுடன் தப்பி ஓடிவிடுகிறான். அந்தப்புரத்தில் வல்லவரையரும் இளங்கோவும் மணிமுடியைத் தேடி ஏமாறுகிறார்கள்.

அன்று இரவு காவலர்களை அனுப்பிவிட்டு வல்லவரையரும் இளங்கோவும் தூங்குவது போல் பாவனை செய்கிறார்கள். அவர்கள் எதிர் பார்த்தது வீண் போகவில்லை. இளவரசி ரோகிணி ஒரு பேழையுடன் வெளியே வருகிறாள். அந்தப்புரத்தை அடுத்த விசாலமான முற்றத்தில் வடக்கு வாயிலருகே நின்ற கல் யானைகளில் ஒன்றுக்குள் இருந்த குடவரையில் பேழையை மறைத்து வைக்கிறாள். கோட்டை மதிலில் இருந்த ரகசியக் கதவு வழியாக வெளியேறப் பார்க்கிறாள். மதிலுக்கு அப்பால் இருக்கும் இளங்கோவேள் அவள் முகத்தை மறைத்திருந்த மென் திரையை வாள் முனையால் விலக்குகிறான். 'அமாவாசை இரவில் பூரண சந்திரோதயமா?' என வியக்கிறான் இளங்கோவேள்.

அவள் திரும்பச் சென்ற பிறகு அவள் ஒளித்து வைத்த பேழையைத் திறந்து பார்க்கிறார்கள். மணிமுடி இருக்கிறது. ஆனால் அவர்கள் தேடிவந்த மணிமுடியல்ல! ரோகணத்தரசர் மகிந்தரின் மணிமுடி அது!

* * *

வணிகனாக மாறிய வீரமல்லன் மதுரையில் சுந்தரபாண்டியனின் அந்தரங்க நண்பர் பெரும்பிடுகு முத்தரையரின் சிறிய மாளிகைக்குப் பட்டாடைகள் விற்கச் செல்கிறான். சோழர்கள் தன்னை மதிக்காததால் வணிகனாக மாறிவிட்டதாகக் கூறிக்கொண்டு உளவறியச் சென்ற அவனுடைய உள்ளமும் மாறுகிறது. பெரும்பிடுகு முத்தரையர் வீரமல்லனுக்கு ஏற்கெனவே சோழர்களிடம் இருந்த வெறுப்பை வளர்க்கிறார். "நீ ஒரு முத்தரையன். சோழர்களின் பழங்காலப் பகைவன். ஈழத்துக்கு உன்னை ஏன் அவர்கள் அழைத்துச் செல்லவில்லை? உன் வீரத்தில் என்ன குறையைக் கண்டார்கள்? உன்னை மதிக்காதவர்களை மிதித்தெறியும் வாய்ப் கிடைக்கப்போகிறது" என்று ஆசை காட்டுகிறார்.

இரண்டு முத்தரையர்களும் இணைய மற்றொரு காரணம், பெரும்பிடுகு முத்தரையரின் செல்வ மகள் திலகவதி. நேரில் காணும் போது நினைவழிக்கக்கூடிய ஏதோ ஒரு மோகன சக்தி அவளிடம் இருக்கிறது. சுந்தரபாண்டியனிடமும் அவனை அறிமுகம் செய்கிறார் பெரும்பிடுகு முத்தரையர். சோழர்களுக் கெதிராக நடக்கும் பல சதித் திட்டங்களையும் அவன் அவர்கள் மூலமாகத் தெரிந்து கொள்கிறான். மாமன்னர் ஈழத்தில் இருக்கும்போது அவர் மதுரையில் பெரிய மாளிகை கட்டச் சொன்னதைக் காரணம் காட்டி மதுரையில் இருக்கும் ஆயிரக்கணக்கான சோழப் படைவீரர்களைத் தாக்கி அழித்துவிட ஏற்பாடு. இதையெல்லாம் விவரமாகத் தெரிந்துகொண்ட அவன் இருமன வீரனாகத் தவிக்கிறான். சேனாபதி கிருஷ்ணன் ராமனிடம் தனக்குத் தெரிந்தவற்றில் ஒரு பகுதியை மட்டும் கூறுகிறான். "தஞ்சைக்குப் போய்ப் படைத் தலைமையை ஒப்புக்கொள்" என்கிறார் அவர்.

* * *

ரோகிணி தன்னைக் குழந்தைப் பருவம் முதல் தூக்கி வளர்த்த கந்துலனுடன் மாறு வேஷத்தில் தன் தந்தை மகிந்தர் மறைந்திருந்த கானகத்துக்குள் செல்கிறாள். அவள் அறியாமல் இளங்கோவேள் அவளை மாறு வேஷத்தில் பின் தொடருகிறான். பல நாட்கள் பிரிந்திருந்த தந்தையும் மகளும் பேசுவதற்கு எவ்வளவோ இருக்கின்றன.

ஒருவரும் அறியாது குகைக்குள் துணிந்து நுழைந்து விடுகிறான் இளங்கோ. ஆபத்தான நிலையில் இருந்து அவர்கள் அளவளாவுவதைக் கேட்கிறான். மணிமுடியைப் பற்றிப் பேச்சு வந்ததும் ஆர்வத்துடன் அவன் இன்னும் நெருங்கி வந்து காதுகளைத் தீட்டிக்கொண்டு எல்லாவற்றையும் தெரிந்து கொள்கிறான். அவனைக் கண்டுவிட்ட ரோகிணி 'ஒற்றன்! ஒற்றன்!' என அலறிவிடுகிறாள். அவன் வேஷம் கலைந்த பின்னர், தானே அவனுக்கு எமனாக வந்தது குறித்து வேதனைப்படுகிறான். வீரன் கோழை



யிடம்! அகப்பட்டுக் கொண்டதுடன் மரண தண்டனையும் பெறுகிறான்.

எமனாக வந்த ரோகிணியே தன் புத்தி கூர்மையால் அவனைக் காப்பாற்றவும் செய்கிறாள், இளங்கோவுடன் மற்றொரு ஒற்றனும் வந்திருப்பதாகக் கூறி; தப்பிவிட்ட அவன் மாமன்னரிடம் நமது இருப்பிடத்தைச் சொல்லி விட்டால் படை திரண்டு வந்து நம்மை அழித்துவிடும் என்றும் அந்தப்புரத்தில் தனியே இருந்த மகிஷியைப் பழிவாங்கி விடுவார்கள் என்றும் பயமுறுத்துகிறாள். கோழை மகிந்தர் பயந்துபோய் இளங்கோவை மன்னித்ததுடனல்லாமல் ரோகிணியையும் அழைத்துக் கொண்டு உடனடியாகக் கப்பகல்லகத்துக்குத் திரும்புகிறார்.

கோட்டை வாயிலில் நுழையப் போகும் போது ஒரு கூரம்பு அவர் ஆரோகணித்திருக்கும் குதிரையின் பிடரியில் பாய்கிறது. அதன் பின்புறத்தில் ஒரு தறுக்கோலை கட்டியிருக்கிறது. மகிந்தர் அறியாதவாறு அவர் மடியிலிருந்து அதை உருவிக்கொண்ட வல்லவரையர் மாமன்னரிடம் சேர்ப்பிக்கிறார். அமைச்சர் கீர்த்தி எழுதிய ஓலை அது. சோழர்களுடைய நிபந்தனைக்கு அவரும் இளவரசன் காசிபனும் கட்டுப்பட மாட்டார்கள் என ஓலையில் கண்டிருக்கிறது.

விடுதலை பெற்ற இளங்கோ மணிமுடி இருக்கும் முதலைச் சுனைக்குச் செல்கிறான். முதலையின் சாம்ராஜ்யத்துக்குள் புகுந்து தன் வீரத்தையும் உயிரையும் பணயம் வைத்துப் போராடுகிறான். வெற்றிபெற்று மணிமுடியுடன் சுனையை விட்டு வெளியேறும்போது காவலிருந்த வீரர்கள் அவனைச் சூழ்ந்துகொள்கிறார்கள். ஒரு பெரிய பாறையை அவர்கள் மீது உருட்டித் தள்ளிவிட்டுக் குதிரைமீதேறி விரைகிறான். இளங்கோவை நேராகச் சென்று எதிர்க்கத் துணியாமல் ரோகணத்து வீரனொருவன் மறைந்திருந்து வேலெறிகிறான். தரையில் உருண்ட இளங்கோ அதே வேலை உயர்த்தித் திருப்பி எறிந்து பழி வாங்குகிறான். குற்றுயிரும் கொலையுயிருமாக அவன் கப்பகல்லகத்துக்குத் திரும்புகிறான். அவன் நிலையைக் கண்டு மாபெரும் சோழ சாம்ராஜ்யத்தின் தலைவரது கண்களும் கலங்குகின்றன. தான் போராடிக் கொணர்ந்த மணிமுடியை மாமன்னரின் பாதங்களில் சமர்ப்பித்து விட்டுச் சுருண்டு விழுகிறான் இளங்கோ.

அவனை வாரி அணைத்துச் செல்கிறார் மாமன்னர். சிகிச்சை நடக்கிறது. அபாயமில்லை என்கிறார் வைத்தியர்.

மணிமுடியுடன் தமிழ்நாட்டுக்குத் திரும்புமுன் நாட்டினர் முன்பாக மகிந்தருக்குத் தாமே முடிசூட்டிப் பார்க்க விரும்புகிறார் மாமன்னர் இராஜேந்திரர். நாட்டைத் திரும்பத் தந்து, நட்பைப் பெறவும் விரும்புகிறார். ''அமைச்சர் கீர்த்தியையும் குமாரன் காசிபனையும் வரவழையுங்கள். மக்களின் முன்னிலையில் ஒற்றுமையுடன் வாழ உறுதி செய்து கொள்வோம். எங்கள் பகைமையை விரும்பும் பாண்டியரிடமோ மேலைச் சளுக்கரிடமோ ரோகணம் உறவு பூணுவதில்லை என்று வாக்களியுங்கள்'' என்கிறார். மறுத்து விடுகிறார் ரோகணத்தரசர் மகிந்தர்.

வேறு வழியின்றி அவரைக் காவலில் வைக்கும்படி வல்லவரையருக்கு ஆணையிடுகிறார் மாமன்னர். ''ரோகணத்தை உள்ளடங்கிய ஈழமண்டலம் முழுதும் இனி நம் புலிக்கொடி பறக்கும்'' என முழங்குகிறார்.

''அப்பா!'' என்று அலறிக் கொண்டேவந்த ரோகிணியைக் கனிவுடன் தம்மிடம் அழைத்துக் கொள்கிறார் மாமன்னர். அவர் கரங்களில் தஞ்சமடைந்து அழுகிறாள் ரோகிணி.

### முதல் அத்தியாயம்

# ஒலிமினோ வாழ்த்தொலிகள்! ஊதுமினோ வெண்சங்கம்!

அரச அன்னம் ஒன்று தனது பரிவாரங்கள் புடைசூழக் கம்பீரமாக மிதந்து வருவது போல், மாமன்னர் இராஜேந்திர உடையாரது மரக்கலம் கடல் நீரை இரு கூறாகக் கிழித்த வண்ணம் நாகைத் துறைமுகத்தை நாடிப் பாய்மரச் சிறகடித்து விரைந்தது.

கரை காண்பதற்காக மரக்கலத்திலிருந்தவர்களது இருதயம் துடித்த துடிப்பை, தும்பைப் பூ நிறத்தாலான அதன் பாய்மரச் சேலைகள் வெளியிட்டுக் கொண்டிருந்தன.

மரக்கலத்தின் மையத்தில் நின்றதோர் உயர்ந்த கம்பத்தின் உச்சியில் புலிக் கொடி பட்டொளி வீசிப் பறந்து கொண்டிருந்தது.

கப்பல்கள் மிதந்து வந்த காட்சி கண் கொள்ளாக் காட்சி. இராஜேந்திர பூபதியின் முதற் கப்பல் கரையோரமாக நங்கூரம் பாய்ச்சிக் கொண்டிருந்த நேரத்தில், கடைசிக் கப்பல் அடிவானத்தின் அடி வயிற்றிலிருந்து முத்தைப் போல் முளைத்தெழுந்து பளபளத்தது.

வெற்றியோடு திரும்பி வரும் தமிழ் மகனைச் சுமந்து வந்த ஆனந்தத்தைக் கீழைக் கடலால் தாங்க முடியவில்லை போலும். தனது ஆயிரமாயிரம் அலைக் கரங்களால் ஆர்ப்பரித்து அது ஆனந்த நடனம் புரியத் தொடங்கியது. கோடிக் கணக்கான வெண்முத்து நீர்த்திவலைகளைக் கரையில் வாரி இறைத்து விளையாடியது. ''வாழ்க! வாழ்க!'' என்று வாழ்த்தொலி எழுப்பியது கடல். ''வெல்க! வெல்க!'' என்று வெண் சங்கம் முழங்கியது காற்று.

வானத்திலிருந்து கதிரவன் தங்கத் தாரைத் தூவிய வண்ணமாகவே இருந்



தொண்டை
மற்றும் மார்பு
உபாதைகளுக்குக்
குணமளிக்கும்

# பெப்ஸ் வில்லைகளை

**உட்கொண்டால், உங்கள் இருமல் உடனேயே அகலும்**

பெப்ஸ் வில்லை ஒன்றைச் சுவைத்து ஆவி போன்ற அதன் சத்து குணமளிக்க வேலை செய்வதை உணருங்கள். வலியைக் குறைக்கவும், தொண்டைப் புண், பிராங்கைடிஸ், இருமல் மற்றும் ஜலதோஷம் இவைகளுக்குக் காரணமாகிய கிருமிகளை அகற்றவும் உதவியளிக்கிறது. பெப்ஸ் உடனடி நிவாரணம் அளித்து விரைவில் குணமடையச் செய்கிறது.



பிராங்கைடிஸ்,
தொண்டைப்புண்,
மண்டைநீர்,
அடைப்பு,
ஜலதோஷம்
மற்றும்
இருமலுக்கு
உடனேயே
நிவாரண
மளிக்கிறது.

எல்லா மருந்து
வியாபாரிகளிடமும்
கிடைக்கும்.

FPY-54-TAM

**ஜி. இ. புல்போர்ட் (இந்தியா) பிரைவேட் லிட்.**

சோல் ஏஜண்டுகள்: தாதா அண்டு கம்பெனி
88, நைனியப்ப நாயக் தெரு, சென்னை - 3

# SOLDIN

**SOLID PHENYLE**
WITH D. D. T. AND CRESOL



# MANURIN

**FERTILIZER TABLETS**
COMPLETE PLANT FOOD





**INDIA ALKALIES LTD.**
8, GARSTIN PLACE, CALCUTTA-1

விசாரணைகளுக்கு:
மெஸர்ஸ் ஏ. வி. தாமஸ் & கோ.,
ஆலப்புழை - கேரளா



தரமாக
உறுதியாக
வழவழப்பாக
எழுதக் கூடியது



டிஸ்ட்ரிபியூட்டர்கள்
ராஜேந்திரகுமார் & கோ.
236, அப்துல் ரஹ்மான்
தெரு, பம்பாய்-3

# RITESHARP Pens

GHORUPDEV, BOMBAY 10

விற்பனை மற்றும் சர்விஸ் செய்பவர்கள்:

**ஜெம் அண்டு கம்பெனி**

325/326, நேதாஜி போஸ் ரோடு, சென்னை-1

தான். தனது வெம்மையைக் குறைத்துக் கொண்டு மென்னகை புரிந்தான் அவன்.

சோழநாட்டுத் தென்னஞ் சோலைகள் பாளை முத்துக்கள் உதிர்க்க, நந்த வனங்கள் நறுமணம் வீச, வாழைத் தோட்டங்கள் குலை தள்ளித் தலை குனிய, கானகத்து வண்டினம் மலர் சொரிந்த மதுமாந்திப் பாட்டிசைக்க, காடும் வீடும் நாடும் நகரமும் ஒரே கோலா கலத்தில் ஆழ்ந்திருந்தன.

நாகைப்பட்டினத்துத் துறைமுகத்தில் சிறிதுகூட மணல் வெளியைக் காண முடியவில்லை. நீரின் விளிம்பிலிருந்து நெடுந் தூரத்துக்கு நெடுந்தூரம், கண்ணுக்கெட்டிய தூரம் வரை, அதற்கும் அப்பால் ஒரே தலைகள், தலைகள், தலைகள்! கடலின் மேற்பரப்பில் நீர் முத்துக்கள் அலைமோதின; கரையின் மேற்பரப்பில் மக்களது தலை முத்துக்கள் அலைமோதின.

நாகையம்பதியும் அதை அடுத்திருந்த கிராமங்களும் கடற்கரைக்கே அன்று வந்து விட்டன. நாகைக்குச் சற்றுத் தொலைவிலிருந்த சிற்றூர்களும் சிறு நகரங்களும் நாகையிலிருந்து தஞ்சைக்குச் செல்லும் நெடுஞ்சாலை ஓரங்களில் குடியேறி விட்டன.

ஊருக்கு ஊர் தனித்தனியே தேர்த் திருவிழா உற்சவங்கள் நடைபெறுவது உண்டு. சோழ சாம்ராஜ்யம் முழுமைக்குமே இப்படி ஒரு பெரு விழா இதற்கு முன்பு நடைபெற்றதில்லை. மணிமுடி கிடைத்து விட்டதென்றும், அதை எடுத்துக் கொண்டு மாமன்னர் திரும்புகிறாரென்றும் பத்து தினங்களுக்கு முன்பே செய்தி வந்தது. காற்றினும் கடிதாக அது நாடு முழுவதும் பரவத் தொடங்கியது. அதைக் கேள்வியுற்றதிலிருந்து மக்கள் மகிழ்ச்சிப் பெருவெள்ளத்தில் கிடந்து தவிக்கலானார்கள்.

கப்பலை விட்டிறங்கிச் சிறு படகிலேறி மாமன்னரும் இளங்கோவும் மணிமுடிப் பேழையுடன் முதலில் கரைக்கு வந்து சேர்ந்தனர். வல்லவரையர் மாமன்னரது பரிவாரங்களையும் மற்றவர்களையும் கவனித்து இறக்குவதற்காகக் கப்பலில் தங்கினார். முக்கியமான சில பொறுப்புக்களை அவரிடம் கொடுத்திருந்தார் சக்கரவர்த்தி.

வரவேற்பதற்காகப் பூரண கும்ப மரியாதைகளுடன் வந்திருந்த மதுராந்தக வேளாரின் கண்கள் ஆனந்த மழை பொழிந்தன. அவரைச் சூழ்ந்திருந்த அரசியல் அதிகாரிகளும் தங்களை மறந்து ஏதோ ஓர் அற்புத உலகத்தில் மிதந்தனர். 'நடக்க முடியாதது' என்று நம்பிக்கை இழந்திருந்த பெருஞ்செயல் நடந்திருக்கிறது. 'இனி என்றுமே முடி திரும்பப் போவதில்லை' என்ற ஏக்கத்தால் வெம்பிக் கொண்டிருந்த உள்ளங்கள் இப்போது எக்காளமிட்டுத் துடித்தன.

மணிமுடியின் வாழ்வு முடிந்துவிட்டது என்று எண்ணித் தங்களுக்குள் பெருமூச்சு விட்ட ஒரு சில வயது முதிர்ந்த அதிகாரிகளும் அங்கு வந்திருந்தார்கள். மூன்று முறை போர் தொடுத்தும் முடி திரும்பவில்லை. தலைமுறை தலைமுறையாகத் தாக்குதல் நடத்தியும் தமிழரால் தலை நிமிர முடியவில்லை. சோழ சாம்ராஜ்யத்தின் சிறப்புக்கு அடிகோலி வைத்த செம்மலான இராஜராஜ அருள்மொழித் தேவராலேயே ஆகாத காரியமாயிற்றே இது!

எத்தனை எத்தனை போராட்டங்களைக் கண்ட முடி இது! எத்தனை எத்தனை இளம் காளையரின் இன்னுயிரைக் குடித்த முடி இது! எத்தனை எத்தனை மக்களின் மனத்தில் சோர்வையும் அவமானத்தையும் குடி கொள்ளச் செய்த முடி இது!

சீதை பத்து மாதங்கள்தான் தென் இலங்கையில் சிறைப்பட்டாள். தென்னவர் மணிமுடியோ சிறைக்குள்ளே ஒரு நூற்றாண்டு காலத்தைப் பார்த்து விட்டது. புதுப்புது மன்னர்கள் ஈழவள நாட்டில் தோன்றி ஆட்சி புரிந்து வந்தார்கள். சோழப் பெருநாட்டிலிருந்து புதுப்புது மன்னர்கள் இதற்காகப் படை திரட்டிச் சென்றார்கள்.

இதற்கு எழுபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பு முதற்பராந்தகசோழர் சென்றார். ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பு இரண்டாம் பராந்தக சுந்தர சோழர் படையெடுத்தார். அதை அடுத்து இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பு வீர வேங்கையான இராஜராஜ சோழரே முயன்றுபார்த்து விட்டார். அவர்களால் ஈழத்தை வெல்ல முடிந்ததே தவிர, தமிழ் மன்னனின் தலைமுடியைத் திரும்பக் கொண்டுவர முடியவில்லை.

அதிகாரிகள் ஆனந்தக் கண்ணீர் பெருக்காமல் வேறென்ன செய்வார்கள்? மக்கள் மகிழ்ச்சி வெறிபிடித்து, ஆனந்தக் கூத்தாடாமல் வேறே என்ன செய்வார்கள்? மணிமுடியின் மதிப்பென்ன, பொன்னா? பொருளா? அல்லது அதில் பதிந்து நின்ற நவரத்தினக் கற்களா? பரம்பரையாகத் தமிழ் மகன் உறிஞ்சி வளரும் தாய்ப்பாலில் கலந்துறைந்த தமிழ்ப் பண்பு அது!

எழுந்தன வாழ்த்தொலிகள்:

"கோப்பரகேசரி வன்மர் ராஜேந்திரப் பெரிய உடையார் வாழ்க!"

"முந்தையோர் முடி கொணர்ந்த மூவேந்தருக்கு வேந்தர், வாழ்க!"

"வெஞ்சமர் வீரர் வாழ்க! வேங்கையின் மைந்தர் வாழ்க!"

அலை ஓசையை ஆழ்கடலுக்குள்ளே அமுழ்த்திவிட்டு மக்களின் குரலோசை விண்ணதிர எழுந்தது. மாமன்னரைப் பார்க்கத் துடித்தவர்களும் மணிமுடியைக் காணத் துடித்தவர்களுமாகக் கூட்டத்தினர் எழும்பி எழும்பிக் குதிக்கலாயினர். சில விநாடிகள் சென்றால் கூட்டத்தின் முன்பகுதி கடலுக்குள் சரிந்து முழுகிவிடும் போல் தோன்றியது.

வேளைக்காரப் படையைச் சேர்ந்த மற்போர்ப் பிரிவினர் ஆங்காங்கே கூட்டத்தின் நெரிசலிலிருந்து, முதியோர், பெண்டிர், குழந்தைகளைக் காப்பாற்றும் நற் பெரும் பணியில் ஈடுபட்டிருந்தனர்.

மணி முடிப் பேழையை இளங்கோவிடம் கொடுத்து விட்டு மதுராந்தகவேளாரைத்



தம்து இரு கரங்களாலும் தழுவிக் கொண்டார் மாமன்னர். அப்போது மதுராந்தகரின் கண்கள் எதேச்சையாகத் தமது குமாரனின் பக்கம் திரும்பின. அவனது பரந்த மார்பில் வலது தோள்பட்டையிலிருந்த விழுப்புண் அவர் பார்வையில் பட்டது. இன்னும் அது சரியாக ஆறவில்லை. செக்கச் சிவந்த மலர் மாலையின் ஒரு பகுதி அவன் தோளில் தொங்குவது போல் தோன்றியது. மகிழ்ச்சியும் பெருமிதமும் பொங்கத் தமக்குள் புன்னகை பூத்துக் கொண்டார் பெரியவேளார்.

"மதுராந்தகர் அவர்களே! நமது வெற்றியில் முதல் பங்கு பெற வேண்டியவன் உங்கள் மைந்தன். தனியாகச் சென்று மணி முடியை எடுத்து வந்தவனும் அவன்தான். அதற்குக் கிடைத்த வெகுமதியைப் பார்த்தீர்களா?" என்று இளங்கோவின் விழுப் புண்ணைச் சுட்டிக் காட்டினார் மாமன்னர்.

மாமன்னர் கூறுவதற்கு முன்பாகவே அதைப் பார்த்து மகிழ்ந்த மதுராந்தகர் தமது மகிழ்ச்சியை வெளியில் காட்டிக் கொள்ளாமல், "கொடும்பாளூர்க் குலம் தனது செஞ்சோற்றுக் கடனை மறந்து விடவில்லை, கடமையைச் செய்திருக்கிறது!" என்றார்.

சுற்றியிருந்தவர்களிடம் சக்கரவர்த்தி இளங்கோவின் வீர தீரச் சாகசங்கள் பற்றி ஒரு விநாடி புகழ்ந்துரைத்தார். மரணத்தின் வாயிலிருந்து தப்பியவனுக்கு மன நிறைவு ஏற்படுவதற்காகவும், மற்ற இளைஞர்களுக்கு ஊக்கமளிப்பதற்காகவும் ஓரிரண்டு வார்த்தைகள் புகழ்ந்து கூறினார்.

"கொடும்பாளூர்க் குலக்கொழுந்து இளங்கோவேள் வாழ்க!" என்று வாழ்த்தொலி எழுப்பியது கூட்டம்.

அவ்வளவுதான்! மல்லர்களின் தலைவனான மாங்குடி மாறன் ஓடோடியும் வந்து, இளங்கோவைத் தூக்கித் தோளில் இருத்திக் கொண்டு கூட்டத்துக்குள் வெறி பிடித்தவனைப் போல் ஓடத் தொடங்கினான். அவன் எழுப்பிய வாழ்த்தொலி, ஆயிரமாயிரம் குரல்களாக அங்கு எதிரொலித்தது.

மதுராந்தக வேளார் மாங்குடி மாறனைத் தடுத்து நிறுத்த முயன்றபோது, சக்கரவர்த்தி அவருக்குச் சைகை செய்து கையமர்த்தினார். அதற்குள் மாங்குடிமாறன் கூட்டத்தைப் பிளந்து கொண்டு அதன் மத்திக்கே போய்விட்டான். சின்னஞ் சிறு குன்று தன் தோளில் இளங்கோவைச் சுமந்து கொண்டு கூட்டத்திடையே குதூகலத்துடன் துள்ளிக் குதிப்பதுபோல் தோன்றியது.

ஆனந்த வெறி கூட்டத்தின் தலைக்கேறி அதைக் கிறங்க அடித்து விட்டது. நாலா பக்கங்களிலிருந்தும் இளங்கோவைப் பற்றி இழுத்து வாழ்த்துக் கூறினார்கள். அவன்மீது மலர்மாரி பொழிந்தார்கள். கையில் மலர் இல்லாதவர்கள் தாங்கள் சூடியிருந்த மலர் மாலைகளைப் பற்றி இழுத்து அவன் மேல் வீசத் தொடங்கினார்கள்.

மாங்குடி மல்லனின் பாடே மூச்சுத் திணறும் நிலைக்கு வந்தது. பலப் பலர் இளங்கோவைப் பற்றி இழுத்துத் தங்கள், தங்கள் தோள்களில் வைத்துக் கொண்டு கூத்தாட முற்பட்டனர். பேழையை இறுக்கமாகப் பற்றிய வண்ணம் மக்களின் அன்பு வலையில் அகப்பட்டுக் கொண்டு திண்டாடித் திணறிப் போனான் இளங்கோ.

கொடும்பாளூர்ப் பெரிய வேளாருக்கு இந்த வெறியாட்டம் சிறிதுகூடப்

பிடிக்கவில்லை" என்பது அவர் முகத்திலிருந்தே நன்கு தெரிந்தது.

"மதுராந்தகரே! மக்களின் உணர்ச்சி வெள்ளத்துக்கு ஒரு வடிகால் வேண்டுமல்லவா?" என்றார் மாமன்னர். "அவர்கள் ஆடுகிறவரையில் ஆடிக் களைக்கட்டும். நாம் தஞ்சைக்குப் புறப்படுகிற அலுவலைக் கவனிப்போம்."

தொலைவில், அசைந்தாடும் குன்றுகளென யானைகள் அம்பாரிகளுடன் சித்தமாக நின்றன. அவற்றையும் தாண்டிக் குதிரைக் கூட்டம் வாலைச் சுழற்றிக் கொண்டு நின்றது. அதையடுத்து நின்ற இரு புரவிகள் பூட்டிய ரதத்தை! உற்றுப்பார்த்தார் சக்கரவர்த்தி. ரதத்தில் சாரதி அமரும் வெளிப் புறத்தைத் தவிர, மற்றப் பக்கங்களில் பட்டுத்திரை தொங்க விட்டு மறைத்திருந்தனர்.



"மகிந்தருக்காக வந்திருக்கும் ரதம் தானே அது?" என்று மதுராந்தக வேளாரை வினவினார் சக்கரவர்த்தி.

"ஆமாம்!"

"அவர்களையெல்லாம் அதோ, வல்லவரையர் அழைத்துக் கொண்டு வருகிறார். கூட்டத்தினரின் கவனம் மகிந்தரின் பக்கம் திரும்புவதற்கு முன்னால் அவர்களையெல்லாம் ரதத்தில் ஏறிக்கொள்ளச் செய்யுங்கள்."

வல்லவரையர் மகிந்தரை மட்டும் தனியாக அழைத்துக் கொண்டு வரவில்லை.



மரகதவல்லி அம்மையாரின் புதல்வர் திரு வீரபாண்டியனுக்கும் சௌ. வஸந்தாவுக்கும் திருமணம் நடந்தது.



துர்க்காப்பூர் எஃகுத் தொழிற்சாலே என்ஜினியர் திரு வி. பாலசுப்பிரமணியத்துக்கும் சௌ. பார்வதிக்கும் விவாகம் நடந்தது.



திரு வி. டி. சேதுராமலிங்கம் அவர்களின் புதல்வி சௌ. பத்மாவதிக்கும் திரு பழனிவேலுக்கும் திருமணம் நடைபெற்றது.

மகிந்தருடன் ஒரு நடுத்தர வயதுப் பெண்மணியும், குறு குறுத்த விழிகளே உடைய ஓர் இளம் பெண்ணும் வந்து கொண்டிருந்தார்கள். அவர்களேயொட்டிக் கந்துலனும் அவன் மகனும் வந்தனர்.

மகிந்தருடன் வந்த பெண்ணின் கண்கள் கூட்டத்துக்குள்ளே மிதந்து கொண்டிருந்த இளங்கோவையே உற்றுநோக்கின. மலர்ச் செண்டுகளே அவன்மீது வீசிக் கொண்டிருந்த மக்கள், அவனேயே மலர்ச் செண்டாக்கிப் பந்தாடத் தொடங்கிய காட்சி அந்த வேல் விழியாளேக் கிறங்க வைத்தது. வீரத்துக்கு இந்த நாட்டில் இப்படியொரு வரவேற்பா? லட்சக் கணக்கான மக்களின் மனத்தை ஒருங்கே கவர்ந்த வீரப் பெருமகனு அவன்!

விரிந்த தாமரை போன்றிருந்த அவளது வேல் விழிகள் பல விநாடிகள் வரை கூம்பவே இல்லே.

அவர்கள் நாடி வந்து கொண்டிருந்த ரதத்தைச் சுற்றிலும் ஐந்தாறு குதிரை வீரர்கள் வட்டமிட்டு நின்றனர். அந்த வீரர்களின் தலேவனுன வீரமல்லனும் அப்போது கூட்டத்தைத்தான் பார்த்துக் கொண்டிருந்தான். இளங்கோவின் உருவத்தை விட்டு அவனும் தன் கண்களே வேற்றிடத்துக்குத் திருப்பவில்லே. விநாடிக்கொரு பெருமூச்சு அவனிடமிருந்து சீறி வந்தது.

'இதெல்லாம் என்ன அக்கிரமம்? சக்கரவர்த்திகளுக்கு எதிரிலேயே இவ்வளவு களியாட்டங்கள் நடக்கலாமா? அவரும் பார்த்துக் கொண்டுதான் இருக்கிறுர்! நெருங்கிய நண்பனுக இருந்த இளங்கோவைக் கூட்டத்தினர் தொலே தூரத்துக்குக் கொண்டு செல்கிறுர்களே! மேலே, மேலே உயர்த்திக் கொண்டு போகிறுர்களே!....ஹும்! ஈழத்துக்குச் செல்லும் வாய்ப்பு மட்டும் எனக்குக் கிடைத்திருந்தால்.....'

பெண்களின் குரல் ஒலிப்பதைக்கேட்டுச் சட்டென்று பின்னல் திரும்பினுன் வீரமல்லன். மகிந்தருடன் நெருங்கி வந்த பெண், கூட்டத்துக்கிடையே தன் விழிகளே அலேய விட்டிருந்ததால், அவளே அவனுல் நன்ருகப் பார்க்க முடிந்தது.

கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டே இருந்தான் வீரமல்லன்.

அவனுடைய நெஞ்சு ஒரு கணம் 'திக்' கென்று தன் துடிப்பை நிறுத்திக் கொண்டு, மீண்டும் பரியின் வேகத்தில் பதறிக் கொண்டு ஓடியது. யார் இந்தப் பேரழகி? மானிடப் பெண்தானு? அல்லது மதி ஒளியை உருக்கி வார்த்து உயிரூட்டப் பெற்ற வானமண்டலச் சிற்பமா? யார் இவள்? (தொடரும்)

# விளம்பர விவாகம்

ஜயலக்ஷ்மி

செய்திப் பத்திரிகையைப் புரட்டிக் கொண்டிருந்த சுந்தரத்தின் கண்களில் அந்த 'மணமகள் தேவை' என்கிற விளம்பரம்தான் முதன் முதலாகத் தட்டுப்பட்டது. ஆவலுடன் அதைப் படித்தான்.

**மணமகள் தேவை**

''மாதம் இருநூறு ரூபாய் வருமானம். வயது இருபத்தேழு. பி. எஸ்ஸி., படித்த அழகான வாலிபனை மணக்க, படித்த அழகான பெண் தேவை. புகைப்படம், மற்ற விவரங்களுடன் விண்ணப்பிக்கவும்.

எஸ். முத்துசாமி,
2/15, கண்ணப்ப முதலி தெரு,
மயிலாப்பூர், சென்னை.

'ஷாக்' அடித்தாற்போல் இருந்தது சுந்தரத்துக்கு. ஆச்சரியமும் ஆத்திரமும் அவனை நிலைகுலையச் செய்தன. அதற்குக் காரணம் அந்த விளம்பரத்தைக் கொடுத்திருந்த எஸ். முத்துசாமி வேறு யாருமல்ல; சாட்சாத் அவனுடைய தகப்பனுரேதான். அந்த மணமகனும் இவனேதான். தன்னை ஒரு வார்த்தை கூடக் கேட்காமல், நான் தனக்குக் கல்யாணமே வேண்டாமென்று சொல்லிக் கொண்டிருக்கும்போது தன் தகப்பனர் இப்படி ஒரு விளம்பரம் கொடுத்திருப்பதைக் காண அவனுக்கு எரிச்சல் பற்றிக்கொண்டு வந்தது.

பத்திரிகையைக் கையில் எடுத்துக் கொண்டு தன் தகப்பனரிடம் ஓடினன்.

''என்னப்பா இது! என்னைக் கேட்காமல் எதற்காக விளம்பரம் கொடுத்தீர்கள்?''

''உன்னை என்னடா கேட்பது? உனக்கு இன்னும் வயதாகவில்லையா? நீயும் இத்துடன் பதினேரு பெண்களைப் போய்ப் பார்த்துவிட்டு வந்து விட்டாய். ஒன்ருவது உனக்குப் பிடிக்கவில்லை. 'பெண் பிடிக்கவில்லை பிள்ளையாண்டானுக்கு' என்று ஒவ்வொருவருக்கும் எழுத வேண்டியிருப்பது நீயா? நானு? பெண்ணைப் பெற்றவர்களெல்லாம் என்னையல்லவா சபித்துக் கொட்டுகிருர்கள். 'அவன் என்ன பெண் பார்க்கவா வருகிருன்? சொஜ்ஜியும் பஜ்ஜியுமாகத் தின்றுவிட்டுப் போகத்தானே வருகிருன்!' என்று சொல்வது எனக்கல்லவா அவமானமாக இருக்கிறது!''

''அதற்காக...''

''அதற்காகத்தான் இப்படியொரு விளம்பரம் கொடுத்தேன். உனக்குப் பிடித்தமான பெண்ணை நீ உன் வீட்டிலிருந்தபடியே தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம். இதனுல் அவர்களுக்கும் செலவில்லை. என்னையும் சாபமிடாமல் இருப்பார்கள்''என்ருர் அவர் சாவதானமாக.

மறுநாளே பத்துப் பன்னிரண்டு கடிதங்கள் புகைப்படங்களுடன் வந்திருந்தன. ஒவ்வொன்ருகப் பிரித்துப் பார்த்துக் கொண்டே வந்தான் சுந்தரம். ஒருத்தியின் முகமாவது அவனுடைய கண்களைக் கொள்ளை கொள்ளக் கூடிய வனப்பு வாய்ந்ததாக இருக்கவில்லை.

இரண்டாம் நாள் வந்ததோ ஒரு கடிதம் தான். அலட்சியமாக அதைப் பிரித்து அதனுள் இருந்த புகைப் படத்தை வெளியே எடுத்துப் பார்த்தான் சுந்தரம். தூக்கிவாரிப் போட்டது அவனுக்கு. அந்தப் படத்தில் ஆஜானுபாகுவாய்க் காட்சியளித்துக் கொண்டிருந்தது வேறு யாருமல்ல; சுந்தரமேதான். கடிதத்தைப் பார்த்தான். அதில் விவரிக்கப் பட்டிருந்த யோக்கியதாம்சங்களும் அவனுடையவைதான். அவனுக்கு ஒரே குழப்பமாக இருந்தது. 'இதை எதற்காக அப்பா எனக்கே அனுப்பி யிருக்கிருர்? 'அப்பாவையே போய்க் கேட்டு விடுவோமென்று எண்ணி எழுந்தான். பிறகுதான் அப்பா ஊரில் இல்லை என்கிற ஞாபகம் அவனுக்கு வந்தது.

பொறுமையின்றிப் படபடத்துக் கொண்டிருந்த சுந்தரத்துக்கு ஏதோ ஓர் எண்ணம் தோன்றவே, சடக்கென்று கவரின் மேல் விலாசத்தைப் பார்த்தான். எம். சுந்தரம் 1/15 என்று எழுதப்பட்டிருந்தது அதில். இவனுடைய வீட்டு எண் 2/15 அல்லவா? அப்பொழுதுதான் அவனுக்கு நினைவு வந்தது. பக்கத்து வீட்டுக்குப் போக வேண்டிய கடிதம் தபால்காரரின் தவறுதலால் தன் வீட்டுக்கு வந்து விட்டது என்று.

'பக்கத்து வீட்டிலும் ஒரு எம். சுந்தரம் இருப்பாரா?' என்கிற சந்தேகம் தோன்றியது. எதற்கும் போய் விசாரித்து விடலாமே என்று அவன் கிளம்பி விட்டான்.

''ஸார்!'' என்று இவன் குரல் கொடுத்ததும் ''யார்?'' என்று கேட்டுக் கொண்டு ஒரு மோகினி வெளியே வந்தாள்.

மெள்ளத் தன்னைச் சமாளித்துக்கொண்டு, ''ஒரு சந்தேகம். இந்த வீட்டில் எம். சுந்தரம் என்கிற பெயர் உள்ளவர்கள் யாரேனும் இருக்கிருரா?'' என்ருன்.

''இருக்கிருர். என் அண்ணுதான் அது. என் அப்பாவின் பெயர் மகாலிங்கம்...'' என்ருள் அவள் நறுக்குத் தெறித்தாற்போல்.

''மன்னிக்க வேண்டும். என் பெயரும் எம். சுந்தரம். இங்கே வர வேண்டிய கடிதம் என் வீட்டுக்கு வந்துவிட்டது. நானும் நம்பரைக் கவனிக்காமல் கவரை உடைத்துப் பார்த்து விட்டேன். வந்து...வந்து...இதோ இருக்கிறது கடிதம்...'' என்று தயக்கத்துடன் மொழிந்தபடியே தன் கையிலிருந்த கவரை அவளிடம் நீட்டினுன் சுந்தரம்.

''சற்று இருங்கள். நீங்கள் செய்த அதே தவறை நானும் செய்து விட்டேன். எல்லாவற்றுக்கும் காரணம் உங்களுடைய பெயரும் என் அண்ணுவின் பெயரும் 'இன்ஷியல்' வரையில் ஒன்ருகவே இருந்துவிட்டதால்தான். அப்பா வந்ததும் கவரைக் கொடுத்தனுப்பலாமென்று இருந்தேன்: அதற்குள் நீங்களே வந்து விட்டீர்கள்'' என்று கூறிவிட்டு உள்ளே சென்று ஒரு கவரை எடுத்து வந்து சுந்தரத்திடம் கொடுத்தாள் அந்த அழகி.

''பரவாயில்லை,...'' என்ருன் சுந்தரம்.

அவன் திரும்பித் திரும்பிப் பார்த்தபடியே சென்ருன். அவள் இவனை வைத்த கண்





எடுக்காமல் பார்த்த வண்ணமே சித்திரப் பாவையாக நின்று கொண்டிருந்தான்.

தன் வீட்டுக்குள் நுழைந்ததும் நுழையாததுமாக அந்தக் கவருக்குள் இருந்தவற்றை வெளியே எடுத்தான் சுந்தரம். என்ன ஆச்சர்யம்! சற்று முன்பு பக்கத்து வீட்டில் காட்சி தந்தருளிய மோகனாங்கி தான் அந்தப் புகைப்படத்தில் முல்லைச் சிரிப்பு சிரித்தபடி நின்று கொண்டிருந்தாள். கவரைத் திருப்பினான். 1/15 என்று குறிக்கப்பட்டிருந்தது. உடனே அலமாரிக்கு அருகில் ஓடினான்.

நான்கு நாட்களின் செய்திப் பத்திரிகைகளை யெல்லாம் எடுத்து வந்தான். அவைகளில் ஒன்றில் அவன் தேடிய விஷயம், அதாவது விளம்பரம் இருக்கத்தான் செய்தது:

### மணமகன் தேவை

'' அழகும் அறிவும் மிகுந்தவள். வீணையில் நல்ல தேர்ச்சி பெற்றிருப்பதுடன், எஸ். எஸ். எல். சி.யும் பாஸ் செய்திருக்கிறாள். வயது பதினெட்டு. புகைப்படத்துடன் விண்ணப்பிக்கவும். எஸ். மகாலிங்கம் 1/15 கண்ணப்ப முதலி தெரு, மயிலாப்பூர், சென்னை.

இதைப் படித்ததும், 'மண மகள் தேவை' என்று விளம்பரம் கொடுத்த தற்காகத் தன் தந்தைமீது கோபம்கொண்டதற்கு இப்போது வருந்தினான் சுந்தரம். இத்துடன் நில்லாது புகைப்படத்தைப் பக்கத்து வீட்டுக்குத் தபால் மூலம் அனுப்பி வைத்திருந்த தன் தகப்பனாரை மனமாரப் பாராட்டினான்.

அடுத்தபடியாக அவன் வாழ்த்தியது அந்த டிவிஷனில் பணிபுரிந்து வரும் தபால்காரரை. அவருடைய தவறுதலால்தானே இன்று அவன் பக்கத்து வீட்டு அழகியைச் சந்திக்கவும், பேசவும் முடிந்தது? அந்த எழில் வாணியின் பெயர்? புகைப்படத்தைத் திருப்பிப் பார்த்தான். அங்கே அழகு தமிழில் மிஸ். சுந்தா என்று எழுதியிருந்தது. '' சுந்தா!'' என்று கூறிப் பார்த்துக் கொண்ட அவன் நாக்கு கற்கண்டைச் சுவைத்தது போன்று இனித்தது.

அன்று தபால்காரரிடம் முழுசாக ஓர் ஐந்து ரூபாய் நோட்டைக் கொடுத்தான்.

'' ஏன், ஸார்! சில்லறை வேண்டுங்களா?''

'' இல்லேயப்பா! உனக்கு என் அன்பளிப்பு!,'

'' மெய் தானுங்களா?''

'' ஆமாம்! போய் வா, அப்பனே!''

ரூபாய் நோட்டை மடித்துத் தம் சட்டைப் பைக்குள் திணித்துக்கொண்ட தபால்காரருக்குத் தீபாவளி பொங்கல் இருமுக்கே அரை வருடம் சால்ஜாப்புச் சொல்லும் மனிதர், காரணமில்லாமல் ஏன் ஐந்து ரூபாயைத் தூக்கிக் கொடுக்க வேண்டும் என்று மிகவும் ஆச்சரியமாகத்தான் இருந்தது.

*

தகப்பனார் ஊரிலிருந்து வந்ததும் முதல் காரியமாக, 'இந்தப் பெண் பரவாயில்லை, அப்பா! இதையே நிச்சயம் செய்துவிடுங்கள்,

என்று கூறிவிட்டுச் சுந்தாவின் புகைப்படம் அடங்கிய கவரை அவரிடம் கொடுத்தான்.

அவர் ஏதோ கேட்க வாயெடுத்தார். அதே சமயம் யாரோ ''ஸார்!'' என்று வாசலிலிருந்து குரல் கொடுக்கவே போய்ப் பார்த்தான் சுந்தரம்.

சுந்தாவின் தகப்பனார் மகாலிங்கம்தான் உள்ளே வந்து கொண்டிருந்தார். சுந்தரம் மெள்ளத் தன் அறையை நோக்கி நழுவினான். அவன் உள்ளம் கரைகாணாத மகிழ்ச்சியால் துள்ளிக் கொண்டிருந்தது.

கலியாணம் முடிந்த பிறகு சுந்தாவிடம் கேட்ட முதல் கேள்வி இதுதான்

''பக்கத்து வீட்டில்தானே நான் இருக்கிறேன். உன் புகைப்படத்தைத் தபாலில் அனுப்புவானேன்? நேரில் வந்தே உன் தகப்பனார் கொடுத்திருக்கலாமே!''

''நானும் பக்கத்து வீட்டில்தானே இருக்கிறேன்?'' என்று திருப்பிக் கேட்டாள் சுந்தா.

''நான் அனுப்பவில்லை. அப்பாவின் வேலை இது!'' என்று கூறினான் சுந்தரம்.

''என் விஷயமும் அப்படித்தான். உங்கள் படத்தை உங்களுக்குத் தெரியாமல் உங்கள் அப்பா அனுப்பியிருக்கிறார். எனக்குத் தெரிந்து செய்தார் எங்கப்பா.''

''நீ என்ன சொல்கிறாய் சுந்தா! எனக்கு விளங்கவில்லையே..''

''விளம்பரம் கொடுத்ததோ உங்கள் அப்பா. கடிதம் வந்ததோ உங்கள் பெயருக்கு. இதேபோல் எங்கள் வீட்டிலும் விளம்பரம் கொடுத்தது என் தகப்பனார். கடிதம் வந்ததோ என் அண்ணாவின் பெயருக்கு. இதிலிருந்தே தெரியவில்லையா? தபால் நிலயத்துக்குப் போகாமலேயேதான் இரண்டு கடிதங்களும் வீடு மாறியிருக்கின்றன என்பது? நீங்கள் இரண்டு கவர்களின் முத்திரைகளையும் கவனித்துப் பார்க்கவில்லை போலிருக்கிறது. இரண்டும் எப்போதோ யாராலோ அனுப்பப்பட்ட மேல் கவர். உங்களை வழிக்குக் கொண்டு வர என் அப்பாவும் உங்களுடைய அப்பாவும் சேர்ந்து செய்த தந்திரம்.''

தூக்கிவாரிப் போட்டது சுந்தரத்துக்கு. 'அப்படியானால் தபால்காரருக்கு அழுத ஐந்து ரூபாய் நஷ்டமா?'

வெளிப்படையாக, ''எதற்கு அவர்களுக்கு இவ்வளவு சிரமம்? உன்னை வந்து பார்த்து விட்டுப் பிடிக்கவில்லை என்று சொல்ல என்னால் முடியுமா?'' என்று அன்புமேலிடக் கேட்டான்.

''யார் கண்டது? 'பார்யா ரூபவதி சத்ரு' என்ற காரணம் காட்டியும் என்னை நீங்கள் நிராகரிக்கலாமல்லவா......?''

''போக்கிரி!''

''கவலைப்படாதீர்கள். நான் அடிக்கடி டிபனுக்கு சொஜ்ஜியும் பஜ்ஜியும் நிறையச் செய்து விடுகிறேன்!'' என்று கூறிச் சிரித்தாள் சுந்தா.

அவன் முகத்தில் அசடு வழிந்தது. ஆனால் அவளுடன் அவனும் சிரிக்கத்தான் செய்தான்!



# கண்கள் உறங்காவோ?

## பூர்வ கதை

பாலிய விதவையான வீணா டாக்டருக்குப் படித்து விட்டுச் சொந்த ஊரான கேசவபுரத்துக்கு வருகிறாள். அவள் தந்தையின் நெருங்கிய நண்பர் புஷ்பவனம் பிள்ளையின் மகன் சுந்தரத்துக்கும் வீணாவுக்கும் பழக்கம் ஏற்படுகிறது. சுந்தரம் கேசவபுரத்தை அடுத்து உருவாகிக் கொண்டிருந்த புங்கனூற்றுப் பாசனத் திட்டத்தில் உதவி இன்ஜினீயராக வேலை ஏற்கிறான். வீணா கேசவபுரத்திலும் புங்கனூற்றுக் கரலனியிலும் வைத்திய நிலையங்கள் நடத்தி வருகிறாள்.

வீணாவின் அத்தையும், மாமியாருமான தைலம்மாளின் மகள் மாலாவைச் சுந்தரம் காதலித்து வருகிறான். ஒரு நாள் அவள் விளையாட்டாக, ''நீங்கள் ஒரு விதவையை மணந்து கொள்ளுவீர்களா?'' என்று கேட்டு அவனுக்கு அடங்கா ரோசத்தை எழுப்புகிறாள். இதனால் சுந்தரம் மாலாவை மறந்து விட்டு, விதவையான வீணாவை மணந்து கொள்ள உறுதி செய்து கொள்ளுகிறான்.

கேசவபுரத்தின் கிராமமுனிசிப், தாணாவதி என்ற அரைப் பைத்தியத்தின் விஷக் கண்கள் வீணாவின் மீது விழுகின்றன. அவனும் அவளை அடைய அசட்டுத்தனமான முயற்சிகள் பலவற்றைச் செய்து வருகிறான்.

**மாயாவி**

வீணாவுடன் படித்த விகாஸ் என்ற வட நாட்டு இளைஞனும் புங்கனூற்றுப் பாசனத் திட்டத்தில் உதவி இன்ஜினீயராகப் பணியாற்றி வருகிறான். அவனும் சுந்தரமும் வீணாவை மறுமணம் செய்து கொள்ளச் செய்து புரட்சி வாழ்வில் ஈடுபட வைக்கப் பெருமுயற்சி செய்கின்றனர்.

ஆரம்பத்தில் வீணா அதற்கு இணங்கவில்லை. ஆனால் அந்த அரைப் பைத்தியம் தாணாவதி ஒரு நாள் அவளைக் கெட்ட எண்ணத்துடன் கையைப் பிடித்து இழுத்து விடவே, தன் அழகு இப்படித் தனக்குப் பகை ஆவதைவிடச் சமூகத்தின் பகையை ஏற்றுக்கொண்டு மானம் இழக்காமல் வாழ்வது நல்லதென்று எண்ணி வீணா சுந்தரத்தை மறுமணம் செய்து கொள்ளத் தீர்மானிக்கிறாள்.

தன் மகளைக் காதலித்து வந்த சுந்தரம் அவளைப் புறக்கணித்து விட்டு விதவையான வீணாவுடன் சுற்றி அலைவதைப் பொறுக்காமல் தைலம்மாள், வீணாவை அவ்வூரை விட்டே விரட்டி விடச் சதி செய்கிறாள். இதற்கு அவள் தாணாவதியைத் தூண்டி விடுகிறாள். தாணாவதி ஆட்களை ஏவி, வீணாவின் புங்கனூற்று வைத்திய நிலையத்துக்குச் சென்று குழப்பம் விளைவிக்கச் செய்கிறான்.

விகாஸின் ஒன்றுவிட்ட தங்கை ஸொப்னா அவளுடன் கல்லூரியில் படித்து வந்த ஒருவனைக் காதலித்து, பெற்றோரின் விருப்பத்துக்கு மாறாக மணந்து கொண்டு சென்னைக்கு வந்து இன்பமாகக் குடும்பம் நடத்தி வருகிறாள். அங்கே விதி விளையாடி ஸொப்னாவின் கணவன் இறந்து போகிறார்.

விதவைகளுக்கு இழைக்கப்படும் அநீதிகளைக் கடுமையாக எதிர்த்துப் போராடி வந்த விகாஸ், அவளைத் தற்செயலாகச் சந்தித்துத் தன் வீட்டுக்கு அழைத்து வருகிறான். அவளுக்கு மறுமணம் செய்துவைக்க நினைக்கிறான். அதற்கு முன்னால் அவளுடைய ஆதரவற்ற நிலையைத் தகாத முறையில் பயன்படுத்திக் கொண்டு விடுகிறான் ஒரு கயவன். எனவே, ஸொப்னா தற்கொலை செய்து கொள்கிறாள். சுந்தரத்தை மணப்பதாக வீணா செய்த தீர்மானம் இந்தப் பயங்கர சம்பவத்தால் மேலும் உறுதிப்படுகிறது.

யூடையே ஒரு நாள், புங்கனூற்றங் கரையிலுள்ள சேரவாய்மலைக் கோவிலில் பூசாரி வீணாவுக்குப் பிரசாதம் தர மறுத்ததற்காக அவர் கையிலிருந்த பிரசாதத் தட்டைப் பிடுங்கித் தூர வீசி விடுகிறான் விகாஸ். குரோதங் கொண்ட கோவில் பூசாரியும் தர்மகர்த்தாவும் வீணா, சுந்தரம், விகாஸ் மூவரும் கிராமத்தில் புரட்சி ஏற்படுத்தச் சதிசெய்கிறார்களென்று புங்கனூற்றுக் காலனிவாசிகளைத் தூண்டி விடுகிறார்கள். ஆகையால் காலனிவாசிகளில் சிலரும் தாணாவதியின் கையாட்களுடன் சேர்ந்து கொண்டு வீணாவின் வைத்திய நிலையத்தின் முன் அவளைத் தூற்றுகிறார்கள். சுந்தரமும் விகாஸும் அவர்களை விரட்டச் சென்றபோது சில வெறியர்கள் சுந்தரத்தைக் குத்த வருகிறார்கள். ஆனால் விகாஸ் குறுக்கே விழுந்து அவர்களால் குத்தப்பட்டு இறந்து விடுகிறான். விகாஸின் மறைவு வீணாவின் உறுதிக்கு உரமூட்டுகிறது.

புங்கனூற்றுக் காலனிவாசிகள் வீணாவுக்கு எதிராக இருப்பதை அறிந்து அரசாங்கத்தார், அவள் அங்கே நடத்தி வந்த வைத்திய நிலையத்தை மூடிவிடுமாறு உத்தரவிடுகிறார்கள். இதை அவளுக்கு இழைக்கப்பட்ட மிகப் பெரிய அநீதியாகக் கருதிய சுந்தரம் அதற்காகத் தன் வேலையை ராஜிநாமா செய்து விடுகிறான்.



## தெளிவு

## மூன்றாம் பாகம்



அத்தியாயம் 1

# வேண்டாம் மகனே!

ஒரே ஒரு கணந்தான்; மறுகணம் வீணு தெளிவு பெற்று விட்டாள். ஆயினும் அந்த ஒரு கணத்தைப் படுநரகமாக அநுபவித்தான் சுந்தரம். வீணுவிடம் பாராட்டை எதிர்பார்த்து வந்த அவனுக்கு, தான் வேலையை விட்டுவிட்ட செய்தி அவளை நிலை தவறச் செய்ததைக் கண்டதும், ஏமாற்றமாகப் போய்விட்டது. அவனுந்தான் கடந்த ஏழெட்டு மாதங்களாக அவளுடன் நெருங்கிப் பழகி வருகிறான். இடையே ஓரிரு மாதங்கள் ஒரு பிணக்கு ஏற்பட்டு அவர்கள் பிரிந்திருந்தபோது கூட அவளுடைய நடவடிக்கைகளை அவன் கூர்ந்து கவனித்து வந்திருக்கிறான். அப்படியெல்லாம் இருந்தும் வீணுவின் மனப்போக்கை இன்னும் அவனுல் நிர்ணயிக்கவே முடியவில்லை.

அவள் மிக மென்மையான உள்ளம் படைத்தவள் என்பதை அவன் அறிவான். ஆதலால் துணிச்சலான காரியங்களைப் பற்றிக் கேள்வியுறும்போது அதிர்ச்சி அடைகிறாள் என்பதையும் அவன் அநுபவத்தில் தெரிந்து கொண்டிருந்தான். ஆனால் அவ்வாறு ஏற்படும் ஒவ்வோர் அதிர்ச்சியும் அவளைத் தயங்கச் செய்து கொண்டிருந்ததே! கவலை மாடுகளைப்போல் பின்வாங்கச் செய்து வந்ததே! ஆதலால், தான் வேலையை விட்டுவிட்ட செய்தி அவளுக்கு அதிர்ச்சி அளித்ததைக் கண்டதும் இப்பொழுதும் அவள் பின்வாங்கி விடுவாளோ என்று அவனுக்குச் சந்தேகம் ஏற்பட்டது.

முன்பெல்லாம் அவள் பின்வாங்கி விடுவாள் என்று எதிர்பார்க்கும்போதே, என்ன செய்து அவளுக்கு மீண்டும் தைரிய மூட்டலாம் என்பதையும் அவன் சிந்திப்பது வழக்கம். ஆனல் இன்று அவனுக்கு அதைப் பற்றிச் சிந்திக்கத் தோன்றவில்லை. இவ்வளவு தூரம் முன்னேறி வந்த பிறகுகூட ஓர் அற்ப விஷயத்துக்காக அவள் பின்வாங்கி விடுவாளானல், போகட்டுமே என்ற அசட்டைதான் அவனுக்கு ஏற்பட்டது. ஆம்! எந்தக் காரியமானாலும் ஓரிரு தடவைகள் என்றால் எல்லாருக்கும் சிறிது பரபரப்பாக இருக்கும்; சிரத்தை இருக்கும். அது தொடர்ந்து நடந்து கொண்டே இருந்தால் அலுப்புத் தட்டி விடாதா?

ஆதலால், இவளுடைய மனப்போக்கு நிலையற்றது என்ற திடமான முடிவுக்குச் சுந்தரம் இப்பொழுது வந்துவிட்டான். புரட்சி வாழ்வை நோக்கிச் செல்லும் அணிகரமான பிரயாணத்தில் ஒவ்வோர் அடியிலும் தயங்கி நின்று கொண்டும், பின்வாங்கிக் கொண்டும் இருக்கும் இவளை இனி

தம்பினால் நாமும் நமது லட்சிய வாயிலை எட்ட முடியாது என்று அவனுக்கு இப்பொழுது தீர்மானமாகப்பட்டு விட்டது. ஆகையால்தான் இன்று அவன் வீணாவைத் தேற்றும் முயற்சியில் ஈடுபடவில்லை. அதிர்ச்சி அடைந்த நிலையில் அவள் இருந்ததால் அச்சமயம் அவள் பின்வாங்கி விட்டதைக் குத்திக் காட்டி ஏளனமாகப் பேச மனம் வராமல் அவன் நின்றான். ஆனால், அவள் தன்னிலை அடைந்ததும், இவ்விஷயம் பற்றி ஒரு வார்த்தைகூடப் பேசக் கூடாது என்றும், அவளை எப்படியாவது ஊருக்குக் கொண்டு போய்ச் சேர்த்துவிட்டு, அதோடு அவளை அடியோடு மறந்து, தன் போக்கில் செயல்பட வேண்டும் என்றும் அவன் தீர்மானித்துக் கொண்டான்.

ஆனால் வீணா அவன் நினைத்ததற்கு மாறாக நடந்து கொண்டாள். சுந்தரம் வேலையை உதறி விட்டதைக் கண்டதும் அவள் மனம் பலப் பல எண்ணி நிலை தடுமாறியது என்னவோ உண்மையே. "ஐயோ! என் பொருட்டு அன்று ஒருவன் உயிரை இழந்தான், இன்று இவர் வேலையை இழந்துவிட்டார். இப்படி ஒவ்வொருவரையும் ஒவ்வொன்றை இழக்கச் செய்து கொண்டிருப்பது தருமா?" என்று அவள் வருந்திய போதிலும், அந்த வருத்தம் கண நேரந்தான் நீடித்தது. ஏனென்றால், விகாசைப் பற்றிய நினைவு தோன்றியதுமே அவளுக்கு அவன் மரணத்துக்குப் பின்னர் தான் செய்து கொண்ட திடமான உறுதி நினைவுக்கு வந்துவிட்டது. "இனி யாருக்கு என்ன நேரிட்டாலும் பின்வாங்குவதில்லை!" என்று அன்று அவள் உறுதி செய்துகொள்ளவில்லையா? எல்லாவற்றையும் சீர்தூக்கிப் பார்த்து, அந்த முடிவை இறுதி முடிவாகக் கொண்ட பிறகு மறுபடியும் தயங்குவதா? மறுபடியும் பின்வாங்குவதா? சீ! அது அவளுக்கு இனி நேர்மையில்லை.

வீணா, தான் அதிர்ச்சி அடைந்ததற்காக வெட்கினாள். மனந் தளர்ச்சி கொண்டதற்காகத் தன்மீதே அவளுக்குக் கோபம் கோபமாக வந்தது. அவள் தன்னைப் பற்றியிருந்த சுந்தரத்தின் கரங்களை மெதுவாக அகற்றிக் கொண்டே தலையைத் தாழ்த்தியவாறு, "சரி, மேலே என்ன செய்யப் போகிறீர்கள்?" என்று அமைதியுடன் கேட்டாள்.

"அது உன் முடிவைப் பொறுத்திருக்கிறது, வீணா! சற்று முன்வரை நான் கண்ணியமான வேலை ஒன்றில் இருந்தேன். நீ என்னோடு புரட்சிப் போரில் ஈடுபடத் துணிந்ததற்கு இந்த வேலை ஒரு காரணமாக இருந்ததென்றால், இனி நாம் பிரிந்தவர்கள் ஆகிவிட்டோம்...."

வீணா அவனை மேலே பேச விடாமல் சட்டென்று வாயைப் பொத்தினாள்.



"அசட்டுத்தனமாகப் பேசாதீர்கள்" என்றபோது அவள் குரலில் அவளை அறியாமலே ஒருவிதக் கண்டிப்பு ஏற்பட்டது. தொடர்ந்து சொன்னாள்: "நான் எத்தனையோ தடவை கூறியிருக்கிறேன், 'என்றாவது நான் உங்களுடன் இப்போரில் இணை சேரக் கூடுமானால், அதில் சுயநலக் கவர்ச்சி எதுவும் கலந்திராது; உங்கள் இளமையோ, வனப்போ, பணமோ, பதவியோ, எதுவும் அதற்குக் காரணமாக இராது; எங்கள் சமூகத்தை உய்விப்பதற்கு இன்றியமையாத இணைப்பாக மட்டுமே அது இருக்கும்' என்று. ஆதலால் வேலையை விட்டு விட்டதற்காக உங்களை உதறித் தள்ளி விடும் அளவுக்கு எனக்குப் பைத்தியம் பிடித்து விடவில்லை."

சுந்தரத்தின் சந்தேகம் கொண்ட மனம் இன்னும் தெளிவடையவில்லை. "அப்படியானால்.....?" என்று, அவன் அவள் முகத்தைக் கூர்ந்து நோக்கினான்.

"அடுத்த திட்டத்தை நாளைப் பகலில் விவாதித்துத் தீர்மானிப்போம். இனித் தான் உங்களுக்கும் எனக்கும் இங்கே வரவேண்டிய வேலை இல்லையே!" என்று அவள் குறுநகையைச் சிந்தினாள்.

அவசரப்பட்டுக்கொண்டு அவள் மனம் தளர்ந்து விட்டதாகக் கருதியதற்கு இப்பொழுது சுந்தரம் வெட்கினான். ஆனால் அவன் அதை வெளிக் காட்டிக்கொள்ளாமல், "சரி, டிஸ்பென்சரியைப் பூட்டிக் கொண்டு வா; ஊருக்குப் போவோம்" என்று கூறினான்.

வீணா பெரிதாகச் சிரித்துவிட்டு, "இனிமேல் இங்கே பூட்டவும் வைக்கவும் என்ன இருக்கிறது? இருந்த சில மருந்து சீசாக்களையும் கருவிகளையுந்தான் வண்டியில் ஏற்றி அனுப்பியாயிற்றே! இங்கே கிடக்கும் மேசை நாற்காலிகளும், அலமாரியும் அரசாங்கத்தைச் சேர்ந்தவை. அவற்றையும் இப்பொழுதே பிரதம இன்ஜினீயரிடம் ஒப்படைத்து விட்டால், மறுபடியும் இங்கே வர வேண்டிய வேலையே இல்லை" என்றாள்.

அவள் விஷயத்தை இவ்வளவு இலேசாக எடுத்துக் கொண்டது சுந்தரத்துக்குத் தெம்பு அளித்தது. அவன் மனத்தில் இப்பொழுது நிம்மதியும் களிப்பும் நிறைந்தன. "ஆமாம்! அதையும் இப்பொழுதே முடித்து விடுவோம். எனக்கும் இந்தப் பாவ மண்ணில் மீண்டும் அடி எடுத்து வைக்க மனமில்லைதான். நமது புனிதப் போருக்கு இரண்டு உயிர்களைப் பலி வாங்கிக் கொண்ட பாழ்பூமி அல்லவா இது?" என்று அவன் மிகுந்த மனக் கசப்புடன் கூறினான்.

"பூமியைப் பழிக்காதீர்கள், சுந்தர்! அது ஒரு பாவமும் அறியாதது. நல்லவர்களையும் சுமக்கிறது; நயவஞ்சகர்களையும் சுமக்கிறது. மக்களின் அநியாயச் செயல்களுக்கு அவர்கள் வாழும் ஊர் எப்படிப் பொறுப்பாகும்?"

"அப்படிச் சொல்ல முடியாது, வீணா! மக்களால் உருவானதுதான் ஊர். நாளைக்குச் சமூகம் தன் தவற்றை உணர்ந்து, திருந்தி, தனது பிழைகளுக்காக வருந்தும்போது, நல்வழிப்பட்ட மக்கள், "ஏ, பழிக்களமே!" என்று தான் இந்தக் காலனியைத் தூற்றுவார்கள். இங்கே உருவாகி வரும் அணையால் இந்த ஊர் பிரசித்தி பெறலாம். ஆனால் அபலைகளின் வாழ்வுக்கு அணை அமைப்பதைத் தடை செய்த அவப்பெயரை அது மறைத்து விட முடியாது. சரி, வா போகலாம். எனக்கு இங்கே தங்கும் ஒவ்வொரு கணமும் நெருப்பின் மீது நிற்பது போலிருக்கிறது!" அவன் வெறி கொண்டவன் போல் வீணாவின் கையைப் பிடித்துத் தரதர வென்று இழுத்துக் கொண்டு கிளம்பினான்.

அறிவிலி அவன்! இங்கே தங்குவது தான் நெருப்பின் மீது நிற்பதுபோல் இருக்கிறதாம் அவனுக்கு! இனி அவன் காலடி வைக்கப் போகும் ஒவ்வோர் இடமும் நெருப்புக் கிடங்காக மாறப் போகிறது என்பதைப் பாவம், அவன் எங்ஙனம் அறிவான்!

* * *

சச்சிதானந்தமும் புஷ்பவனமும் முன்னவர் வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்தனர். அப்பொழுது இரவு எட்டரை மணி இருக்கும். கேசவபுரத்தில் இரவு எட்டு மணிக்கே ஊர் அடங்கிவிடும். தெருவில் அப்பொழுது இவர்களையன்றி வேறு யாரும் இல்லை.

அவர்கள் ஊர்ச் செய்திகளைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தார்கள். அப்பொழுது சச்சிதானந்தத்தின் வீட்டுக் கூடத்திலிருந்த சுவர்க் கடிகாரம் அரை மணி அடித்தது. அதைக் கேட்டதும் அவர் பேசிக்கொண்டிருந்த விஷயத்தைச் சட்டென்று நிறுத்திவிட்டு, "மணி எட்டரை ஆயிப் போச்சே, தம்பி; இன்னும் இந்தச் சிறிசைக் காணோமே!" என்றார் சிறிது கவலையுடன்.

"ஆங்...வருவாங்க. வராமல் எங்கே போயிடப் போகிறாங்க. இப்பொவெல்லாம் சுந்தரந்தானே அவளைக் கூட்டிக்கிட்டு வரான். ஊர்க்காரங்க கலாட்டாப்பண்ண ஆரம்பிச்சிருக்கிறாங்கன்னு கேள்விப்பட்ட அன்றைக்கே, மகன்கிட்டே சொல்லிட்டேன்: 'அடேய்!



பானுமதி
நாகையா
கெம்பராஜ் நடிக்கும்
கெம்பராஜ்
புரொடக்ஷன்ஸ்
நளதமயந்தி
ஜனதா ஸினி கார்பொரேஷன்
ரிலீஸ்
மலிபுகழ் நளன் சரிதை கேட்டவர்க்கு கலியதும் பயமேது!
உரிமைகளுக்கு எழுதவும்:
ஜனதா சினி கார்ப்பொரேஷன் பிரைவேட் லிமிடெட், 2-வது மாடி, 35, மவுண்ட் ரோடு, சென்னை-2

உன்னை நம்பித்தான்டா அத்தான் அவனை அங்கே ஆஸ்பத்திரி வைக்க ஏற்பாடு செய்திருக்கிறுங்க. வினைவைப் பொழுது இருட்டிட்ட பிறகு தனியாப் புறப்பட்டு வரவிடாதே. நீ வேலையை முடிச்சுக்கிட்டு வர வரைக்கும் காத்திருக்க வைச்சுக் காரிலே கூடக் கூட்டிக் கிட்டு வந்து விட்டிலே இறக்கி விட்டுடு'ன்னு ஏற்பாடு செய்திருக்கேனுங்க. கவலைப்படாதீங்க'' என்றார் புஷ்பவனம் ஆறுதலாக.

"என்னவோ போங்க. இப்போ என் மகளுக்குப் போதாத காலமின்னுதான் நினைக்க வேண்டியிருக்குது. ஊர்க்காரங்களுக்கு நல்லது செய்யணுமின்னு ஆஸ்பத்திரி வைக்கப்போக, அவங்க தப்புத் தண்டாவா என்னென்னமோ நினைச்சுக் கிட்டுக் கலாட்டாப் பண்ணுறதுன்னும் ஆட்களைக் கொல்லறதுன்னும் துணிஞ்சுட்டாங்கன்னு இதைப் போதாத காலமின்னுதானே நினைக்கணும். இதுதான் சாக்குன்னு இங்கே தைலம்மா வேறே தொண தொணக்க ஆரம்பிச்சுட்டா. எனக்குச் சேரவாய்மலைக்காரங்க பண்ணிக்கிட்டிருக்கிற கலாட்டாக் கூடப் பெரிசாப் படலை; இவ பேசற பேச்சைத்தான் தாங்க முடியலை, தம்பி! இந்த ஜனங்களுக்கு என்ன பைத்தியம் பிடிச்சுப் போச்சான்னுதான் நினைக்கத் தோணுது. உங்க காதிலேகூட விழுந்திருக்குமே, இவங்க எல்லாருமாச் சேர்ந்துக்கிட்டு வினைவையும் சுந்தரத்தையும் பற்றிக் கேவலமாகப் பேசிக் கொண்டிருக்கிற பேச்சு!"

"கிடக்கிறுன் போங்க; இவங்க பேசிட்டா நம்ப குழந்தைகள் கெட்டவங்களா ஆயிடுவாங்களா? நாம் பெற்று வளர்த்த பிள்ளைகள், நம்ம ரத்தம் உடலிலே ஓடிக் கொண்டிருக்கிற குழந்தைகள், இந்த உலகமே தலைகீழாப் புரண்டாலும் தப்பான வழியிலே போகாதுங்கிற தைரியம் எனக்கு இருக்குதுங்க. என்னவோ படிச்ச குழந்தைகள், பட்டணத்திலே வசிச்ச குழந்தைகள், மனசிலே களங்கமில்லாமல் பழகிக்கிட்டு இருக்குது; அதைப் பார்த்துட்டு, இந்தப் பட்டிக்காட்டு ஊர்க்காரங்கதான் தப்பா நினைக்கிறுங்கன்னு, நம்ம விட்டுப் பெண்டுகளும் தாம் - திமின்னு குதிச்சுக்கிட்டு இருக்கிறது எனக்குந்தான் பிடிக்கலை. ஆனால், அதுக்காக நாம் வருத்தப்பட்டுக் கிடக் கூடாது. அதுகளுக்கு என்ன தெரியும், அடுப்படியிலே காலங்கடத்திக் கிட்டு இருக்கிற பிறவிகள். அடிமேல் அடி அடிச்சா அம்மியும் நகரும் என்கிற கணக்கிலே ஊர்ப் பேச்சைக் கேட்டுக் கிட்டுக் கலங்கிக்கிட்டு இருக்குது. அதையெல்லாம் நாம் காதிலே போட்டுக் கிடக் கூடாது; அவங்க சொல்லுறுங்களே என்கிறதுக்காக அந்தக் குழந்தைகள் சிநேகிதத்திலே குறுக்கே விழவும் கூடாது."

"ரொம்ப சந்தோஷமா இருக்குது தம்பி உங்க பேச்சைக் கேட்க. நான்கூட அந்த முடிவோடுதான் இருக்கிறேன். இந்த ஆஸ்பத்திரியும் வேண்டாம்; இழவும் வேண்டாம். எல்லாத்தையும் மூடிப்போட்டு விட்டோட இருக்கச் சொல்லு, இல்லாட்டி வேறே எங்கே யாவது பட்டணக்கரையிலே போய் ஆஸ்பத்திரி வைக்கச் சொல்லுன்னு ஒரு மாசமா என்னை நச்சரிச்சுப் பார்த்தாள் தைலம்மா. நான் கண்டிப்பா, என்ன வந்தாலும் வினைவின் காரியத்திலே குறுக்கிட மாட்டேன்னு சொல்லிவிட்டேன். பின்னே என்ன தம்பி, அதை ஊரைவிட்டு விரட்டிறு, ஊர்க்காரங்க அதுக்குச் செய்துக்கிட்டு இருக்கிற துரோகத்தை விடப் பெரிய துரோகமாக ஆயிடாதா நாம் செய்யறது!"

பாவம்! இந்த முதியோருக்குத்தான் எத்தனை நம்பிக்கை தங்கள் மக்களிடம்! இவர்களையும் அறிவிலிகள் என்று ஏன் சொல்லக் கூடாது? தங்கள் மக்களின் நடத்தையைச் சிறிதும் சந்தேகிக்காத இவர்கள் ஆதரிசப் பெற்றோர்களாக இருக்கலாம்; ஆனால் அறிவிலிகள் என்பதை மறுக்க முடியாது!

இவர்கள் இப்படிப் பேசிக்கொண்டிருக்கையிலேயே புங்கனூற்றுக் காலனியிலிருந்து மாடசாமி வண்டியுடன் திரும்பி வந்தான். "ஏன் மாடசாமி! இவ்வளவு நேரம்? அம்மாதான் சுந்தரத்துடன் காரில் வருகிறுளே; நீ வண்டியைக் கட்டிக்கொண்டு பொழுது இருட்டுவதற்குள் திரும்பியிருக்கக் கூடாது!" என்று வண்டியிலிருந்து இறங்கித் தங்களை நோக்கி வந்து கொண்டிருந்த மாடசாமியைக் கேட்டார் சச்சிதானந்தம்.

"தானே முதல் இந்தத் தொல்லையெல்லாம் இல்லீங்க" என்றுன் மாடசாமி. அவன் குரலில் எல்லையற்ற வருத்தம் தொனித்தது.

"என்னப்பா விஷயம், மாடசாமி?" என்று மிகுந்த பரபரப்புடன் கேட்டார் புஷ்பவனம் பிள்ளை.

"நம்ம குழந்தை அங்கே ஆசுபத்திரி நடத்தக் கூடாதுன்னு சர்க்காரிலே உத்தரவு போட்டுட்டாங்களாம்; மருந்துச் சாமான்களையெல்லாம் கட்டி எடுத்துக் கொண்டாந்துட்டேன். ஏங்க முட்டாப் பய சனங்கதான் அதுக்கு அநியாயம் பண்ணிறுங்கன்னு, சர்க்காருமா இப்படி அநியாயம் பண்ணும்? எனக்கு வவுறு எரியுதுங்க! அப்படி என்னங்க தப்புச் செய்திடிச்சி நம்ம குழந்தை?"

சச்சிதானந்தமும் புஷ்பவனமும் இச் செய்தியைக் கேட்டுத் திடுக்கிட்டனர். மாடசாமி கூறியதுபோல், இது வீணாவுக்குச் சர்க்கார் இழைத்த மகத்தான அநியாயம் என்று அவர்களுக்குத் தோன்றியபோதிலும், அந்தக் காலனியில் அமைதி நிலையைக் குலைக்க அவளுடைய டிஸ்பென்சரியே காரணமாகிவிட்டதால் அதை மூடிவிடுமாறு உத்தரவு இட்டிருக்கலாமென்று மனத்தைத் தேற்றிக் கொண்டார்கள். புஷ்பவனம் அலட்சியமாக மற்றொரு, "கிடக்கிறான், போங்கள்!" போட்டுவிட்டு, "சேரவாய் மலைக்காரங்களின் நஷ்டம் நம்ம ஊர்க்காரங்களுக்கு லாபமாச்சு. இனிமேல் வீணா, நம்ம ஊர் ஆஸ்பத்திரியிலேயே முழு நேரத்தையும் செலவிட்டு அதைப் பெரிசாக்கலாம். அவங்க யாராச்சும் காலைத் தலையை வலிக்குதுன்னு இங்கே வந்தால் வாயிலே ஓலையைக் கட்டி விரட்டிடணும்" என்று கூறியவாறு விடைபெற்றுக் கொண்டார்.

வீணாவின் புங்கனூற்று டிஸ்பென்சரி மூடப்பட்டதை அவர் அலட்சியமாகப் புறம்படுத்தி விட்டார்; ஆனால் அதன் எதிரொலியாக எழுந்த சம்பவங்களை அவரால் அலட்சியப்படுத்த முடிந்ததா?

அன்றிரவு சுந்தரம் வீடு திரும்பிய போது புஷ்பவனம் தூங்கிப் போய்விட்டார். அவர் கவலைகளுக்கு இடம் கொடாத மனிதர். எந்தக் காரியத்தையும் பெரிது படுத்தி உள்ளத்தைக் குடைந்து கொண்டிருக்க விட மாட்டார். ஆயினும் இந்த விஷயத்தை — என்ன காரணத்துக்காக அரசாங்கத்தார் வீணாவை டிஸ்பென்சரியை மூடச் செய்தனர் என்பதை-விவரமாகக் கேட்டுத் தெரிந்துகொள்ளும் ஆர்வம் அவருக்கு இருக்கத்தான் இருந்தது. ஆதலால், மறுநாள் காலையில் சுந்தரம் தூங்கி எழுந்து மச்சிலிருந்து இறங்கி வந்ததும், "ஏண்டா சுந்தரம், நேற்று என்னடா நடந்தது?" என்றார்.

சுந்தரம் அங்கே நடந்ததை விவரிக்க ஆரம்பித்ததுமே, மரகதத்தம்மாளும் அங்கு வந்து நின்றுகொண்டு அவன் கூறியது முழுவதையும் செவிமடுத்தாள். சுந்தரம் முடித்ததும் அவள் நிம்மதிப் பெருமூச்சு விட்டுக்கொண்டு, "செந்தி வேல் முருகன்தான் காப்பாற்றினான். என் மகனைப் புடிச்சிருந்த சனியனிலே பாதி விட்டுடுச்சு!" என்றாள்.

சுந்தரத்துக்குப் படுகோபம் வந்துவிட்டது. "அப்படி என்னைப் பிடித்திருந்

தது சனியாக இருந்தாலும் அது என்னை விட்டு நீங்கி விடவில்லை. இன்னும் நெருக்கமாகத் தன்னோடு ஐக்கியப் படுத்திக்கொள்ள வகை செய்து விட்டது. நான் வேலையை ராஜிநாமாச் செய்து விட்டேன்!'' என்று கத்தினான் அவன்.

"என்ன? வேலையை விட்டுட்டியா! ஏன்டா?'' என்று அலறினார் புஷ்பவனம்.

"ஆமாம், அப்பா! வீணாவுக்காகவே நான் அங்கே வேலை பார்த்துக் கொண்டிருந்தேன். எப்பொழுது அவளுக்கு அங்கே இடமில்லை யென்றாகிவிட்டதோ, அப்பொழுது நானும் அந்த இடத்தில் அடி எடுத்து வைக்க விரும்பவில்லை.''

"இது என்னடா பைத்தியக்காரப் பேச்சு, சுந்தரம்? வீணாவை அங்கே வைத்தியசாலை நடத்த வேண்டாமின்னாங்கன்னு, எதுக்காக அப்படிச் சொன்னாங்கன்னு விசாரிச்சு அவங்க மனசிலே இருக்கிற சந்தேகத்தைப் போக்கி, அவளுக்கு மறுபடியும் அங்கே தொழில் நடத்த இடம் வாங்கிக் கொடுக்க வழி பார்ப்பாங்களா, காலை பெற்றது; கயிறெடு என்கிற கணக்கிலே வேலையை விட்டுட்டேன் என்கிறாயே. பரவாயில்லை; நேற்று ராத்திரித்தானே ராஜிநாமா எழுதிக் கொடுத்திருக்கிறே. நானும் சச்சிதானந்த மாமாவுமா முதலியாரையா வைப் போய்ப் பார்த்து அதை மேலதிகாரிகளுக்கு அனுப்பாமச் செய்து விடுகிறோம். நல்ல வேலைதான் செய்தாய், தம்பி!'' என்று வருந்தினார் புஷ்பவனம்.

"வேண்டாம் அப்பா! அவர்கள் என் ராஜிநாமாவை அங்கீகரிக்காமல் போனாலும் நான் அங்கே வேலைக்குப் போக முடியாது. தவிர, அந்தக் கேடுகெட்ட ஊர்க்காரர்களின் மனத்தில் ஆழமாகப் பதிந்துவிட்ட சந்தேகத்தை யாராலும் போக்கவும் முடியாது.''

"ஆமாங்க; வேண்டாமின்னா விட்டு விடுங்க. என் மகன் என்ன வேலை செய்துதான் பிழைக்கணும் என்கிற நிலைமையிலே இருக்கிறவனா? வேலையை விட்டான்னா மறுபாதி சனியனும் விட்டதுன்னு, அவனுக்குக் காலாகாலத்திலே ஒரு கலியாணத்தைப் பண்ணி வையுங்க. நீங்க அணைக்குப் போகிறதுக்குப் பதில் பேசாமெ என்னோடே நடுத் தெருவுக்கு வாங்க. தைலக்காளிட்டேயும், அவங்க அண்ணாரிட்டேயும் போயி மாலாவைப் பெண் கேட்டுட்டு வரலாம்'' என்றாள் மரகதத்தம்மாள்.

தாயின் பேச்சு இப்பொழுது சுந்தரத்தை விழிப்படையச் செய்தது. அவன் உள்ளத்தில் முன்னாள் இரவு முழுதும் ஒரு பெரும் போராட்டம் நிகழ்ந்தது. அந்தப் போராட்டத்தின் இறுதியில், வீணாவைத் தான் மணந்துகொள்ள நிச்சயித்திருப்பதை இனித் தன் பெற்றோருக்கு மறைத்து வைக்கக்கூடாது என்று அவன் தீர்மானித்திருந்தான். அதைச் சொல்ல வேண்டிய சந்தர்ப்பம் இப்பொழுது வந்து விட்டது. இதுவரையில் எத்தனையோ தடவைகள் அதைச் சொல்லி விட வேண்டுமென்று அவன் துடித்திருக்கிறான். ஆனால் தைரியம் வந்ததில்லை. இன்று அவன் துணிந்துவிட்டான். தைரியத்தையெல்லாம் மிகவும் சிரமப்பட்டுத் திரட்டிக்கொண்டு சொல்லியே விட்டான். விதவைகளின் மறுவாழ்வுக்குப் பாடுபடும் பணிக்குத் தன்னை அர்ப்பணித்துக்கொண்டு விட்டதாகவும், அதற்கு ஒரு வழிகாட்டியாக விளங்கும்பொருட்டு வீணாவையே மணந்துகொள்ளத் தீர்மானித்து விட்டதாகவும் அறிவித்தான்.

"ஐயோ!'' என்று வீரிட்டனர் புஷ்பவனமும் மரகதத்தம்மாளும்.

"நான் அன்னைக்கே சொன்னேனே, கேட்டீங்களா? இப்போ தலையிலே, துணியைப் போட்டுக்கிட்டுக் கூடத்து மூலையிலே போய் உட்கார்ந்துக்கிடுங்க.''

புஷ்பவனம் கிட்டத்தட்ட அழுதே விட்டார். "வேண்டான்டா மகனே! இது நம்ம குடும்பத்துக்காரங்க செய்யற காரியமில்லை. வேண்டாம்; அந்த நினைப்பை விட்டுடு'' என்று கதறினார்.

"எல்லாம் அந்த அறுதலிப் பொண்ணு பண்ணின கூத்துங்க. அந்த மாய்மாலக்காரி என் மகனை அட்டையாப் புடிச்சுக்கிட்டுச் சொக்குப் பொடி போட்டு விட்டாள்!'' என்று ஒப்பாரி வைத்தாள் மரகதத்தம்மாள்.

ஆனால் அவர்களுடைய அழுகையும் இறைஞ்சல்களும் சுந்தரத்தின் உறுதியைக் கொஞ்சங்கூடத் தளர்த்தவில்லை.

"அடேய்! கடைசிக் கடைசியாச் சொல்லுறேன். நீ அவளை மறந்து மாலாவைக் கட்டிக்கிட்டாத்தான் எங்கள் மகன். இல்லாட்டி உனக்கும் எங்களுக்கும் எல்லா உறவும் விட்டு விட்டது!'' என்று புஷ்பவனம் இரைந்தார்.

"நீங்கள் மட்டுமென்ன? என்னைப் படைத்த கடவுளே, எனக்கும் அவளுக்கும் இனி எவ்விதச் சம்பந்தமும் இல்லையென்று சொன்னாலும், என் முடிவை மாற்றிக்கொள்ளப் போவதில்லை. நான் வருகிறேன்'' என்று கூறி விட்டுக் கிளம்பினான் சுந்தரம்.

"சுந்தரம்! சுந்தரம்! எங்கேடா போறே, மகனே?'' என்று அலறினாள் மரகதத்தம்மாள்.

"வேண்டாம் மகனே; நில்லுடா!'' என்று கதறி அழுதார் புஷ்பவனம்.

ஆனால் சுந்தரம் நிற்கவில்லை. அவன் உடுத்திய துணியுடன் வீட்டை விட்டு வெளியேறி விட்டான். **(தொடரும்)**



வேங்கடம் முதல் குமரி வரை

# அல்லிக்கேணி அழகன் சாரதி

பார்த்தனுக்கு அன்று கண்ணன் செய்த கீதை உபதேசம், பாரில் உள்ள மக்களுக்கு எல்லாம் இன்று பயன்படுகிறது. 'பலன் கருதாது உன் கருமத்தைச் செய்யக் கற்றுக் கொள்' என்று கீதாசாரியனான கண்ணன் பார்த்தனுக்குக் கூறியிருக்கிறான் அன்று. கீதோபதேசம் செய்ய நேர்ந்த சந்தர்ப்பம் பாரதக் கதையிலேயே ஓர் அழகான கட்டம். அதைக் கீதையிலேயே விரிவாகக் குறிப்பிட்டிருந்தாலும், மிகவும் ரத்தினச் சுருக்கமாக அழகான வெண்பாக்களில் கூறுகிறார் பாரதம் பாடிய பெருந்தேவனார். குருக்ஷேத்திரத்திலே பாண்டவர் படையும் கௌரவர் படையும் அணிவகுத்து நிறுத்தப்பட்டிருக்கின்றன. அப்போர்க்களத்துக்கு அர்ச்சுனன் வருகிறான் தேரூர்ந்து. தேரை நடத்துபவன் கண்ணன். பாண்டவரில் ஒருவனான அர்ச்சுனன் எதிர்ப் பக்கத்தில் இருக்கும் உறவினர்களையும் படை வீரர்களையும் பார்த்த உடனே இத்தனை பேர்களையும் கொன்று குவித்துத்தான் நாடாட்சி செய்ய வேண்டும் என்றால், அந்த அரசு அவசியம் வேண்டியதுதானா என்று எண்ணுகிறான். உள்ளத்தில் ஒரு சோர்வே ஏற்படுகிறது அவனுக்கு. கையில் உள்ள வில் நழுவுகிறது. தேர்த்தட்டின் மீதே திகைத்து இருக்கிறான்.

உற்றாரை எல்லாம்
உடன்கொன்று அரசாளப்
பெற்றாலும் வேண்டேன்
பெருஞ்செல்வம்—சொல்தாழ்ந்து
வாள்தடக்கை வில் நெகிழ
வாளா இருந்திட்டான்
தேர்த்தட்டின்மீதே திகைத்து

என்று ஆரம்பிக்கிறார் பெருந்தேவனார். பூபாரம் தீர்க்கப் பிறந்த புயல் வண்ணனான கண்ணன் இந்த நிலையில் பார்த்தனைப் பார்க்கிறான். அவனுக்குக் கீதோபதேசமே செய்கிறான். 'இவ்வுலகில் ஒவ்வொரு மனிதனும் தான் செய்யும் காரியங்களுக்குத் தானே கர்த்தா என்று எண்ணிக் கொள்வதனால் தானே இத்தனை மனக்கஷ்டம். ஆக்கி, காத்து, அழிப்பவன் இறைவன்; ஆதலால் செய்யும் காரியங்களையெல்லாம் அவனே செய்கிறான் என்று மட்டும் எண்ணத் தெரிந்து விட்டால் எவ்வளவு கஷ்டங்கள் மனிதன் மனத்தில் இருந்து நீங்கிவிடும். மேலும், கருமங்கள் செய்வதும், அப்படிச் செய்யும் கருமங்களின் பலாபலன்களைச் சிந்திப்பதும் மனிதன் செய்ய வேண்டிய செயல் அல்லவே. பலன் கருதாது பணி செய்ய மனிதன் கற்றுக் கொள்ள வேண்டுமே. ஆதலால் பார்த்தா! நீ உன் கருமத்தைச் செய். பலாபலன்களைச் சிந்தியாதே' என்று உபதேசிக்கிறான் பார்த்தசாரதியான கண்ணன். அப்படி உபதேசம் பண்ணியவன் எல்லா அண்டங்களிலும் அவனே நிறைந்திருக்கிற தன்மையை விளக்கத் தனது விசுவரூபத்தையே காட்டுகிறான். இதையுமே சொல்கிறார் பெருந்தேவனார்.

பிறப்புநிலை கேடு
இவையாவான், பாவம்
அறத்தினோடு ஐம்பூதம்
ஆவான்—உறற்கரிய
வானாவான், மண்ணாவான்
மன்னுயிர்கள் அந்தனையும்
தான்ஆதல் காட்டினான்தான்

இந்த உபதேசத்தைக் கேட்டு, இந்த விசுவரூபத்தைத் தரிசித்த பின், பார்த்தனது மயக்கம் தெளிகிறது. போர் ஏற்கிறான். போரில் பகைவர்களையெல்லாம் வென்று வாகை சூடுவதற்குக் காரணமாயிருந்தவனும் அவன் தானே. ஆம், அந்தப் பார்த்தசாரதியாம் கண்ணன்தானே. அந்தப் பார்த்தசாரதி கோயில் கொண்டிருக்கும் இடம்தான் சென்னையின் ஒரு பகுதியான திரு அல்லிக்கேணி. அங்கு தான் செல்கிறோம் இன்று.

மகாவிஷ்ணு எடுத்த அவதாரங்கள் பத்து. ஒவ்வொரு அவதாரத்திலும் அவர் கொண்ட கோலங்கள் பல. அதில் பார்த்தனது சாரதியாய் இருந்து தேரோட்டியது கிருஷ்ணாவதாரத்தில். கிருஷ்ணனுக்கு என்று பல கோயில்கள் இருந்தாலும், பார்த்தசாரதிக் கோலத்துக்கு என்று இருப்பது இக்கோயில் ஒன்றே ஒன்றுதான். மேலும் ஒரு விசேஷம் இக்கோயிலில். அரங்கநாதனைக் காணக் கோயில் என்னும் ஸ்ரீரங்கம் செல்லவேண்டும். வேங்கடேசனைப் பார்க்க, திருமலை என்னும் வேங்கட மலைமேல் ஏறவேணும். வரதராஜனைக் காண, பெருமாள் கோயில் என்னும் காஞ்சிக்கே போகவேணும். இன்னும் நரசிம்மனைக் காண அஹோபலமும், ராமனைக் காண அயோத்திக்கும் போகவேணும். ஆனால் இந்தப் பஞ்ச மூர்த்திகளை இந்தத் திருவல்லிக்கேணி கோயில் ஒன்றிலேயே கண்டு விடலாம். அங்கு பார்த்தசாரதியைத் தொழச் சென்றால் பஞ்சபாண்டவர்க்காகத் தூது சென்ற பார்த்தசாரதி கோயிலிலே பஞ்சமூர்த்திகளையும் ஒருங்கே வழிபாடு செய்ய வகை செய்திருக்கிறார்களே, அதுவே ஒரு பெரிய விசேஷம்தானே.

இந்தக் கோயிலைப் படத்தில் பார்த்தாலும் சரி, நேரில் சென்று கண்டாலும் சரி, கோயில் முன்னால், சந்நிதிக்கு நேர் எதிரே இருக்கும் புஷ்கரணியைப் பார்க்காமல் இருக்க முடியாது. அதுவே ஆதியில் அல்லி மலரும் சிறிய கேணியாயிருந்து பின்னர் விரிந்து பரந்த

தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்

பெரிய தெப்பக் குளமாக இருக்க வேணும். இதனையே கைரவணி புஷ்கரணி என்று நீட்டி முழக்கிச் சொல்கிறது ஸ்தல புராணம். இந்த புஷ்கரணி தீர்த்தம் கங்கையை விடப் புனிதம் என்று கூறும் தல வரலாறு. இத்திருக்குளத்தில் மீன்களே வசிப்பதில்லை. யாரோ ஒரு முனிவர், இக்குளக்கரையில் தவம் செய்யும் போது குளத்தில் உள்ள மீன்கள் துள்ளி விளையாடி அவர் தவத்தைக் கலைத்ததென்றும், அதனால் கோபமுற்ற முனிவர் இக்குளத்தில் மீன்களே இல்லாமல் போக என்று சபித்ததாகவும் கதை. (சரி! இச்சாபத்தால் துயர் உறுகிறவர் நாமே. அழுக்கை யெல்லாம் உண்ணும் மீன்கள் இல்லாது போக எல்லா அழுக்கும் சேர்ந்து இரண்டு குளத்தையே மிக மிக அசுத்தமாக வைத்திருக்கிறது முனிவர் சாபம்) இந்தப் புஷ்கரணியில்தான் பார்த்தசாரதியின் தெப்போற்சவம் ஏழு நாட்கள் நடைபெறுகிறது. சிறப்பான திருவிழா.

இனி, கோயிலுள் நுழையலாம். கோயிலின் முன்புள்ள மண்டபங்களைக் கடந்து தான் மகா மரியாதை வாயிலுக்கு வரவேணும். இந்த வாயிலுக்கு மேல்தான் முகத்துவாரக் கோபுரம் இருக்கிறது. ஐந்து அடுக்கும், ஏழு கலசமும் கொண்ட கோபுரம் புதுப்பிக்கப் பட்டிருக்கிறது. சில வருஷங்களுக்கு முன்னமேயே. இதைக் கடந்து, இன்னும் உள்ளேயிருக்கும் தொண்டரடிப்பொடி வாசலையும் கடந்துதான், பார்த்தசாரதியைச் சேவிக்கச் செல்லவேணும். இந்தக் கோயிலில் ஒரு சம்பிரதாயம், பார்த்தசாரதியைச் சேவிக்கு முன்பே மற்றவர்களை யெல்லாம் தரிசித்துவிட வேணும் என்று. ஆகவே பார்த்தசாரதியை வலமாகச் சுற்றி வணங்க வேண்டியவர்களை வணங்கிவிடலாம் முதலில். சந்நிதி வாயிலிருந்து தென்பக்கம் திரும்பியதும், நம்மை ஆட்கொள்ள இருப்பவள் **வேதவல்லித்** தாயார். இவள் சர்வாங்க சுந்தரி. ஸ்ரீவைகுண்டத்தில், ஸ்ரீமந் நாராயணனோடு வாழ்ந்திருந்த மகாலக்ஷ்மி பூலோகத்தில் **பிருந்தாரண்யம்** என்னும் இந்தத் திரு அல்லிக்கேணிக் கரையிலே பிருகு மகரிஷியின் பர்ணசாலையருகே ஒரு சந்தன மரத்தடியிலே, பெண் மகவாகத் தோன்றுகிறாள். அவளை எடுத்து வேதவல்லி என்று பெயரிட்டு வளர்க்கிறார் பிருகு மகரிஷி. இவள் மங்கைப் பருவம் அடைந்தபின் இவளைக் கண்டு காதலித்து மணம் புரிந்து கொள்கிறான் **மந்நாதன்**. இவனைக் கண்டு 'இவனே என்நாதன்' என்று வேதவல்லி மிக்க நாணிக்கோணி கூறியதால் இவன் மந்நாதன் என்று பெயர் பெற்று இங்கேயே தங்கிவிடுகிறான். கொஞ்சம் சவுகரியமாகக் காலை நீட்டியே படுத்தும் விடுகிறான். இந்த மந்நாதனுக்கு (அரங்கநாதன் கோலத்தில் இருப்பவனுக்கு) ஒரு தனி சந்நிதி இக்கோயிலின் உள்ளேயே. இந்த 'ஒரு வல்லித்தாமரையாள் ஒன்றிய சீர்மார்பனையே திருவல்லிக்கேணி வந்து கண்டு' தொழுதார் பேயாழ்வார்.

இனி நாம் வணங்க வேண்டியவர் **தெள்ளிய சிங்கமாம்** நரசிங்கப்பெருமாளையே. இவர் பார்த்தசாரதியின் கர்ப்பக் கிருஹத்துக்குப் பின்பு மேற்கு நோக்கியவராய் யோக நிலையில் இருக்கிறார். இவர் இந்த பிருந்தாரண்யத்திலே அத்திரி மகரிஷிக்கும் பிரத்தியக்ஷம் ஆன அவசரத்திலே இருக்கிறார் என்பது புராண வரலாறு. இந்தக் கோயிலுக்குள்ளே **ராமன்** எப்படிக் குடிபுகுந்தான் என்பதற்கும் ஒரு வரலாறு உண்டு. சுமதன் என்னும் முனிவர் பாண்டாரம் என்னும் மலையில் தவம் புரிகிறார். அவர் தவத்தைக் கலைக்க ஹேமலை என்னும் அப்ஸரஸ் வருகிறாள். (பெரிய முனிவர் தவத்தை ஒரு சிறிய மீன் கலைத்தது என்றில்லையே, போகட்டும் அந்த மட்டும்) முனிவர் தவம் கலைகிறது. ஆண் மகவு பிறக்கிறது. அந்த ஆண் மகவை விட்டு விட்டுப் பிரிந்து விடுகின்றனர் முனிவரும், தேவகன்னிகையும். குழந்தை மரத்திலிருந்து சொட்டிய தேனை உண்டே வளர்கிறது. மதுமான் என்றே பெயர் பெறுகிறது: இந்த மதுமானுக்குத் தரிசனம் தரவே அன்று மாயமானை வேட்டுச் சென்ற ராமன் இங்கு எழுந்தருளியிருக்கிறார், அனுமனோடு சீதா லக்ஷ்மண பரத சத்துருக்கன சமேதனாக. இத்தனை பேர்கள் இங்கு வந்திருக்கும்போது அந்தக் கருடவாகனர் கஜேந்திர **வரதராஜனைச்** சும்மா இருக்க விடுவார்களா? ஸப்த ரோமா என்ற மகரிஷி அவரை வரவழைக்கிறார் இங்கே. அவருக்கும் ஒரு தனி சந்நிதி. இவ்விதமே, மந்நாதன், நரசிம்மர், ராமர், வரதர், எல்லோருமே வந்து சேர்ந்திருக்கிறார்கள் இந்தக் கோயிலுக்கு—இவர்களைத் தவிர ஆண்டாள், அனுமன், ஆழ்வார்களுக்கு எல்லாம் தனித்தனி சந்நிதி உண்டு.

ஆண்டாள் சந்நிதிப் பக்கத்திலிருந்து பார்த்தசாரதியின் கர்ப்பக்கிருஹத்தின் மேல் உள்ள **ஆனந்த விமான** சேவை செய்துவிட்டு, பார்த்தசாரதியைத் தரிசிக்க விரையலாம். மூலத்தானத்தில் கம்பீரமாக முறுக்கிய மீசையோடு நீண்டுயர்ந்த தோற்றத்தில் காட்சி அளிப்பவனே **வேங்கடகிருஷ்ணன்**. கர்ப்பக்கிருஹத்தில் நிற்கும் மூலமூர்த்தியை

**ஆனந்த விமானம்**





அல்லிக்கேணி கோயிலும் குளமும்

வேங்கடகிருஷ்ணன் என்றும் உற்சவமூர்த்தியைப் **பார்த்தசாரதி** என்றும் அழைக்கிறார்கள். திருமலைமேல் நிற்கும் அம்மாதவனைக் கண்டு தொழச் சென்ற **சுமதி** என்ற **தொண்டைமான் சக்கரவர்த்தி** உள்ளத்தில் ஓர் ஆசை. 'உன்னை எத்தனையோ கோலங்களில் எல்லாம் காண்கிறேனே, அன்று பார்த்தனுக்குச் சாரதியாய்த் தேர் ஊர்ந்த போது எந்தக் கோலத்தில் இருந்திருப்பாய் என்று நான் காண வேண்டாமா?' என்று மிக்க ஆதங்கத்தோடேயே பிரார்த்தித்துக் கொள்கிறார். அவருடைய பிரார்த்தனைக்கு இரங்கி பிருந்தாரண்ய க்ஷேத்திரமான இந்தத் திரு அல்லிக்கேணியிலே திரு வேங்கடமுடையானே, பார்த்தசாரதியின் கோலத்தில் எழுந்தருளுகின்றான் என்பது கதை. பார்த்தசாரதி தனியே வரவில்லை. அண்ணன் பலராமன், தம்பி சாத்தகி, மனைவி ருக்மிணி மகன் பிரத்யும்நன், பேரன் அநிருத்தன் சமேதனாகக் குடும்பத்தோடேயே இங்கு வந்திருக்கிறான். பார்த்தனுக்குத் தேரோட்டியாய் எழுந்த அவசரம் ஆனதால் சக்கர ஆயுதம் இல்லை இடது கையில். வலது கையில் சங்கு உண்டு. ஆம்! வெற்றியை ஊதி அறிவிக்கச் சங்கம் அவசியம்தானே. இடது கை வரத முத்திரையோடு இலங்குகிறது. மிக்க அழகோடு ருக்மிணி பக்கத்திலே நிற்கிறாள். சிசுபாலனை மணக்க இருந்த அவளை அவள் விருப்பப்படியே சகோதரர் பலராமன் சாத்தகி முதலியவர்கள் துணைகொண்டு தேரில் தூக்கிக் கொண்டு வந்து மணம் புரிந்து கொண்டவன் அல்லவா கண்ணன். ஆதலால் இத்தலத்திலே ருக்மிணி கல்யாண உத்சவமும் சிறப்பாக நடைபெறுகிறது. மூல மூர்த்திக்கு முன்னால் உத்சவமூர்த்தமாக நிற்பவனையே பார்த்தசாரதி என்கிறார்கள். இவர் ஸ்ரீதேவி - பூதேவி என்ற உபய நாச்சிமார்களோடேயே எழுந்தருளி யிருக்கிறார். 'கண்ணன் என்னும் கருந்தெய்வம்' என்பதற்கேற்ப நல்ல கரிய திருமுக மண்டலம், நல்ல வசீகரமான திருமேனி. முகத்தில் எல்லாம் போரில் ஏற்பட்ட வடுக்கள். ஆடை அணிகலன்களைப் பற்றியோ கேட்கவே வேண்டாம். எல்லாம் ஒரே வைர மயம். உத்சவர் கரத்தில் தேரோட்டுவதற்கு உரிய சாட்டை உண்டு என்பார்கள். அதை யெல்லாம் நகைகள் மறைத்துவிடும். மூலவர் இடையிலே யிருந்து ஒரு கத்தி தொங்கும். பார்த்தனுக்குத் தேரோட்டும்போது ஆயுதமே எடுப்பதில்லை என்று சத்தியம் செய்து கொடுத்திருந்தானே அப்படி இருக்கக் கத்தியை இடையில் சொருகி இருப்பது சரிதானா? என்று எண்ணுவோம் நாம்: இதற்குத் தொச்சாமியனும், ஞானயோகத்தை விளக்கும்போது, 'அஞ்ஞானம் வேர் ஊன்றி நெஞ்சில் எழும் ஐயங்களை ஞானவாளால் அறுத்து யோக நிலைகொள். பார்த்த! எழுந்து நில்' என்று கண்ணன் கூறியதை நினைத்து, பார்த்த சாரதியின் இடையில் இருப்பது அந்த ஞான வாளே என்று கொண்டால் நம் சந்தேகமுமே நீங்குந்தானே.

இந்த அல்லிக்கேணி நிற்கும் அமுதனைப் பேயாழ்வாரும், திருமழிசை ஆழ்வாரும், திருமங்கை மன்னனும் பாடி மகிழ்ந்திருக்கிறார்கள். முன்னவர் இருவரும் ஆளுக்கு ஒரு பாட்டே பாட, திருமங்கை ஆழ்வார் மட்டும் பத்துப் பாட்டுக்கள் பாடியிருக்கிறார். இவர் 'பற்றலர் வீயக் கோல் கையில் கொண்டு பார்த்தன் தன் தேர்முன் நின்றானை' மட்டும் பாடவில்லை. சிற்றவை பணியால் முடிதுறந்து இராவண வதம் முடித்த இராவணாந்தகனையுமே பாடுகிறார். இதோடு விடுகிறாரா?

பிள்ளையைச் சீறி வெகுண்டு
தூண்புடைப்ப, பிறை எயிற்று
அனல்விழிப் பேழ்வாய்
தெள்ளிய சிங்கம் ஆகிய
தேவை, திருவல்லிக்கேணி
கண்டேனே.

என்று அழகிய சிங்கரையுமே பாடுகிறார். (இத்தெள்ளிய சிங்கமே, துளசிங்கராக இன்று மக்கள் நாவில் வழங்குகிறார்) 'ஆனையின் துயரம் தீரப் புள் ஊர்ந்து ஆழி தொட்ட கஜேந்திர வரதனை' தென்னன் தொண்டையர்கோன் செய்த நன்மயிலைத் திரு அல்லிக்கேணியில் நிற்கிறான் என்றும் அறுதியிட்டுரைப்பார். ஆழ்வார் கண்ட அல்லிக்கேணியான் அழகன் அமுதன், ஆதியான் என்பதை யெல்லாம் அறிகின்றபோது, நாமும் அவனைச் சென்று தொழுது அவனது கீதோபதேசத்தைக் கேட்டு வீடு பெறலாகும் அல்லவா என்றே நினைக்கத் தோன்றுகிறது எனக்கு.

# நயந்து உதவும் கை

"யாருக்காவது கல்யாணமாவதற்குப் பல நாட்களுக்கு முன்பே தன் மனைவியின் பெயர் இன்னதென்று தெரிந்து விடுகிறதா?" என்று ஒரு திடீர்க் கேள்வியைப் போட்டார், நண்பர் ராமலிங்கம். அவர் இப்படித்தான் திடீர் திடீர் என்று ஏதாவது வெடிகுண்டுக் கேள்விகளைத் தூக்கிப் போடுவார்.

"இது என்ன ஐயா ஆச்சரியம்? கல்யாணத்துக்குப் பல நாட்கள் முன்னரே நிச்சயதார்த்தம் நடந்து விடுவதில்லையா? பத்திரிகைகூட முன்னமேயேதான் அச்சடித்து விடுகிறார்களே?" என்றேன்.

"சேச்சே! நான் அதைச் சொல்லவில்லை. இந்த இவளை...அதுதான் என் மனைவி ஸரோஜாவை நான் அறியாத நிலையில் ஸரோஜாதான் என் மனைவி என்று அறிந்துகொண்டு விட்டேன். அதைச் சொல்லுகிறேன்" என்றார் நண்பர் விடாமல்.

"அதற்கு என்ன? மாமாவுக்குப் பெண் பிறந்து விட்டவுடனேயே மனைவியாகப் பிறந்து விடுகிறாள். அவனுக்கோ அல்லது நமக்கோ வேறு இடத்தில் கல்யாணம் ஆகும் வரையில் அப்படித்தான் பேச்சு இருந்து வருகிறது. தெய்வச் செயலாக நீங்கள் மாமா பெண்ணையே மணந்து கொண்டிருக்கலாம். அப்போது, பிறந்தவுடனேயே என் மனைவியைத் தெரியும் என்று சொல்லுவீர்கள் போலிருக்கிறதே?" என்றேன் தர்க்க ரீதியாக.

"அடேடே! இவள் என் மாமாவின் பெண் அல்ல. மாமனாரின் பெண்தான். அன்று வரையில் இவளை எனக்குத் தெரியாது. எங்கள் அண்ணா வீட்டின் பக்கத்து வீட்டுப் பெண்தான் இவள். உங்களுக்கு முழுதும் சொன்னால்தான் புரியும்" என்று ஆரம்பித்தார் நண்பர் ராமலிங்கம். அந்தச் சமயம் அவருடைய மனைவி ஸரோஜா இருவருக்கும் காப்பி கொணர்ந்து வைத்தவள் சம்பாஷணையைக் கண்டு, புன்னகையுடன் நின்றாள். நண்பர் சொல்ல ஆரம்பித்தார்:



"நான்தான் மிலிட்டரிக் காரனாயிற்றே. என் கல்யாணச் சமயத்தில் நான் காஷ்மீருக்குப் போகும் வழியில் ஒரு முகாமில் இருந்தேன். என் பெற்றோரும் தமையனும் மாயூரத்தில் மகாதானத் தெருவில் இருந்தார்கள். எங்கள் பூர்வீகமான வீடும், நிலபுலன்களும் மாயூரத்தில் தான் இருந்தன. என் பெற்றோரின் கடைசி நாட்களில் காவேரி ஸ்நானம் செய்துகொண்டு மயூர நாதரைத் தரிசித்துக் கொண்டு கிடக்க ஆசை இருந்ததால், பெரிய அண்ணனை மாத்திரம் ஊருடன் நிறுத்திக் கொண்டார்கள். இளையவன் சென்னையில் இருந்தான். கடைக்குட்டியாகிய நான் காஷ்மீரத்தில் இருந்தேன். மிலிட்டரி சர்வீஸில் ஆறேழு வருடங்கள் கடந்து, 'கார்ப்போரல் ராங்க்' பெற்றிருந்தேன். இப்போது 'ஸார்ஜண்ட்' ஆகிவிட்டேன்.

"அப்போது...அதாவது இரண்டு வருஷங்களுக்கு முன்பு, மாயூரத்திலிருந்த என் மூத்தண்ணாவின் மூத்த பெண்ணுக்குக் கல்யாணம் நிச்சயமாகியிருந்தது. முழுவதும் பிள்ளைகளாகவே இருந்து வந்த எங்கள் வீட்டின் பெண்ணுக்குக் கல்யாணம் என்று முதன் முதலில் நடந்தது. எங்கள் வமிசத்தில் பெண்களே அபூர்வம் ஆனபடியால் நமது வீட்டில் நடக்கும் நிகழ்ச்சிக்கு நானும் வந்து இருக்க வேண்டும் என்று என் அண்ணா பெற்றோர் அனைவரின் விருப்பமாக இருந்தது.

"ஏதோ பார்க்கலாம் என்ற அசட்டுத் தைரியத்தில் 'வருவதாக' எழுதிவிட்டேன். அண்ணா பெண் கல்யாணத் தேதி நிச்சயிக்கப்பட்டும் பத்திரிகை அச்சடித்து அனுப்பியாயிற்று. அந்த நிலையில் மிகவும் முக்கிய கேந்திரத்திலிருந்த எங்கள் 'காம்பி'ல் எவருக்கும் வருஷாந்திர லீவு கிடைக்காது என்று சுற்றறிக்கை வந்து விட்டது. எனக்கு அந்த வருஷம் லீவு முடிந்து விட்டிருந்தது. எப்படியும் லீவு வாங்கி விடலாம் என்று இருந்த நம்பிக்கை வீணாகி விடவே, 'அண்ணா பெண் கல்யாணத்துக்கு எப்படியடா போவது' என்று யோசித்தேன். யோசித்தேன், யோசனை ஒன்றும் எனக்குப் புலப்படவில்லை.

"இந்த விஷயத்துக்காக மஞ்சளும் குங்குமமுமாக இருந்த என் தாயாரை ஊறுபடுத்தும் செய்தியைக் கிண்டிவிட விருப்பமில்லை. யோசனையின் நெடிய முடிவில், என் நண்பனை மகாலிங்கத்துக்கு ஒரு கடிதம் எழுதினேன். அவன் மாயூரத்தில் ஓர் அச்சாபீஸில் வேலையாக இருந்தான்.

"என் கடிதம் கிடைத்த மூன்றாவது நாளில், ஏர்மெயிலில் எனக்கு ஒரு பத்திரிகை கிடைத்தது. கல்யாணப் பத்திரிகைதான். அதில் "சிரஞ்சீவி ராமலிங்கத்துக்குச் சௌபாக்கியவதி சரோஜாவைக் கன்னிகாதானம்செய்து கொடுப்பதாய்ப் பெரியோர்களால் நிச்சயிக்கப்பட்டு" என்றிருந்தது. இந்த ஏற்பாட்டை எந்தப் பெரியவரும் நிச்சயிக்கவில்லை. நான் எழுதி

இருந்தேன். 'ஏதாவது ஒரு பெயரைப் போட்டு, எனக்குத் திருமணம் என்று ஒரே ஒரு பிரதி பத்திரிகை அச்சடித்து அனுப்பு. அதைக் காட்டி லீவு பெற்று வருகிறேன்'' என்று. அதன்படி நண்பன் மகாலிங்கத்தின் கற்பனைச் சிருஷ்டியான பெயர்தான் ஸரோஜா.

''அந்தப் பெயருக்கும் இவளுக்கும் எந்த விதமான சம்பந்தமும் இல்லை. இவள் மலையாள ராஜ்யத்திலிருந்து மாயூரத்துக்குக் குடி பெயர்ந்தவள். ஏதோ கோ-ஆபரேடிவ் இலாகாவில் இன்ஸ்பெக்டராக இருந்த இவள் தந்தையை மாயூரத்துக்கு மாற்றி யிருக்கிறார்கள். அவர்கள் என் அண்ணாவின் வீட்டுக்குக் குடிவந்திருக்கிறார்கள்.

''நான் முன்பு வந்திருந்தபோது இவர்கள் இங்கு இல்லை. பின்னர் வந்திருக்கிறார்கள். இருந்தாலும், என் நண்பன் இப்படியாக ஒரு பெயரைப் போட்டுப் பத்திரிகை அச்சிட்டு அனுப்பிவிட்டான். அந்தப் பிரதியைக் காண்பித்து லீவு கேட்டேன். அதை மறுத்துவிட யாரால் முடியும்? எப்படியோ சொல்லி அடித்து லீவு வாங்கி விட்டேன். பத்து நாட்கள்தான் கொடுத்தான் கஞ்சப்பிரபு. பயணத்துக்கு மூன்றும் மூன்றும் ஆறு நாட்கள் போக நாலு நாட்கள் ஊரில் தங்கலாம். ஏதோ விசேஷ சமயத்தில் இருக்கிறோமே என்ற ஆறுதலில் புறப்பட்டு விட்டேன்; வந்தேன். அண்ணா பெண் கல்யாணம் ஆயிற்று.

''கல்யாணமான மறுநாள் மாலையில் நான் தமிழ்ப் படம் ஏதேனும் பார்த்து வரலாம் என்று புறப்பட்டேன். 'கூடவந்த மங்கை' என்ற ஹாஸ்யப் படம். என்கூட எந்த மங்கையும் வராததால் நிச்சிந்தையாகப் படம் பார்த்துவிட்டு வீட்டுக்கு வந்தேன்.

''என்ன ஆச்சரியம்! எங்கள் வீட்டுவாசலில் ஒரு புதிய மனிதர் உட்கார்ந்திருந்தார். எட்ட வரும்போதே ஒரு நண்பன் எதிரில் வந்து விஷயத்தை விளக்கி விட்டான். அதாவது எங்கள் ராணுவ முகாமில் யாரோ ஒரு பயல் 'ராமலிங்கத்துக்குக் கல்யாணம் இப்போது இல்லை, ஏதோ 'போலிப் பத்திரிகை'யைக் காட்டி லீவு வாங்கிவிட்டான்' என்ற உண்மையைப் புரளி பண்ணி விட்டிருக்கிறான். உடனே அங்கிருந்து உள்ளூர் போலீஸாருக்கு விசாரித்து ரிப்போர்ட்டு அனுப்ப ரகசிய உத்தரவு வந்திருக்கிறது.

''நான் இதைச் சிறிதும் எதிர்பார்த்தவனல்ல. வந்திருப்பவர் ஸி. ஐ. டி. இலாகாவினர். 'என்ன ஆருமோ?' என்ற எண்ணத்துடன்தான் போனேன். நான்தான் ராமலிங்கம் என்று சொல்லி என் அண்ணா அறிமுகம் செய்துவைத்து, உடனேயே சந்தனம் வெற்றிலை, பாக்கு, சர்க்கரை எல்லாம் அந்த இன்ஸ்பெக்டருக்குக் கொடுத்தார்.

'மிகவும் சந்தோஷம், மிஸ்டர் ராமலிங்கம்! ஏது கல்யாணமானவுடனேயே, மறுநாளே சினிமாவுக்குக் கிளம்பிவிட்டீர்களே?' என்றார் விஷயத்தைக் கிரகிக்கும் தொனியில்.

'ஆமாம். வடக்கேயெல்லாம் தமிழ்ப் படம் பார்க்கவே முடிவதில்லை. வந்தபோதே பார்த்து விடலாம் என்று.'



சென்னை சம்ஸ்கிருத அகாடமியின் உப தலைவரும் உயர் நீதி மன்றத்து வழக்கறிஞருமான திரு ஜி கிருஷ்ணமூர்த்தி ஐயர் அவர்களின் சஷ்டியப்த பூர்த்தி வைபவம் மேற்கு மாம்பலத்தில் அக்டோபர் 14-ந் தேதி வெகு கோலாகலமாக நடைபெற்றது.

---

'கல்யாணமானவர் உடனே தனியாகவா போவார்கள்? மனைவியையும் அழைத்துக் கொண்டுதானே போகவேண்டும்' என்றார்.

'என்ன...' என்னால் சமாளிக்க முடியாத ஒரு கேள்வி.

''என் தயக்கத்தை அவர் உணர்ந்தாரோ என்னவோ? 'சரி அது உங்கள் இஷ்டம். என் கடமையை நான் பார்க்க வேண்டும். தயவுசெய்து உங்கள் மனைவியைச் சற்று அழைத்து வாருங்கள். அவர்கள் ஒரு கையெழுத்து போடவேண்டும்' என்றார்.

'என் மனைவியையா?'

'ஆமாம், ஸார்! நேற்று மணம் நடந்த மணப்பெண்ணை.'

'எந்த மணப் பெண்ணை?...'

''அதற்குள் என் அண்ணா நிலைமையைச் சீராக்க 'நேற்று ரெண்டு கல்யாணம் நடந்தது. என் பெண்ணுக்கொன்று...' என்று இழுத்தார்.

'அது எனக்குத் தேவை இல்லை. இந்த ராமலிங்கமும் இவர் மனைவி ஸரோஜாவும் வந்து கையெழுத்து போட்டால் போதும், நான் ரிப்போர்ட்டு அனுப்பி விடுவேன்.' என்றார். 'இதேதடா இது! இப்போது நான் எந்த ஸரோஜாவை அழைப்பது? அவளை என் மனைவி என்று எப்படி ஒப்புக்கொள்ளச் செய்வது?' என் தலை சுழன்றது. இந்தப் பேச்சு காதில் பட்டவுடன் இருளில் இருந்து ஓர் உருவம் வந்தது. வீதியில் போட்டிருந்த விளக்கின் அடியில் வந்தவுடன்தான் அது பெண் என்று தெரிய வந்தது. குனிந்த தலை நிமிராமல் வந்து இன்ஸ்பெக்டரின் எதிரில் நின்றாள் அந்தப் பெண்.

'நீ யாரம்மா?' என்றார் இன்ஸ்பெக்டர்.

'நீங்கள் கையெழுத்து வேண்டும் என்றீர்களே?' என்றாள் அந்தப் பெண். நான் ஏறிட்டுப் பார்த்தேன். ஆம்! அழகான பெண்! நான் கற்பனை செய்திருந்த ஓர் இள மங்கை...என் மூச்சே நின்றுவிட்டது. நான் கனவு காண்கிறேனா, அல்லது உண்மை நிகழ்ச்சியா என்று தெரியவில்லை.

'உன் பெயர்?' என்றார் இன்ஸ்பெக்டர்.

'ஸரோஜா' என்றாள் அவள்.

'ஓகோ! மணப் பெண்ணா... சரி. கையெழுத்து போடும்மா. உன் பெயர்

ஸரோஜா என்பதற்குச் சாட்சி வேண்டுமே' என்றார் இன்ஸ்பெக்டர்.

''உடனே என் வீட்டினுள் ஓடிய அந்தப் பெண் எஸ். எஸ். எல். ஸி. நோட்புக்கைக் கொண்டு வந்தாள். அதைப் பார்த்து ஏதோ குறித்துக்கொண்டு என்னிடமும் கையெழுத்து வாங்கிக் கொண்டு போய்விட்டார் அந்த ஸி. ஐ. டி. இன்ஸ்பெக்டர்.

''இன்ஸ்பெக்டர் போனதும் நன்றி சொல்லலாம் என்று அந்த நங்கையைத் தேடினால்... என்ன மாயம்! தேவி அந்தர்த்தியானமாகி விட்டாள். இது ஏதோ மாயாஜாலம் மாதிரி இருந்தது. கம்பனுக்காக சரஸ்வதிதேவியே வந்து தயிர் கடைந்ததாகச் சொல்லும் கதை போல் என்னுடைய கஷ்டம் தவிர்க்க தேவி ஸரோஜாவாகப் பிரசன்னமாகி மறைந்து விட்டாள் போலும்.

''பின்னர் விசாரித்தபோதுதான் அவள் அடுத்த வீட்டுப் பெண் என்றும், இங்கு குடி வந்து இரண்டு மாதங்கள் ஆகின்றன என்றும் தெரிய வந்தன. இவளுக்கு இந்த விஷயத்தில் ஏன் இத்தனை கரிசனம் என்று எனக்குப் புரியவில்லை.

''மேலும் என் வீட்டில் நுழைந்து எஸ். எஸ். எல். ஸி. புத்தகம் கொண்டு வந்தாளே, அதுவும் ஒரு புதிர்....'' என்றார் நண்பர்.

''ஆமாம், இவருக்கு எல்லாம் புதிர்தான்'' என்று எங்கள் சம்பாஷணையின் இடையில் கலந்தாள், அதுவரையில் பேசாமல் நின்று கொண்டிருந்த ஸரோஜா. நான் 'என்ன' என்று கேட்பது போலப் பார்த்தேன். அந்தப் பெண் சிரித்துக் கொண்டே சொன்னாள்.

''இவர்கள் வீட்டுக்கும் எங்கள் வீட்டுக்கும் கொல்லை வழியாகப் போய் எடுத்து வர எந்த யட்சிணி வேண்டும்?'' என்று சொல்லிச் சிரித்தாள் ஸரோ.

''பார்த்தீர்களா? இப்படி ஒரு வழி இருந்தது என்று இரண்டு வருஷங்களாக எனக்குத் தெரியவில்லையே! பெண்கள் என்றால்....''

''ம். சொல்லுங்கள். ஏன் நிறுத்திவிட்டீர்கள். பெண்கள் என்றால்....?''

''சமயோசித சாமர்த்தியம் உடையவர்கள் என்று சொல்ல வந்தேன். அது போகட்டும். இத்தனை நாட்கள் நான் கேட்டுத்தான் நீ பதில் சொல்லவில்லை. இன்று இந்த மாமாவிடம் சொல்லு. எனக்காக நீ ஏன் மனைவிப் பொறுப்பை ஏற்றாய்?'' என்று அவளையே கேட்டு விட்டார் ராமலிங்கம்.

''போர்வீரரைக் கணவனாக அடையத்தான்!''

''நீ போர்வீரன் மனைவிதானே ஒழியப் போர்வீரனல்ல, போர் தொடுக்காதே!''

''சரிம்மா! சண்டை போட்டுக் கொள்ளாதீர்கள். நீ ஏன் வலிய வந்து நின்றாய்...?'' என்றேன் நான்.

''பாவம், இவருக்கு மிலிடரி தண்டனை கிடைக்குமே, திண்டாடுவாரே என்றுதான்!'' என்றாள் ஸரோஜா.

''அதற்காக நீ இவர் மனைவி என்று எழுதி விட்டால்... பின்னர் யார்தான் உன்னை மணக்க முன் வருவார்கள்? இதை யோசித்தாயா?'' என்றேன்.

''ஏன்? இவர் எங்கே போனார். அதுதான் மஹாலிங்க மாமா சொன்னாரே! கற்பனைப் பெயர் போட்டால் கஷ்ட காலத்தில் வந்து நிற்காது. உன் பெயரைப் போட்டு விடுகிறேன். உனக்குப் பிராப்தமிருந்தால்... அடேடே! சொல்லி விட்டேனே!'' என்று உதட்டைக் கடித்துக் கொண்டாள் ஸரோஜா.

''ம்ஹூம். மஹாலிங்கம் பயல் வேலைதானா, இருக்கட்டும்!'' என்று கறுவினார் ராமலிங்கம்.

''போனால் போகிறார். உமக்கு நல்லது தானே செய்தார்!'' என்றேன்.

''நல்லதா! மிலிட்டரி தண்டனையே தேவலை போலிருக்கிறது. இவள் கொடுத்த தண்டனை....'' 'சொல்லி விடட்டுமா?' என்ற பாவனையில் அவளைப் பார்த்தார் நண்பர். 'வேண்டாம்' என்றபடி ஸரோஜா தலையசைத்தாள். அவள் முகத்திலிருந்த பூரிப்பு எனக்குப் புரிந்தது. மூன்று குழந்தைகளின் தகப்பனல்லவா நான்.

''மிலிட்டிரி பாரக்ஸில் குஷாலாயிருந்த என்னை இந்தச் சின்ன அறையில் சிறைவீட்டு விட்டாள்'' என்று குடியிருக்கும் வீட்டைக் காட்டினார் நண்பர்.

''அறை சிறியதாயினும் சிறை பெரிது தான்'' என்றேன். நண்பருக்குப் புரியவில்லை. நானே விளக்கினேன்.

''உங்களுக்கு வலியவந்து நாவுக்கு பயந்து உதவும் கையாக வந்து நின்ற மனம் விசாலமானதுதானே! உங்கள் சிறை அங்கேதானே?'' என்றேன். அனைவரும் சிரித்தோம்.

# தேன்கூடு

## அத்தியாயம் 11

## இரண்டு கடிதங்கள்

ஆர்வி

முத்தையா அன்றையத் தபாலில் வந்த முக்கியமான கடிதங்களைப் பார்த்துக் கொண்டிருந்தார். அவற்றில் பல விமானத் தபால்கள். அதிலும் சொந்த நாட்டிலிருந்து வந்த கடிதங்களைத்தான் அவர் பொறுக்கி யெடுத்து முதலில் பார்ப்பது வழக்கம். பிறகுதான் மற்ற வைகளைக் கவனிப்பார். இந்த வழக்கத்தில் மாறுதலே ஏற்பட்டதில்லை.

அருகில் அடக்க வொடுக்கத்துடன் அமர்ந்திருந்த குமாஸ்தா அந்தக் கடிதங்களுக்கு அவர் கூறப் போகும் பதிலை எழுதிக் கொள்ளப் பேனாவும் காகிதமும் வைத்துக் கொண்டு அவர் வாயைப் பார்த்திருந்தான். முத்தையாவின் அளவற்ற செல்வத்தை மேலும் மேலும் அதிகமாக்கிக் கொண்டிருந்த 'பீ-ஹைவ் கம்பெனி' மிகப் பெரிய ஸ்தாபனமாக வளர்ந்திருந்தது. ஆயினும் அவர் அந்தக் கம்பெனியின் கடிதப் போக்குவரத்துக்களையோ, நிர்வாக விஷயங்களையோ கவனிப்பதில்லை. அந்தப் பொறுப்பை அவர் கண்ணபிரானிடம் ஒப்படைத்திருந்தார். அவசியமிருந்தால் அவனைக் கேட்டு விசாரித்து அறிந்து கொள்வார். முக்கியமான முடிவுகள் செய்ய வேண்டியிருந்தால் அவனே அவரை வந்து கலந்து கொள்ளாமல் செய்வதில்லை. ஆகவே அந்தத் தபால்கள் எல்லாம் அவருக்கென்று வந்திருந்தவை. சொந்தமாகத் தொழில் நடத்தப் புகுந்த நாற்பதாண்டுகளில் அவருக்கு எத்தனையோ நண்பர்கள்; எத்தனையோ அன்பர்கள்!

அவசரம் இருந்தாலும் இல்லாவிட்டாலும் அவசியமானாலும் அவசியமில்லாமல் போனாலும் அவற்றுக்கெல்லாம் தவறாமல் உடனுக்குடனே பதில் எழுதிப் போட்டு விடுவதில் அவர் கண்ணும் கருத்துமாக இருப்பவர். அதுவே அவருடைய வெற்றிக்கு முதல் காரணமாக இருந்தது. கடிதக் கலையின் ரகசியம் அவரையறியாமலே அவருக்கு வசமாகியிருந்தது. முத்தையா எதையும் நாளைக்கு என்று தள்ளிப் போடுவதில்லை. உண்டு இல்லை என்று உடனே எழுதிப் போட்டால்தான் அவருக்கு அடுத்த வேலை ஓடும். அப்படியே அவர் பழகிப் போயிருந்தார். அவரிடமிருந்தவர்களையும் அவ்வாறே அவர் பழக்கியிருந்தார்.

ஆனால் இன்று அவர் எடுத்துப் படித்த முதல் கடிதத்தை மீண்டும் ஒருமுறை அவர் படித்ததைக் கண்டான் அந்தக் குமாஸ்தா. அப்படிப் படித்து முடித்தவர் சிறிது நேரம் கண்களை மூடிக் கொண்டு அந்தப் பிரம்பு பின்னிய நாற்காலியில் சாய்ந்து கொண்டார். பிறகு எழுந்து அந்தக் கடிதத்தைத் தனியாக வைத்து விட்டு, அடுத்த கடிதத்தைப் படிக்கலானார். படிக்கத் தொடங்கியதுமே அவர் முகம் மலர்ச்சியைக் காட்டியது போல் குமாஸ்தாவுக்குத் தோன்றியது. படித்து முடித்ததும் பதில் எழுதுவதற்கு அவன் பேனாவைத் தயாராக வைத்துக் கொண்டான். அவன் கண்ணில் பட்ட வரையில் அது பாரிஸ்டர் பரமசிவத்தின் கையெழுத்தாகத் தோன்றியது.

முத்தையா மெல்லக் கனைத்து விட்டு, "முருகு! தம்பி இருக்கிறானா, வெளியே போய் விட்டானா?" என்று கேட்டார்.

முருகேசன் தபால்களை எடுத்து வந்த போது அவர் குறிப்பிட்ட தம்பியான கண்ணபிரான் முன்பக்கத்து ஆபீஸ் அறையில்தான் உட்கார்ந்து டெலிபோனில் யாரிடமோ பேசிக் கொண்டிருந்தான். இப்பொழுது இருக்கிறானோ, இல்லையோ, போய்ப் பார்க்காமல் உறுதியாகச் சொல்ல முடியுமா?

எனவே, "இதோ பார்த்து விட்டு வந்து விடுகிறேன்!" என்று எழுந்திருந்தார்.

"வேண்டாம். அதற்கு இப்பொழுது அவசியம் இல்லை!"

முத்தையா அதற்கும் உடனே விடை எழுதிக் கொள்ளும்படி சொல்லவில்லை. இது முருகேசனுக்கு வியப்பாக இருந்



தது. முத்தையா மற்றத் தபால்களை அடுத்து அடுத்துப் பிரித்துப் படித்து அவ்வப்போது குறிப்பெடுத்துக் கொள்ளும் படி பதில் கூறி வந்தார். அரை மணி நேரத்தில் அந்த வேலை முடிந்துவிட்டது.

"அவ்வளவுதான்; அந்தக் கடிதங்களையெல்லாம் எடுத்துக் கொண்டு நீ போகலாம்!" என்று விடைகொடுத்து விட்டார் அவர். முருகேசன் ஒரு கணம் தயங்கினான்.

"அந்த இரண்டு கடிதங்கள் மட்டும் இங்கேயே இருக்கட்டும். நீ போகும் போது சபாபதியை இங்கே அனுப்பி விட்டுப் போ!"

முருகேசன் வெளியில் போன பிறகு புலித் தோலிட்ட அந்தப் பிரப்பம் நாற்காலியில் காலை நீட்டிக் கொண்டு அவர் சாய்ந்தார். கண்கள் தாமாகவே மூடிக் கொண்டன. அவர் சிந்தனை எங்கோ சென்றது. காலடிச் சத்தம் கேட்டதும் அவர் கண்கள் திறந்து கொண்டன. கிட்டத்தட்ட அவருக்குச் சம வயது என்று சொல்லக் கூடிய சபாபதிதான் அவர் முன்னால் வந்து நின்றான்.

சபாபதிக்கு அறுபது வயதுக்கு மேல் இருக்கும். நெற்றிப் புருவங்கள் எல்லாம் கூட நரைத்திருந்தன. கிராப்புத் தலை என்று பெயர்தான். ஆனால் தலையெல்லாம் வழுக்கை. மூன்றும் பிறைச் சந்திரனைப்போல் பின்னாலும் ஓரங்களிலும் அரை அங்குலத்துக்குத்தான் மயிர் ஒட்டிக் கொண்டிருந்தது. அரையில் ஒரு மலையாளத்து முண்டு. அந்தக் காலத்துக் கட்டுமஸ்தான உடம்பு. மழையானாலும் வெயிலானாலும் சட்டையோ மேல் குட்டையோபோட்டறியாத தோள்கள். நெற்றியில் பழனி விபூதியும் நடுவில் சந்தனப் பொட்டும் அவனுடைய ஆசார சீலத்தைப் புலப்படுத்தின. பழுப்பேறித் தேய்ந்த பற்கள் வெளித் தெரியாதபடி வெட்டிச் சேர்த்தது போன்ற உதடுகள். பேச்சும், 'வெட்டு ஒன்று; துண்டு இரண்டு' என்றுதான் இருக்கும் போலிருந்தது. கண் விழிகளும் பழுப்பேறித்தான் போயிருந்தன. அந்த நடையிலே நாற்பது வருஷத்துப் பழக்கமும் சுவாதீனமும் தெரிந்தன. முத்தையா இன்று சிங்கப்பூரிலேயே பெரிய கோடீசுவரர்தான்; ஆனால் அந்தக் கோடி, லட்சமாக இருந்ததற்கு முன்பே, அவன் அவரிடம் வேலைக்கு அமர்ந்தவன் ஆயிற்றே! அவருடைய வாழ்வின் எத்தனையோ மேடு பள்ளங்களில் அவனும் கூட நின்று உழன்றவனாயிற்றே! அவரையும் அவரைச் சேர்ந்தவர்களையும் தவிர அவனுக்கு ஊர் ஏது, உற்றார் உறவினர் தான் ஏது? முத்தையா அவனுக்கு என்று தனியாக வீடும் வாசலும் கொடுத்திருந்தாலும் அவன் அவருடைய குடும்பத்திலிருந்து பிரிக்க முடியாதவனாகத் தான் போய் விட்டான்.

அவன் செய்து வந்த வேலைகளையெல்லாம் செய்ய இன்று பலர் அமர்ந்திருந்தார்கள். அவனுக்கு ஓய்வு கொடுத்தது போலத்தான். அவன் வேலைக்கு என்று வந்தாலும் சரி, வீட்டிலேயே படுத்திருந்தாலும் சரி, அவனைக் கேட்கக் கூடியவர்கள் ஒருவருமில்லை. வேடிக்கை என்னவென்றால் அவன் வேலைக்கு வராமலும் இருப்பதில்லை; வீட்டில் அவனுக்குப் படுக்கையும் கொள்ளாது. அவன் இல்லாவிட்டால் முத்தையாவுக்கு ஒன்றுமே சரிப்படாது; அவனுக்கும் அவரைக் கவனிக்காவிட்டால் ஒன்றுமே ஓடாது. ஆனால் இப்பொழுதுதான் வயதும் உழைப்பும் காரணமாக நிலைமை சிறிது மாறியிருந்தது. இருபது ஆண்டுகளாக அவனுக்கு மேற்பார்வை வேலை தான்; அந்த வேலையையும் இப்போது அவனால் சரிவரச் செய்ய முடியவில்லை. முடிந்ததோ, முடியவில்லையோ சபாபதிக்கு வேறு போக்கிடம் ஏது?

சபாபதியின் எஜமான விசுவாசம் நரை படர்ந்த முகத்திலேயே நன்ருகத் தெரிந்தது. முத்தையாவுக்கு மட்டும் தான் அவன் வெறும் சபாபதி! மற்றப்படி கண்ணபிரானுக்குக் கூட அவன் சபாபதியா பிள்ளையாகத்தான் முழங்கினுன். கண்ணபிரான், அவன் சம்பந்தப்பட்ட வரையில் நேற்றுப் பிறந்தவன்; நாளைக்கு இந்தச் சொத்துக்கெல்லாம் சொந்தக்காரஞகப் போகிறவன். ஆனல் இன்றைக்கு என்ன? நாளை வரையில் சபாபதி இருந்தால், அப்போது பார்த்துக் கொள்ளலாம். அதுவரை யாராக இருந்தாலும் அவனுக்கு, சபாபதி வெறும் சபாபதியல்ல; சபாபதியா பிள்ளைதான்! வேண்டுமானல் யாராவது அந்தப் பலப்பரீட்சையைச் செய்து பார்க்கட்டுமே! "தம்பி, நிறுத்திக்க அப்படியே!" என்று சொல்லியேதான் தீர்ப்பான். அதில் சந்தேகமேயில்லை. எஜமான் முத்தையா போட்ட சோறு அப்படி ஒன்றும் ரோசம் கெட்ட சோறு அல்ல! "இஹ்ஹூன்னுனும்!"

ஆனல் சபாபதிக்குக் கொஞ்ச நாட்களாக, தானே அல்லது எஜமானே வழக்கத்தை விட்டுச் சிறிது மாறி விலகியிருப்பதாகத் துளி சந்தேகம் இருந்து வந்தது. அது எதனல் என்பது அவனுக்கே விளங்கவில்லை. எந்தச் சமயத்தில் வேண்டுமானுலும் எஜமானுடைய அறைக்குள் நுழையக் கூடிய அவன், அவராக அழைத்தால் ஒழிய, கண்ணில் படாமல் இருந்தான். இன்று அந்தச் சந்தேகம் தீர்ந்து விட்டதுபோல் அவன் கண்கள் நன்றியால் ஒளி வீசின. நரையின் நடுவே முறுவல் கட்டியது.

இரு கைகளையும் பிசைந்து கொண்டே முத்தையாவுக்கு எதிரே வந்து நின்ருன் சபாபதி.

"இந்தா, இது உனக்கு வந்த கடிதம்! என் பெயர் மேலே போட்டிருந்தது என்று பிரித்துப் பார்த்து விட்டேன். பிறகுதான் இது உனக்கு என்று தெரிந்தது. 'சபாபதியா பிள்ளை கையில் கொடுப்பது' என்று மேல் விலாசத்தில் எழுதி யிருக்கிறது. உன் கையில் கொடுத்து விடுகிறேன்!" என்று முதலில் பார்த்த கடிதத்தை அவனிடம் நீட்டினுர் முத்தையா.

அதைக் கை நீட்டி வாங்கிக் கொள்ளும்போது 'அவன் கை யிரண்டும் இப்படியா நடுங்கத் தொடங்கிவிட்டது? என்று அவருக்கு எண்ணம் உண்டாயிற்று. அவனுடைய கைகள் அப்படி நடுங்கின.

"உனக்கும் வயசாகி விட்டது இல்லையா, சபாபதி?" - முத்தையா தம் வயதோடு ஒப்பிட்டுக் கொண்டு சாதாரணமாகத்தான் இதைக் கேட்டார். ஆனல் சபாபதிக்கு யாரோ மண்டையில் ஓங்கி யடித்ததுபோல் தலையை ஒரு சுற்று சுற்றியது. கையில் பிடித்துக் கொண்டிருப்பது என்ன கடிதமா, இல்லை கையைக் கடிக்க வந்த கருநாகமா என்ற பிரமை எழுந்தது. கடித்துவிட்ட விஷம் தான் இப்படி விறு விறுவென்று தலைக்கு ஏறுகிறதோ?



அதற்குமேல் அவர் என்ன கேட்டாரோ, அவன் என்ன சொன்னுனே அவனுக்கு ஒன்றுமே தெரியாது. தன் சுயநினைவின்றி அவன் அந்த ஆடம்பர மற்ற எளிய அறையை விட்டு வெளியே வந்ததுதான் தெரியும். அவன் வெளியே வரும்போது முத்தையா, "தம்பி இருந்தால் வரச் சொல்லிவிட்டுப் போ!" என்று கூறியதும் தெரியும். அவனுக்குத் தன் நிதானம் உண்டாக வெகு நேரம் பிடித்தது. 'எஜமான் ஏன் அழைத்தார்? ஏன் போனேம்?' என்று எண்ணிக் கொண்டே கண்ணபிரானை அழைப்பதற்காகச் சென்ருன்.

கண்ணபிரானும் கிட்டத்தட்ட அப்போது அவன் நிலையில்தான் இருந்தான். சுசீலா இப்படி. முன்னறிவிப்பின்றி, சிங்கப்பூருக்கே அவனைத் தேடி வருவாள் என்று அவன் எதிர்பார்க்கவே யில்லை. அந்த அதிர்ச்சியிலிருந்து விடுபடாமலே அவன் டெலிபோன் ரிஸீவரை வைத்து விட்டு நிமிர்ந்தான். அவன் யாரோடு பேசிக் கொண்டிருக்கிருன், என்ன பேசிக் கொண்டிருக்கிருன் என்று கவனிக்கும் நிலையில் சபாபதி இருந்தால்தானே?

"என்ன சபாபதி?"

சபாபதியா பிள்ளையின் ரோசம் அப்பொழுது எங்கோ விடுமுறை பெற்றுக் கொண்டு போயிருந்ததோ, என்னவோ!

''எஜமான் உன்னைக் கூப்பிடுகிறார், தம்பி!'' என்றான் சபாபதி.

''என்னையா கூப்பிடுகிறார்?'' கண்ண பிரானுடைய குரலே நடுங்கியது. கேட்டதையே திருப்பித் திருப்பிக் கேட்டுக் கொண்டிருந்தான். எல்லாவற்றுக்கும் சபாபதி தலையை ஆட்டிக் கொண்டிருந்தான். இரண்டு பிறவிச் செவிடர்கள் பேசிக் கொள்வதுபோல் இருந்தது அக் காட்சி. இரண்டு பேருக்கும் ஒரே சமயத்தில் நிதானமும் உண்டாயிற்று.

''டெலிபோன் ஏதாவது வந்ததோ அவருக்கு?''

''வந்திருக்கும்!''

''அதுதான் என்னைக்கூப்பிடுகிறாரோ?''

''தெரியாது; அவருக்கு எதிரே ஒரு கடிதாசி மட்டும் வந்திருக்கு, பார்த்தேன்!'' என்றான் சபாபதி.

''இதுதானோ அது?'' என்று சபாபதியின் கையிலிருந்த கடிதத்தை வெடுக்கென்று பறித்து, பிரித்துப் பார்த்தான். அடியில் கையெழுத்திட்டிருந்த வரிதான் அவன் கண்ணில் பட்டது. பாஞ்சாலி சொல்படிக்கு - தேவானை!''

''ஐயையோ, இது எனக்கு வந்தது!'' என்று அதைத் திரும்பப் பிடுங்கிக் கொண்டான் சபாபதி.

கண்ணபிரான் தன் பெரிய தந்தையின் அழைப்பை அலட்சியம் செய்ய முடியாமல் அவருடைய அறையை நோக்கி வேகமாக ஓடினான்.

## அத்தியாயம் 12

# மனக் கிளர்ச்சி

முத்தையாவின் அறைக்குள் நுழையும்போது கண்ணபிரானின் கால்கள் தயங்கின. அவர் முன்னால் போய் நின்று அவருடைய முகத்தைப் பார்த்துப் பேசுகிற துணிவு அவனுக்கு உண்டாகவில்லை. முத்தையா அதிகமாகப் பேசுகிறவர் அல்ல; உரத்துப் பேசுகிறவரும் அல்ல. சாந்தமான முகம்; அமைதி தவழும் கண்கள்; மிருதுவான பேச்சு. அவரைப் பார்க்க வருபவர்களுக்கு அவருடைய தோற்றத்தைக் கண்டாலே தம்மையறியாமல் ஒரு மதிப்பும் மரியாதையும் பிறந்துவிடும். அவருடைய எளிமையே பிறரைப் பலஹீனப் படுத்திவிடும். அன்பும் அடக்கமும் கொண்ட சுபாவம் எப்படிப்பட்டவரையும் அடக்கி ஒடுக்கிவிடும். அவரிடம் பேசிவிட்டு வந்தாலே ஒரு தனி அனுபவம் ஏற்பட்டது போன்ற உணர்ச்சி உண்டாகும்.



சாதாரணமாகவே அவரிடம் பேசப் போவது என்றால் கண்ணபிரானுக்குக் கொஞ்சம் யோசனைதான். அதிலும் இப்போது அதிர்ச்சியுற்றிருந்த மன நிலையில் அவர் முன்னால் போய் எப்படி நிற்பது?

''வெளியில் புறப்படப் போகிறாயோ?'' என்று அவனைப் பார்த்துக் கேட்டார் முத்தையா.

அதிகமாகப் பேசாதவர்களுக்கு இது ஒரு பெரிய சௌகரியம். அவர்கள் மெதுவாக ஒரு வார்த்தை பேசினாலும் மனத்தில் எதை நினைத்துக் கொண்டு இப்படிப் பேசுகிறார்களோ என்று பிறருக்குத் தோன்றும். பொய் சொல்லித்தான் ஆகவேண்டும் என்று வருகிறவர்களுக்குக் கூட அவர்களுடைய பேச்சில் உண்மை புரண்டு வந்துவிடும். கூடுமான வரையில் நாலு வார்த்தைகளுக்கு அரை வார்த்தை பேசிச் சமாளித்து விடலாம் என்று கண்ணபிரான் எண்ணிக் கொண்டான். அவருடைய கேள்விக்கு ஒரு பதிலும் கூறாமல் நின்றான். அவருக்கும் ஒருகால் டெலிபோன் வந்திருக்குமோ, என்னவோ!

''சென்னையிலிருந்து பாஸ்டர் கடிதம் எழுதியிருக்கிறார்! இனி நாளைத் தள்ளிப் போட்டுக் கொண்டு போவதில் லாபம் ஒன்றும் இல்லை என்று சொல்கிறார். உன் சம்மதம் எப்படி?''

கண்ணபிரான் கூச்சத்தின் மிகுதியால் தலையைக் குனிந்து கொண்டு நின்றான். ஆனால் அது குற்றமுள்ள நெஞ்சின் குறுகுறுப்பு என்பது முத்தையாவுக்கு எப்படித் தெரியும்?

''உஷாவுக்கு உன்னைக் கட்டிக் கொள்வதில் இஷ்டந்தான் என்று வாயை விட்டு அதுவே சொல்லி விட்டதாம்!''

பாரிஸ்டர் இதை வேண்டுமென்றே எழுதியிருக்கலாம். யார் கண்டார்கள்?

'' உனக்குச் சம்மதந்தானே ?''

என்னவோ ஏதோ என்று கலங்கிப் போயிருந்த கண்ணபிரான் அவர் முகத்தைப் பார்த்து விட்டுத் தலையைத் திருப்பிக் கொண்டான்.

''முத்தையா சிறிது நேரம் மௌனமாக இருந்தார். பிறகு ஏதோ நினைவு வந்தவராக, ''ஆமாம், நம்ப நாகலிங்கத்துக்கு ஒரு தங்கச்சி மகள் இருக்குதோ, அங்கே?'' என்று கேட்டார்.

கண்ணபிரான் அவரைப் பரிதாபமாக ஒரு முறை பார்த்தான்.

'' உனக்குக்கூடத் தெரியுமாமே அந்தப் பெண்ணை ?''

கண்ணபிரான் யந்திரம்போல் தலையை அசைத்தான்.

'' சரி அப்ப, இதுதான் அவரிடமிருந்து வந்த கடிதாசி. எடுத்துப் போய்ப் படித்துப் பார் !''

முத்தையா எழுந்து உட்கார்ந்து, எதிரே இருந்த விமானத் தபாலை எடுத்து அவனிடம் நீட்டினார். கண்ணபிரான் அதை வாங்கிக் கொண்டு வெளியில் வந்தான். 'சுசிலாவைப் பற்றி இன்று திடீரென்று பேச்சு வருவானேன்? இந்தப் பாரிஸ்டர் ஏதாவது எழுதியிருக்கிறாரா, அல்லது நாகலிங்கம் திடீரென்று இதைப் பற்றி இன்று தெரிவித்திருப்பாரா ?'' என்று எண்ணியவாறே அவன் அந்தக் கடிதத்தைப் பிரித்தான்.

முன் பகுதிகள் எல்லாம் சம்பிரதாயமாகத்தான் இருந்தன. உஷாவின் சம்மதத்தைப் பற்றிக் குறிப்பிடும் இடம் வந்தபோது, ''உஷா முதலில் கொஞ்சம் தயங்கியது உண்மைதான். அப்புறம்தான் எனக்குக் காரணம் தெரிந்தது. முன்பு தென்கூடு பங்களாவின் எல்லைச் சுவர் சம்பந்தமாக வந்த வழக்கில் நமக்கு எதிராக வழக்காடினரே அருணஜடை, அவரை உங்களுக்கு நினைவு இருக்கும் என்று நம்புகிறேன். அவரும் என்னோடு ஒரே சமயத்தில் தொழிலைத் தொடங்கியவர்தான். ஆனால் 'ஓகோ' என்று ஒன்றும் பிரபலமாக வரவில்லை. இதெல்லாம் அவரவருடைய அதிருஷ்டத்தைப் பொறுத்த விஷயங்கள். இது எப்படியோ போகட்டும்; அவருக்கு ஒரே மகன் இருக்கிறான். சிங்கப்பூர் பாங்கின் ஏஜண்டு நாகலிங்கம் இருக்கிறானே, அவனுடைய தங்கையின் மகள். அந்தப் பெண்ணின் பெயர் சுசிலா. பி. ஏ. படித்திருக்கிறாள். தம்பி இங்கே வந்திருந்தபோது அந்தப் பெண்ணை நான்கூட இரண்டு மூன்றுதடவைகள் பார்த்தேன். உஷாவும் அவர்கள் பழகுவதைப் பார்த்திருப்பாள் போலிருக்கிறது. அதனால் நான் கல்யாண விஷயமாகப் பேச்சு எடுத்தபோது அவள் ஒன்றும் சொல்லாமல் இருந்திருக்கிறாள். பிறகுதான் எனக்கு இது எட்டியது. அப்புறம்தான் நானும் எடுத்துச் சொன்னேன். பேசிப் பழகினால் தப்பாக எண்ணி விடலாமா? உஷா இப்பொழுது சமாதானமடைந்து விட்டாள். அவளுடைய பூரண சம்மதத்தையும் என்னிடம் தெரிவித்து விட்டாள். உங்களுடைய சௌகரியத்தைத் தெரிந்து கொள்வது ஒன்றுதான் பாக்கி. உஷா அப்பொழுது ஒன்றும் சொல்லவில்லையே என்று தம்பி கண்ணபிரானுக்கு யோசனையாக இருந்திருக்கலாம். இப்போது அந்த யோசனைக்கு இடமில்லை என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்'' என்று பாரிஸ்டர் தம் வழக்கை விவரமாகத் தெரிவித்திருந்தார்.

கண்ணபிரானுக்கு எடுத்த எடுப்பில் இதைப் படிக்கும்போது எரிச்சலும் அதிர்ச்சியுமாகத்தான் இருந்தன. பிறகு நிதானமாகப் படிக்கப் படிக்கத்தான் எதுவும் விபரீதமாகி விடவில்லை என்று அவனுக்குப் பட்டது. முத்தையா சந்தேகப்படக் கூடிய அளவுக்கு அந்தக் கடிதத்தில் ஒன்றுமில்லை.

அவன் மனத்தின் அடித்தளத்தில் சுசிலாவைப்பற்றிய நினைவுகள் எல்லாமே






ஏதோ ஒரு விதத்தில் கசப்பான உணர்ச்சிகளையே தந்தன. இனிப்பு முருகிக் கசப்பதுபோல் அது நல்ல சுவையைக் கெடுத்தது. அதே சமயத்தில் எழிலும் புதுமையும் பொலியும் உஷாவின் நினைவு அவனுக்கு ஒரு மயக்கத்தைக் கொடுத்தது. அவள் தன்னுடைய பூரண சம்மதத்தைத் தெரிவித்து விட்டாள் என்ற வரிகளை அவன் இரண்டு மூன்று முறை—அந்த மன நிலையிலும் திரும்பித் திரும்பிப் படித்தான். சுசிலாவுக்கு எதிரான ஓர் உணர்ச்சி தன் மனத்தில் உண்டாவதை அவனே விரும்பவில்லை. அவ்வளவுக்குத் துணியக்கூடிய தன் உள்ளத்தை அவனே வெறுத்தான். ஆனால் அந்த வெறுப்பு ஒரு கணம்தான் நிலைத்திருந்தது. அடுத்த கணமே அவனுக்குச் சுசிலாவிடம் ஓர் அச்சம்தான் உண்டாயிற்று. நடந்ததெல்லாம் கனவாக மறைந்து போய்விடக் கூடாதா என்று அவன் மனம் தவியாகத் தவித்தது.

கண்ணபிரான் ஒன்றும் செய்யத் தோன்றாதவாறு உட்கார்ந் திருந்த போது, சிஞக்கார டிரைவர் மெல்ல வந்து தலையை நீட்டினான்.

"என்ன?"

"சபாபதியா பிள்ளைக்கு உடம்பு சரியாக இல்லையாம். வீட்டுக்குப் போகணுமாம். கொண்டு போய் விட்டு விட்டு வரட்டுமா?" என்று அவன் தன் மொழியில் கேட்டான்.

"போ, போ!" அவசரமாக அவனுக்கு விடை கொடுத்து அனுப்பினான் கண்ணபிரான். அந்த வகையிலாவது சிறிது நேரம் செல்லட்டுமே என்று அவனுக்குப் பெரிய ஆறுதலாகவே இருந்தது.

அவன் போன பிறகு சற்றைக்கெல்லாம் முத்தையாவின் குமாஸ்தா முருகேசன் வந்து, "நீங்கள் இருக்கிறீர்களா என்று நாகலிங்கம் டெலிபோனில் கேட்கிறார்!" என்றான்.

அவன் பரபரப்புற்று, "நீ என்ன பதில் சொன்னாய்? இருக்கிறேன் என்று சொல்லி விட்டாயோ?" என்றான்.

"என்ன சொல்வது என்று கேட்கத்தான் வந்தேன்!"

"இல்லை; இப்பொழுது நான் யாரிடமும் பேச முடியாது. வெளியில் அவசரமாகப் புறப்பட்டுக் கொண்டிருக்கிறேன். அதனால் இப்பொழுதுதான் வெளியே போகிறார் என்று சொல்லி விடு!"

தன்னுடைய வண்டியை எதிர்பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தான் கண்ணபிரான். வண்டி வந்து பங்களாவினுள் நுழைவதை அவன் அதன் சத்தத்திலிருந்தே தெரிந்து கொண்டான்.

உடனே தன்னை அவசரம்அவசரமாகச் சிங்காரித்துக் கொண்டு வெளியில் வந்தான். டிரைவர் வந்து சொல்லும் வரையில் காத்திருப்பானேன்?

"வணக்கம், தம்பி!" என்று ஒரு குரல் எதிரே கேட்டது. அவன் திடுக்கிட்டு நிமிர்ந்து பார்த்தான். "வணக்கம்!" என்று வாய் குழறியது.

"வெளியில் போய்விட்டதாகச் சொன்னார்களே!" என்று கேட்டுக் கொண்டே அவனை நெருங்கி வந்தார் நாகலிங்கம்.

"போகத்தான் கிளம்பினேன். ஆனால் அதற்குள் சபாபதியா பிள்ளைக்கு உடம்பு சரியில்லை என்று வண்டியை அனுப்ப வேண்டியிருந்தது. அதனால் போகவில்லை!" என்றான் கண்ணபிரான்.

"பெரியவரிடமிருந்து போன் வந்தது. உடனே என்னை வரச் சொல்லி. அது தான் என்ன என்று கேட்கலாம் என்று உங்களைக் கூப்பிட்டேன்!" என்றார் நாகலிங்கம்.

"யார், என் பெரியப்பாவா? உங்களை வரச் சொன்னாரா?"

"ஆமாம். போய்ப் பார்த்து விட்டு வந்துவிடுகிறேன்!" என்று எதிரே வந்த முருகேசனைப் பார்த்துவிட்டு, முத்தையாவின் அறைப்பக்கம் நடந்தார் அவர்.

கண்ணபிரான் சிலைபோல் நின்று கொண்டேயிருந்தான். (தொடரும்)

# விரைவில் வருகிறது





ஸ்ரீ வினாயகா
பிக்சர்ஸ்

# இரத்னபுரி இளவரசி

டைரக்ஷன்
ராமண்ணா




6

சென்ற அக்டோபர் மாதம் 25ம் தேதி வேலூரில் சுதந்திரக் கட்சிக் கூட்டம் வெகு சிறப்பாக நடைபெற்றது. பொதுக் கூட்டத்துக்குச் சுமார் ஒரு லட்சம் பேர் வந்திருந்தார்கள். ஊழியர் கூட்டத்துக்கும் ஜில்லாவின் பல பகுதிகளிலிருந்தும் ஊழியர்கள் வந்திருந்தார்கள்.

1. வேலூர் கலாசாரக் கழகக் கூட்டத்தில் ராஜாஜி பேசுகிறார். 2. வட ஆர்காடு ஜில்லா கல்கி ஏஜண்டுகள் ராஜாஜியைச் சந்தித்து உற்சாகமும் ஊக்கமும் பெற்றனர். 3. வேலூர் திரு மாசிலாமணி செட்டியார் எம். எல். ஸி. ஊழியர் கூட்டத்துக்கும் பொதுக் கூட்டத்துக்கும் தலைமை வகித்தார். 4. வேலூரிலிருந்து திரும்பும்போது வாலாஜா பேட்டையில் தீனபந்து ஆசிரமத்துக்கும் ராஜாஜி விஜயம் செய்தார். 5. தீனபந்து ஆசிரம நிர்வாகி திரு கே. ஆர். கல்யாணராமய்யர் ராஜாஜிக்கு வரவேற்புரை வழங்குகிறார். 6. வேலூர் காந்தி மைதானத்தில் பல்வேறு சங்கங்கள் ராஜாஜிக்கு மலர்மாலை அணிவித்துக் கௌரவித்தன. 7. காந்தி மைதானத்தில் கூடியிருந்த பெரும் கூட்டத்தின் ஆடவர் பகுதியும் பெண்கள் பகுதியும். 8. வட ஆற்காடு வர்த்தக சங்கத்தின் சார்பில் திரு விசுவநாதன் வரவேற்புரை வாசித்தளிக்கிறார்.


7






8

# ஆதரவுடன் சீராட்டி

# ஆஸ்டர்மில்க் பாலூட்டி...

... வளர்க்கும் பாசமன்றோ உயிருக்குயிரான உங்கள் செல்வத்தின் உள்ளம் நிரம்பும் அமுதம்! உங்கள் அன்புப் பாலிலே வளரும் குழந்தையின் நலத்தையே முன்னிட்டுத் தயாரிக்கப்பட்டுள்ள ஆஸ்டர்மில்க், தாய்ப் பாலின் அருமைபெருமைகள் அனைத்தும் ஒருங்கிணைந்த தாய்மையான பாலுணவாகும்.

இலவசம்! "ஆஸ்டர்மில்க் புத்தகம்" (ஆங்கிலத்தில்) ... குழந்தைப் பராமரிப்பு பற்றிய விரிவான நவீன நூல். அதன் தபால் செலவுக்காக 50 ந. பைசாவுக்குத் தபால் வில்லைகள் இணைத்து எழுதுக. எமது விலாசம்: "ஆஸ்டர்மில்க், POST BOX NO. 2420, சென்னை 2"

## தாய்ப் பாலுக்கு நிகரானது



பாரெக்ஸ்: தனது 4வது 5வது மாத முதல் குழந்தை உண்பதற்கான முதன்முதலான கனபதார்த்த உணவாகிய பாரெக்ஸ், மேன்மையான தானியங்களினின்று தயாரிக்கப்பட்டுள்ள நல்லுணவாகும்.

OS-2-50-M. TM

# முடிந்த கதை

கணையாழி

'காமதேனு' பத்திரிகை ஆசிரியரிடமிருந்து மகாலக்ஷ்மிக்கு அன்று ஒரு கடிதம் வந்திருந்தது.

"தீபாவளி மலர் வேலைகள் ஆரம்பமாகி விட்டன. தங்கள் கதை ஒன்று வேண்டும் என்று முன்பே இரண்டு கடிதங்கள் எழுதியிருந்தேன். கிடைத்திருக்கும் என்று நம்புகிறேன். உங்களுடைய கதையை இன்னும் இரண்டு மூன்று தினங்களில் அனுப்பி வைத்தால் மிக்க உபகாரமாக இருக்கும்.

இங்ஙனம்

சுந்தர சர்மா

உண்மைதான். 'காமதேனு' பத்திரிகையின் ஆசிரியரிடமிருந்து கடிதம் வந்தவுடனே கதையை அனுப்பி விட்டுத்தான் மறுகாரியம் பார்ப்பது மகாலக்ஷ்மியின் வழக்கம். இந்தத் தடவை அவளால் முடியவில்லை. அவரிடமிருந்து மூன்றாவது கடிதமும் வந்துவிட்டது. அவளுக்கு என்ன கதை எழுதுவது என்றே தெரியவில்லை. ஒரு பத்திரிகைக்குமே அவள் எழுதவில்லை. ஒரு கதையாவது எழுதிக் காமதேனுவுக்கு மட்டும் அனுப்பி விடுவது என்று அவள் எவ்வளவோ முயன்று பார்த்தாள். கடைசியில் 'இந்த வருடம் என்னால் எழுத இயலவில்லை. மன்னித்து விடுங்கள்' என்று கடிதம் எழுதி விடலாமா என்றுகூட அவள் எண்ணி விட்டாள்.

தமிழ்நாட்டின் சிறந்த பெண் எழுத்தாளர்களில் அவளும் ஒருத்தி. கிட்டத்தட்டக் கல்லூரி நாட்களிலிருந்தே பத்திரிகைகளுக்கு எழுதி வந்தாள். சில வருஷங்களுக்குள்ளாகவே மகாலக்ஷ்மியின் கதைகளைப் போட்டி போட்டுக் கொண்டு பிரசுரம் செய்யத் தொடங்கின பத்திரிகைகள். அதுவும் அவளுக்குக் கல்யாணமான வருஷத்தில்-தலை தீபாவளியின் போது—பார்க்க வேண்டுமே! தமிழ்நாட்டில் வெளியான அவ்வளவு தீபாவளி மலர்களிலும் மகாலக்ஷ்மியின் கதைகள் பிரசுரமாகியிருந்தன. அதைக் கண்டு அவளுடைய கணவன் தேவநாதனே கூட மிகவும் பிரமித்துப் போய் விட்டான்.

"இவ்வளவு வருஷங்களாகச் சாதாரண இதழ்களில்தானே எழுதி வந்தாய். என்னுடைய தலைதீபாவளியின் போதுதானே உன் கதைகள் விசேஷ மலர்களில் இடம் பெறுகின்றன. அதற்கு என் அதிர்ஷ்டம் தானே காரணம்?" என்று அவள் புகழில் பங்கு கேட்டான் அவள் கணவன்.

"நம் தலை தீபாவளி என்று சொல்லுங்கள்" என்று ஒரே வார்த்தையில் புகழில் பங்குகேட்க வந்தவனை மடக்கினாள் மகாலக்ஷ்மி.

"மனைவியிடம், தலைதீபாவளி அன்று புது மாப்பிள்ளை தோற்பது இயல்புதானே!" என்று வேடிக்கையாகச் சொல்லி அன்று நிலைமையைச் சமாளித்துக் கொண்டான் தேவநாதன்.

அவனுடைய—அல்ல—அவர்களுடைய தலை தீபாவளி கழிந்து பன்னிரண்டு வருஷங்களாகி விட்டன. இன்று அவர்களுடைய பெண் சரளா ஏழாவது வகுப்பில் படிக்கிறாள். செல்லக்குட்டி வாசுவுக்கு வயது ஐந்தாகிறது. இவ்வளவு வருஷங்களாக இடைவிடாமல் கதை எழுதி எழுதி அவளுக்கும் சலித்துப் போய்விட்டது. அதுவும் தீபாவளி மலர்களுக்குக் கதை எழுதுவது என்றால் அவளுக்கு வேப்பெண்ணெயைப் போலக் கசப்பாக இருந்தது. "சோகத்திலே கதை முடியக்கூடாது: அழுகையில் ஆரம்பமாகக் கூடாது. கதையின் நடுவிலே யாரும் சாகக்கூடாது" போன்ற சம்பிரதாயங்களுக்குக் கட்டுப்பட்டுச் சுவையான, ரஸமான, கதைகளை எப்படி எழுதுவது என்று தெரியாமல் அவள் இப்பொழுதுதான் பன்னிரண்டு வருஷங்களுக்குப் பிறகு முதன் முதலாகத் தீவிரமாக யோசனை செய்கிறாள்.

காட்டிலே பதினாலு வருடங்கள் மரவுரி தரித்துப் பழகிப் போன சீதை, அயோத்திக்கு மீண்டும் திரும்பியதும் உடம்பெல்லாம் சரிகை மயமாக மின்னும் பதினெட்டு முழப் பட்டுப் புடைவையைக் கட்டிக் கொள்ள முடியாமல் எப்படித் திணறினாளோ அதை விட அதிகமாகவே மகாலக்ஷ்மி திகைத்தாள்.

"என்ன யோசனை பலமாக இருக்கிறதே!" என்று கேட்டுக்கொண்டே அறைக்குள் நுழைந்தான் அவள் கணவன் தேவநாதன்.

"கதை வேண்டுமென்று மூன்றாவது கடிதம் வந்திருக்கிறது. மற்றப் பத்திரிகைகளுக்கு இயலவில்லை என்று எழுதினது போலக் 'காமதேனு'வுக்கும் எழுத முடியுமா? ஏதாவது எழுத வேண்டுமே என்று யோசிக்கிறேன்" என்று மிக்க கவலையுடன் பதில் தந்தாள் மகாலக்ஷ்மி.

"இதோ, நான் சில தலைப்புகள் தருகிறேன். 'இம்மென்னுமுன்னே இருநூறும் முந்நூறும்' எழுதிக் குவித்த காளமேகத்தைப் போல் நீயும் ஒரே நாளில் ஐந்தாறு கதைகள் எழுதிவிடப் போகிறாய். 'தலை தீபாவளி', 'தீபாவளிப் பரிசு', 'வைர மோதிரம்', 'ஆரணிப் புடவை', 'தீபாவளிக்கலாட்டா'" என்று அடுக்கிக் கொண்டே போனான் தேவநாதன்.

"'தீபாவளி போனஸ்', 'அதிசயத் தீபாவளி', 'தீபாவளி அமர்க்களம்' என்று அஷ்டோத்தரம் சொல்லப் போகிறீர்களா? போதுமே, உங்கள் குறும்புப் பேச்சு. உங்கள் விளையாட்டால் எனக்குத் தோன்றிய கற்பனையும் கலைந்து விட்டது" என்று மகாலக்ஷ்மி கணவனைக் கண்டிக்கத் தொடங்கினாள்.

"அடடா! உனக்குக் கோபம் வரும்படியாக நடந்து விட்டேனே! ஒரு நல்ல 'ஐடியா' சொல்லுகிறேன். நீ எழுதினால் சரி, இல்லாவிட்டால் விட்டுத் தள்ளு. உனக்குக் கல்யாணமான அந்த அதிசயத்தையே கதையாக எழுதலாமே!" என்றான் தேவநாதன் மறுபடியும் சிரித்துக் கொண்டே.

அதைக் கேட்டதும் மகாலக்ஷ்மியின் கோபம் உடனே மறைந்தோடி விட்டது. சிறிது நேரம் யோசனையில் ஆழ்ந்தாள்.

"ஆமாம், அதை நினைக்க, நினைக்க எனக்கு வேடிக்கையாக இருக்கிறது: ரஸமாக எழுதினால் நன்றாகத்தான் இருக்கும்" என்றாள் மகாலக்ஷ்மி.

அன்று இரவு பத்து மணி ஆயிற்று. தேவநாதன் வழக்கத்தைவிடச் சீக்கிரமாகவே படுத்துத் தூங்கிவிட்டான். வீட்டு வேலைகளை முடித்துக் கொண்டு சாவகாசமாக மேஜையின் முன்னால் வந்து உட்கார்ந்தாள். ஆசிரியரின் மூன்று கடிதங்களும் அவள் முன் கிடந்தன. 'இன்று இரவுக்குள் எப்படியாவது ஒரு கதை எழுதி முடித்துவிட வேண்டும்' என்ற தீர்மானம் அவள் முகத்தில் பளிச்சென்று தெரிந்தது. சிறிது நேரம் பேனாவைக் கையில் பிடித்த வண்ணம் யோசனையில் ஆழ்ந்திருந்தாள். பிறகு காகிதங்களை எடுத்து ஒழுங்காக அடுக்கி வைத்துக் கொண்டு மும்முரமாக எழுத ஆரம்பித்தாள்.

*  *  *

"மகாலக்ஷ்மி, இன்னுமா தூங்குகிறாய்? அப்படி என்ன ஒரு பெண்ணுக்குத் தூக்கம், விடிந்தது கூடத் தெரியாமல்?" என்று அதட்டியபடியே அறையின் ஜன்னல்களைத் திறந்தாள் வேதம்.

ஜன்னல் வழியாகச் சிதறிய சூரியனுடைய கிரணங்கள் அறையில் படிந்திருந்த இலேசான இருட்டை நொடிப் பொழுதில் மறையச் செய்தது. 'சுரீர்' என்ற வெளிச்சம், படுக்கையில் துவண்டுகிடந்த மகாலக்ஷ்மியின் உடலில் உறைத்தது. தன் குரலைக் கேட்டதுமே படுக்கையிலிருந்து பெண் துள்ளி எழுந்திருப்பாள் என்று வேதம் எதிர்பார்த்தாள். ஆனால் மகாலக்ஷ்மி முகத்தில் வெளிச்சம் படாதவாறு சுவரின் பக்கமாக முகத்தைத் திருப்பிப் புரண்டு படுத்துவிட்டாள். காலடியில் கிடந்த போர்வையை நன்றாக இழுத்து உடம்பைப் போர்த்துக் கொண்டாள். தன் பெண்ணின் சோம்பலைக் கண்டு மறுபடியும் உரத்த குரலில் கண்டித்தாள் வேதம்.

மகாலக்ஷ்மி வேறு வழியில்லாமல் முணுமுணுத்தபடியே படுக்கையை விட்டு எழுந்து உட்கார்ந்தாள். உடம்பை வளைத்து, நெளித்து, கைகளைத் தலைக்கு மேலே உயர்த்தி வில் போலப் பிடித்துச் சோம்பல் முறித்துக் கொண்டாள். கடைசியில் படுக்கையிலிருந்த போர்வையைப் பரக்கப் பரக்கத் தரையில் உதறினாள். இப்பொழுதுதான் அவளுடைய தூக்கம் முற்றும் கலைந்தது.

"மெல்லடி மெல்ல, இன்று வெள்ளிக்கிழமை. இப்பொழுதுதான் குளித்து விட்டு வந்து மடியாய் நிற்கிறேன். கண்ட கண்ட விழுப்புகளையெல்லாம் என்மேல் படும்படி வீசாதே. நாள் கிடையாது, கிழமை கிடையாது; பண்டிகை இல்லை, பருவம் இல்லை; தீட்டு, மடி, விழுப்பு ஒன்றும் இந்த வீட்டில் கிடையாது. படித்த படிப்பு போதும்; இண்டரும் காலேஜும் வேண்டாம் என்றால் கேட்டால்தானே" என்று வேதம் தன் ஆத்திரத்தைக் கொட்டத் தொடங்கினாள்.

மகாலக்ஷ்மி அப்படியே அசந்து நின்று விட்டாள். இப்படிக் காலையில் அம்மாவுக்குக் கோபம் வந்து விடும்படியாக அவள் என்றுமே நடந்து கொண்டதில்லே. என்னதான் இரண்டு எழுத்து இங்கிலீஷ் படித்து விட்டாலும் அவள் அம்மாவுக்குப் படிந்த பெண்தான். சின்ன வயசிலிருந்தே அம்மாவின் கண்டிப்பி லேயே அவள் வளர்ந்தவள். நல்லதைத் தான் அம்மா கொஞ்சம் கடுமையாகச் சில சமயங்களில் சொல்லுவாள் என்பது அவளுக்கு நன்றாகத் தெரியும். கல்லூரி வாசலே எட்டிய பிறகும் அவளுக்கு அம்மாவிடம் மதிப்பும் பயமும் இருந்து வந்தன.

"அம்மா! நேற்று இரவு படுக்க மிகவும் நாழிகையாகிவிட்டது. எதையோ படித்துக் கொண்டு இருந்துவிட்டேன். இதோ நொடி யில் தயாராகி விடுகிறேன்" என்று சொல் லிக்கொண்டே மின்னல் வேகத்தில் மாடிப் படியில் இறங்கி வெந்நீர் அறைக்குள் சென்று மறைந்தாள் மகாலக்ஷ்மி.

வேதம் தன்னுடைய கைக்காரியங் களில் மும்முரமாக ஈடுபட்டிருந்தாள். பத்து நிமிஷங் கூட ஆகி யிருக்காது. "அம்மா!" என்று மகாலக்ஷ்மி கூவிக்கொண்டே பூஜைஅறைக்குள் நுழைந்தாள்.

சந்தன சோப்பின் வாசனைகமகமவென்று அவள் நின்ற இடத்தி லிருந்து வீசியது. மெருகு கொடுத்தபின் கடைந்தெடுத்த பது மைக்குத் தோன்றும் நேர்த்தியான புதுப் பொலிவு மகாலக்ஷ்மி யிடம் அப்பொழுது நிலவியிருந்தது.

உச்சியிலிருந்து உள் ளங்கால் வரை மகா லக்ஷ்மியை ஏற இறங் கப் பார்த்தாள் வேதம். 'சின்னவயசில் நானும் இந்தமாதிரி தானே இருந்திருப்பேன்' என்ற நினைவு அவள் முகத்தில் இலேசாகப் படர்ந்தது.....



இந்தக் கட்டத்திலே மகாலக்ஷ்மி எழுது வதை நிறுத்திவிட்டு, எதிரேயிருந்த கண்ணாடி யில் நிமிர்ந்து தன்னை ஒரு முறை பார்த்துக் கொண்டாள். பல வருஷங்களுக்கு முன்பு இருந்த அதே மகாலக்ஷ்மியின் உருவமே கண் ணாடியில் தெரிந்தது. ஆனால் முன்பிருந்த இளமை வனப்பு சிறிது குறைந்திருந்தது. மஞ்சள் பூச்சுடன் விளங்கிய தன் அன்னை வேதத்தின் புகைப்படத்தையும், கண்ணாடி யில் தெரிந்த தன் உருவத்தையும் ஒப்பிட்டுப் பார்த்தாள். தாயும் பெண்ணும் என்று சொல்வதைவிடச் சகோதரிகள் என்று சொல் லும் வகையில் இரு உருவங்களும் இருந்தன. பூரணத் திருப்தியுடன் ஒரு பெருமூச்சு விட்டுக் கொண்டு மீண்டும் தன் சொந்தக் கதையை எழுதுவதில் முனைந்தாள் மகாலக்ஷ்மி.

"அவள் நினைவு முழுதும் ஆம்பூரில் நடை பெறும் தன் நாத்தனார் பெண்ணின் கல்யா ணத்துக்குச் சென்ற தன் கணவரிடமே இருந் தது." இப்படி எழுதிய பின் ஒரு கணம் யோசித்தாள். பிறகு அவள் என்பதை அடித்து அதன் மேல் வேதம் என்று எழுதி விட்டு மேலே தொடர்ந்தாள்.

அந்தக் கலியாணத்துக்கு முதலில் எல் லோருமாகத்தான் சேர்ந்து போவதாக இருந்தது. ஞாயிற்றுக் கிழமைதானே கல்யாணம். "இங்கே கௌரி பூஜையை முடித் துக்கொண்டு பெங்களூர் எக்ஸ்பிரஸில் புறப் பட்டு நாங்கள் வந்து விடுகிறோம். வேண்டிய பொருள்களைப் பெட்டியில் வைத்து நீங்கள் எடுத்துக் கொண்டு முன்னதாகப் போய்ச் சேருங்கள். நாங்கள் ஒரு நாள் தாமதமாக வந்து சேர்ந்தால் ஒன்றும் கெட்டுப் போய் விடாது" என்று பிடிவாதமாகத் தன் கணவனிடம் சொல்லி அவரை இரண்டு நாட்கள் முன்பே ஆம்பூருக்கு அனுப்பிவிட் டாள் வேதம்.

ஆனால் அவள் எதிர்பார்த்தபடி நடக்க வில்லே. வீட்டில் பூஜை முடியச் சற்று நேர மாகி விட்டது. பூஜை செய்து முடித்த அன்று வீட்டை விட்டுச் சுமங்கலியும் கன்னிப் பெண்ணும் வெளியூருக்குப் போகக் கூடாது என்றுபக்கத்தில் இருந் தவர்கள் சிலர் தடை எழுப்பி விட்டார்கள். எனவே சனிக்கிழமை அன்றைக்குத்தான் அவர்களால் ஆம்பூர் புறப்பட முடிந்தது. புறப்படும் அவசரத் தில் பாங்க் செக்கைக் காலேயில் மாற்ற அம் மாவும் பெண்ணும் மறந்து விட்டார்கள். கடைசியில் கையில் இருந்த தொகையை எடுத்துக் கொண்டு ஆம்பூர் புறப்பட்டார் கள். இந்தக் குழப்பத் தில் பங்களூர் எக்ஸ்பிரஸ் தவறிவிட்டது. கடைசியில் மூன்று மணி பஸ்ஸில்தான் தாயும் மகளும் புறப்பட முடிந்தது. சௌக் கியமாக ஆம்பூர் போய்ச் சேரவேண்டுமே என்ற கவலே, காலேயிலிருந்து ஏற்பட்ட தடங்கல்கள் எல்லாமாகச் சேர்ந்து வேதத் துக்கு வேதனையைத் தந்தன. அதற்கேற்றாற் போல் குடியாத்தம் எல்லேயில் என்ஜின் கோளாறினால் பஸ் நின்றுவிட்டது. எவ்வ ளவோ 'முதல் உதவி' செய்தும் பஸ் நகரவில்லே.

நாத்தனார் பெண்ணின் கல்யாணத்துக்கு நாலு நாட்கள் முன்பே போனாலும் ஏதா வது சொல்லாமல் இருக்கமாட்டாள். இப் படி ஜானுவாசத்துக்கும் போய்ச் சேராமல் முகூர்த்தத்துக்கும் போக முடியாவிட்டால் ஏசிக் காட்டுவார்களே என்று நினைத்து வேதம் இடிந்து போய் உட்கார்ந்து விட்டாள்.

கும்மிருட்டு; சுற்று முற்றும் ஒரே இருள். ரஸ்ஸிலிருந்து இறங்கிய பிரயாணிகள் மூலைக்கு ஒருவராகப் பிரிந்து சென்று விட்டார்கள். பஸ் ஸ்டாண்டுக்கு அருகே இருந்த டீக்கடையில் டீ குடிக்கச் சென்றுவிட்டான் கண்டக்டர். தலையில் ஸ்வெட்டரைக் கட்டிக்கொண்டு ஒரு பெட்டிக் கடையில் சுவாரஸ்யமாகப் புகை பிடிக்கலானான் டிரைவர், நிச்சிந்தையாக.

வேதத்தின் மனம் 'திக்திக்' கென்று அடித்துக்கொண்டது. மேற்கொண்டு என்ன செய்வது என்று தோன்றாமல் திகைத்தாள். ஏதோ முடிவுக்கு வந்தவள்போல டீக்கடைக்கு விரைந்து சென்றாள் மகாலக்ஷ்மி. "எங்கே தனியாகப் போகிறாய்?" என்ற தாயின் குரலை அவள் பொருட்படுத்தவே இல்லை.

'சிறிது தூரத்தில் மில் முதலியார் ஒருவர் பங்களா இருக்கிறது. தங்களுடைய உறவினர்கள் கல்யாணத்துக்காக அவர்கள் வீட்டில் எல்லோரும் பங்களூருக்குக் காரில் புறப்படப் போகிறார்கள்' என்று முன்பு கண்டக்டர் தெரிவித்த செய்தி மகாலக்ஷ்மிக்குச் சிறிது தைரியத்தைத் தந்தது. உடனே அவள் முதலியாரின் பங்களாவை நோக்கி விரைந்து சென்றாள். அங்கே கண்ட காட்சி அவளைத் திடுக்கிடச் செய்தது......"

இப்பொழுது மகாலக்ஷ்மிக்குக் கண்கள் தூக்கத்தால் சுழன்றன. விடிந்ததும் முழுக் கதையையும் எழுதி முடித்து விடலாம் என்று நினைத்துக் கொண்டே போர்வையை இழுத்துப் போர்த்துக் கொண்டு படுத்தாள்.

விடியற்காலம் மூன்று மணிக்கு அலாரம் கணகணவென்று அடித்தது. தூக்கக் கலக்கத்தில், 'அலாரத்தை நிறுத்துங்களேன்' என்று கணவனிடம் சொல்லிவிட்டு மகாலக்ஷ்மி புரண்டு படுத்தாள். முன் இரவில் நெடுநேரம் கண்விழித்த அசதியால் அவளால் எழுந்திருக்க முடியவில்லை. அலாரத்தை நிறுத்தப்போன தேவநாதனின் பார்வை, முந்திய இரவு தன் மனைவி எழுதிப் பாதியில் விட்டிருந்த கதையின்மேல் சென்றது. தூக்கம் கலைந்த அவன் ஆவலுடன் அதை எடுத்துப் படிக்கலானான்.

மணி மூன்றரை அடித்தது. அரைகுறையாக எழுதியிருந்த கதையைப் படித்து முடித்திருந்த தேவநாதன் பேனாவைக் கையில் எடுத்துக்கொண்டு மகாலக்ஷ்மியின் கதையைத் தொடர்ந்து எழுதத் தொடங்கி விட்டான்.

"அன்று இரவு மணி ஒன்பது இருக்கும். ஆபீஸில் எஞ்சியிருந்த பைல்களை வீட்டுக்குக் கொண்டு வரச் சொல்லியிருந்தேன். சாப்பிட்டு விட்டு ஏழு மணிக்கு என் ஆபீஸ் அறையில் உட்கார்ந்தவன் ஒன்பது மணிக்கு எல்லா பைல்களையும் கவனித்து முடித்துவிட்டேன். இனிமேல் இரண்டு நாட்களுக்கு நிம்மதியாக இருக்கலாம். சுந்தர முதலியார் பங்களூரில் நடைபெறும் கல்யாணத்துக்குச் சென்று திரும்பி வந்ததும் 'ஜயா காட்டன் மில்லின்' எதிர்கால விஸ்தரிப்பு சம்பந்தமான என் திட்டங்களுக்கு அவரிடம் அனுமதி பெற்று விடலாம் என்று எண்ணிக் கொண்டே படுக்கப் புறப்பட்டேன்.

அப்பொழுது அறைக் கதவை யாரோ அவசரமாகத் தட்டுவது காதில் விழுந்தது. மிகுந்த எரிச்சலுடன் சென்று கதவைத் திறந்தேன். முதலியாருடைய பங்களா தோட்டக்காரன் எதிரே நின்று கொண்டிருந்தான்.

"என்னடா, விசேஷம்? முதலியார் அழைத்துவரச் சொன்னாரா?" என்று சற்று அதட்டலாகவே கேட்டேன்.

"ஆமாங்க, அவங்க புறப்பட முடியாதபடி பெரிய வண்டி மக்கார் பண்ணுதுங்க. முதலியார் என்னிடம் 'உடனே போய் மானேஜர் ஐயாவை அழைச்சுட்டு வாடா'ன்னு சொன்னாருங்க" என்றான் தோட்டக்காரன் பணிவாக.

என்னுடைய 'வாக்ஸால்' காரை எடுத்துக் கொண்டு விரைவாகப் பங்களாவுக்குப் போய்ச் சேர்ந்தேன்.

"அகால வேளையில் உங்களை மிகவும் தொந்தரவு செய்து விட்டேன். 'மோட்டாரில் பெரிய ரிப்பேர். இன்று புறப்பட முடியாது' என்கிறான் டிரைவர்' என்றார் முதலியார்.

என்னுடைய வாக்ஸாலுக்குச் சொந்தக்காரரே அவர். ஆபீஸ் காரியங்களுக்குப் பயன்படுத்திக் கொள்வதற்காகவே முதலியார்

சென்னைக்கு நவம்பர் 10, 11, 12 தேதிகளில் விஜயம் செய்யும் அமெரிக்க "டான்ஸ் ஜுபிலி" நடனக் கோஷ்டியின் ஒரு தோற்றம். இக் கோஷ்டியின் நடன நிகழ்ச்சிகள் அண்ணாமலை மன்றத்தில் நடைபெறும்.



அதை என் பொறுப்பில் ஒப்புவித்திருந்தார். ஏராளமான மூலதனத்தைக் கொண்டு நடத்தப்பெறும் ஜயா காட்டன் மில்லின் முழு நிர்வாகத்தையும் என்னை நம்பி ஒப்படைத்த அவருக்கு வாக்ஸால்தானு ஒரு பிரமாதம்! எனினும் தமக்குச் சொந்தமான பொருளை என்னிடமிருந்து அவர் உரிமையுடன் கேட்காமல் மறைமுகமாகக் கேட்ட அவருடைய பெருந்தன்மையைக் கண்டு வியந்தேன்.

''பெரிய கார் ரிப்பேர் என்றால் என்ன? இந்தச் சின்னக் காரை இன்று எடுத்துக் கொண்டு போங்களேன். நாளையே பெரியதை சர்வீசுக்கு அனுப்பி விடுகிறேன்'' என்று சொல்லி அவர் குடும்பத்தார்களை 'வாக்ஸாலில்' பங்களூருக்கு அனுப்பி வைத்தேன். இந்த அமர்க்களத்தில் எனக்கு வந்த தூக்கம் முற்றும் கலைந்து விட்டது. எனவே, கார் புறப்படாது என்று டிரைவர் சொன்னானே, அதில் என்ன கோளாறு என்று காரின் 'பானெட்'டைத் திறந்து குடைய ஆரம்பித்தேன். சிறுவயதில் நான் கற்றுக் கொண்டிருந்த பல செப்பிடு வித்தைகளில் அதுவும் ஒன்று. எந்தச் சமயத்தில் எந்தப் பொருளில் கோளாறு தோன்றினாலும், அதை அக்கு வேறு ஆணிவேறாகப் பிரித்துத் தப்பைக் கண்டுபிடித்து ஒழுங்கு செய்வது எனக்கு ஒரு பொழுது போக்காக அமைந்து விட்டது. அரைமணி நேரத்திலேயே காரை 'ஸ்டார்ட்' செய்யும் நிலைக்குக் கொண்டு வந்துவிட்டேன்.

அப்பொழுது திடீரென்று, ''இங்கேயும் கார் ரிப்பேராகி விட்டதா?'' என்று யாரோ ஒரு பெண் குரல் கேட்பது தெரிந்தது. உடனே குரல் வந்த திக்கை நோக்கினேன். அழகுத் தெய்வமே என் கண்ணெதிரே வந்து நிற்பதாக எனக்குத் தோன்றியது.

''நீங்கள் முதலியாரின் கார் டிரைவர் தானே?'' என்று அந்தப் பெண் என்னை அடுத்தபடியாகக் கேட்டதும் எனக்குத் தூக்கி வாரிப் போட்டது. என் உடையை ஒரு முறை பார்த்தேன். பிறகுதான் தெரிந்தது, அவள் என்னை டிரைவர் என்று எண்ணியதில் தவறு இல்லை என்று.

அகாலத்தில் மகாலக்ஷ்மியைப் போல் ஒரு பெண் வந்து என் எதிரே நின்று என்னை டிரைவர் என்று அழைத்ததும், அந்த நினைவு தந்த இன்ப மயக்கத்தில் நான், ''ஆமாம், டிரைவர் தான். உங்களுக்கு என்ன வேண்டும்?'' என்றேன்.

''ஆம்பூரில் நடைபெறும் கல்யாணத்துக்குப் புறப்பட்ட நானும் என் தாயாரும் பஸ் நடு வழியே நின்று விட்டதால் திண்டாடுகிறோம். உங்கள் எஜமானர் பெங்களூர் புறப்படும் போது தயைசெய்து அவரிடம் சொல்லி...'' என்று அவள் சொல்லி முடிப்பதற்குள் நான் குறுக்கிட்டுப் பேசினேன்:

''அவரும் குடும்பமும் இப்பொழுதுதானே வேறு ஒருகாரில் புறப்பட்டார்கள்'' என்றேன்.

நான் சொன்ன அந்த வார்த்தைகளைக் கேட்டு அவள் முகம் கண்டிப் போய் விட்டது. ''நீங்கள் படும் கஷ்டத்தைக் காண எனக்கு மனம் பொறுக்கவில்லை. ஒன்று வேண்டுமானால் செய்கிறேன்'' என்று தொடர்வதற்குள், அவள் என் பேச்சுக்கிடையே குறுக்கிட்டாள்.




''நீங்கள் தீ அணைக்கும் படையில் சேர்ந்தால், அதற்காகக் குழந்தை வெடிக்கிற பட்டாசு மேலே எல்லாம் தண்ணியைக் கொட்டறதா?''

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

''அதோ, என் அம்மா அங்கே தனியாகக் கவலைப்படுகிறாள், நான் மூக்கடையில் கூட இரவில் தைரியமாகத் தங்கி விடுவேன். என் அம்மாவால் முடியாது. இதோ என்னுடைய மோதிரத்தை வைத்துக் கொள்ளுங்கள். ஆம்பூர் சென்றதும் உங்களுக்குரிய தொகையைக் கொடுத்துவிட்டு மோதிரத்தை வாங்கிக் கொள்கிறேன்'' என்று சொல்லிக் கொண்டே மோதிரத்தைக் கழற்றி என் கையில் கொடுத்து விட்டுச் சரேலெனப் பின் கதவைத் திறந்து காருக்குள்ளே உட்கார்ந்து கொண்டாள்.

வேறு வழியில்லாமல் கொஞ்சம் வேடிக்கை தான் பார்க்கலாமே என்று எண்ணி மோதிரத்தை விரலில் போட்டுக் கொண்டேன். அப்பொழுது என் உடல் முழுவதும் சிலிர்த்தது. உள்ளத்தில் ஏதோ சொல்ல முடியாத மகிழ்ச்சி நிலவியது. நடப்பது நடக்கட்டும் என்று தீர்மானமாக வேறு உடையைக் கொண்டு வரும்படி தோட்டக்காரனிடம் மெல்லச் சொல்லி அனுப்பினேன்.

சிறிது நேரத்தில் அம்மாவையும் பெண்ணையும் ஏற்றிக்கொண்டு காரை வெகு வேகமாக ஆம்பூரை நோக்கிச் செலுத்தினேன்.

நள்ளிரவில் கார் ஆம்பூரை அடைந்தது. வாழையும் மாவிலையும் கட்டியிருந்த கல்யாண வீட்டின் முன் காரை நிறுத்தினேன். முதலில் அந்தப் பெண்ணின் தாயார் வீட்டுக்குள்ளே சென்றாள். வேண்டுமென்றே சிறிது பின் தங்கிய அந்தப் பெண் என் அருகே வந்தாள். ''மிக்க வந்தனம். தாங்கள் செய்த உதவிக்கு மிக்க நன்றி. இன்றிரவு இங்கேயே தங்க உங்களுக்கு ஆட்சேபமில்லையே? நாளைக் காலையில் என் அப்பாவிடமிருந்து....''

"தொகையை வாங்கிக் கொடுங்கள். அது வரையில் நான் காத்திருக்கிறேன். ஆனால் இந்த மோதிரத்தை நீங்களே வைத்துக்கொள்ளுங்கள்" என்று அவசரம் அவசரமாக அவளுடைய மோதிரத்தை அவள் கையிலேயே கொடுத்தேன். இப்பொழுது அவளுடைய விரல்கள் என்மேலே பட்டு என்னை ஒருமுறை குலுங்கச் செய்தன."

மணி ஐந்தடித்தது. கோழி கூவும் குரலும் காகங்களின் சத்தமும் இரவின் அமைதியைக் கலக்க ஆரம்பித்தன. தேவநாதனுக்கும் அதற்கு மேலே கதையை எப்படிக் கொண்டு போவது என்று தெரியவில்லை. சற்று நேரம் தோட்டத்தில் உலாவிவிட்டு வரலாம் என்று வெளியே புறப்பட்டான்.

அவன் கீழே சென்ற சில விநாடிகளுக்குப் பிறகு சரேலெனப் படுக்கையை விட்டு எழுந்து நேரே மேஜைக்குச் சென்றாள் மகாலட்சுமி. தன் கணவன் ஏதோ மும்முரமாக எழுதுவதை அவள் விடியற் காலையிலே கண்டு விட்டாள். தான் அரைகுறையாக விட்டிருந்த கதையைப் பூர்த்தி செய்யத் தன் கணவன் முயன்றிருக்கிறார் என்பதைக் கண்டவள் ஆவலுடன் படித்து முடித்தாள். அவள் முகத்தில் மட்டில்லாத மகிழ்ச்சி மலர்ந்தது. 'இவரும் கதையைப் பாதியிலேயே நிறுத்தி விட்டாரே' என்று எண்ணிய அவள் பேனாவை எடுத்துக் கதையைத் தொடர்ந்து எழுதலானாள்:

"அந்தக் கல்யாணம் வெகு ஜோராக நடந்தது. முகூர்த்த வேளை நிறைவேறி மாங்கல்யதாரணமும் ஆயிற்று. அங்குமிங்கும் அலைந்ததால் மகாலக்ஷ்மியின் முகத்தில் வேர்வை அரும்பியிருந்தது. மெல்ல அதைத் துடைத்து விட்டுக் கொண்டாள். நெற்றியில் ஏதோ அழுந்தியதாகத் தோன்றியது. சடக்கென்று கையைப் பார்த்தாள். தன் கை விரலில் புதிதாக ஏதோ ஒரு பவளமோதிரம் இருப்பதைக் கண்டு பிரமித்து விட்டாள். தன்னுடைய நீலக்கல் மோதிரத்துக்குப் பதிலாகப் பவள மோதிரம் எப்படி வந்தது என்று ஒரு விநாடி யோசித்தாள். அவளுக்கு ஒரே குழப்பமாயிருந்தது. ஒருவேளை அந்த அழகான வாலிபரே மோதிரத்தை மாற்றியிருப்பாரோ! அதுவும் அவர் மாப்பிள்ளை வீட்டில் சிட்டாடிக் கொண்டிருக்கிறார் என்பது அவள் சந்தேகத்தை ஊர்ஜிதப்படுத்தியது.

மகாலட்சுமிக்கு அன்று விருந்துச் சாப்பாடு சிறிதும் இறங்கவேயில்லை; ருசிக்கவே இல்லை. முந்தின நாள் இரவு நிகழ்ந்ததையும், பவள மோதிரத்தின் மர்மத்தையும் அப்பாவிடம் சொல்ல அவள் துடித்தாள். ஆனால் அவரைத் தனிமையில் சந்திக்கவே முடியவில்லை.

மாலை மூன்று மணி இருக்கும். அப்பொழுது அவளுடைய தாயாரே அவளிடம் வந்து, "உன்னை அப்பா அழைக்கிறார், மாடியிலே இருக்கிறார்" என்று சொல்லிப்போனாள்.

நேரே மகாலட்சுமி மாடிக்கு விரைந்தாள். தந்தையைக் கண்டதும், 'அப்பா! நேற்று இரவு என் மோதிரம் தொலைந்து விட்டது' என்று ஆரம்பித்து எல்லாவற்றையும் சொல்லி விட வாயெடுத்தாள்.

அதற்குள் அவள் தந்தையே முதலில் பேச ஆரம்பித்து விட்டார்:

"மகாலட்சுமி! ஒரு முக்கிய விஷயம். மாப்பிள்ளையின் நண்பன் ஒருவன் இங்கே வந்திருக்கிறான். ஜயா காட்டன் மில்லில் மானேஜர் வேலையாம். ஐந்நூறு ரூபாய் சம்பளமாம். பெயர் தேவநாதனாம். நீ அவனைப் பார்த்து உன் சம்மதத்தைத் தெரிவித்து விட்டால் நல்லது. அவனைப் பிற்பகலில் இங்கே வரச் சொல்லியிருக்கிறேன்." தந்தையின் வார்த்தைகள் அவள் நினைவை வேறுபக்கம் இருப்பின. ஒருவேளை அப்படியும் இருக்கலாமோ என்று எண்ணினாள். அடுத்த கணம் வெட்கத்தால் அவள் முகம் சிவந்தது.

"எதுவும் நிச்சயமாகத்தெரியாமல் என்னால் ஒன்றும் சொல்ல முடியாது. அதுவும் மூன்றுவது மனிதர் வீட்டில் வைத்துப் பேசித் தீர்மானம் செய்ய என்னால் முடியாது" என்று சொல்லிவிட்டு முகம் கடுகடுக்க மகாலட்சுமி கீழே வந்தாள். மாடிப்படியைப் பாதியே கடந்திருப்பாள். அதற்குள் யாரோ தன்னை நோக்கி நடந்துவரும் சத்தம் கேட்கவே நிமிர்ந்து பார்த்தாள். முந்திய இரவில் குடியாத்தத்திலிருந்து காரோட்டி வந்த வாலிபர் தாம் அவர் என்று கண்டு ஒருகணம் அசந்து போய் விட்டாள்.

"நீங்கள்தானே...?" என்று மெல்லச் சமாளித்துக் கொண்டு கேட்டாள்.

"ஆமாம், டிரைவர்" என்று சிரித்துக் கொண்டே அவன் பதில் சொன்னான்.

"அல்ல. உங்கள் பெயரைத்தான் கேட்டேன்" என்றாள் நாணம் படர.

"தேவநாதன், ஜயா காட்டன் மில் மானேஜர்" என்று அவனிடமிருந்து வந்த பதிலைக் கேட்டதும் அவள் தலை சுழன்றது.

"உன் பெயர் தானே மகாலட்சுமி?" என்று குறும்பாகக் கேட்டான் தேவநாதன்.

"ஆம்!" என்று சொல்ல முயன்றாள். ஆனால் அவள் உதடுகள் ஒன்றுடன் ஒன்று ஒட்டிக் கொண்டன.

"மகாலட்சுமி! நேற்று என்னிடம் அவ்வளவு சகஜமாகப் பேசினாயே! இன்று ஏன் உன் செவ்வாய் குவிந்து விட்டது?"

"என் மோதிரத்தை நீங்கள் திருப்பித் தந்தால்தான் பேசுவேன்!" எப்படியோ மகாலட்சுமி வாய் திறந்து பேசி விட்டாள்.

"மாட்டேன்" என்றான் தேவநாதன், சற்றுக் கண்டிப்பாக.

"அப்படியானால் உங்கள் பவள மோதிரத்தை நானும் இலேசில் தந்துவிட மாட்டேன்" என்று தலையசைத்தாள் மகாலட்சுமி. முகத்தில் மலர்ந்த புன்னகையை மறைக்க முயன்றும் அவளால் முடியவில்லை. அவளுடைய அந்தப் புன்னகையில் தேவநாதன் முற்றும் மதிமயங்கியே விட்டான்."

அத்துடன் நிறுத்திக் கொண்டாள் மகாலட்சுமி. பின்னால் காலடிச் சத்தம் கேட்டுத் திரும்பிப் பார்த்தாள்.

"இந்தக் கதையில் கிடைக்கும் சன்மானத்தில் பாதி எனக்குத் தந்துவிட வேண்டும்" என்று சொல்லிக் கலகலவென்று சிரித்தான் தேவநாதன்.

**இந்தக் கதையில் வரும் காட்சியைத்தான் அட்டைப் படமாகச் சித்திரித்திருக்கிறார் ஓவியர் விஜயா**

AM 677




# அமிர்தாஞ்சனம்

## வலி உண்டாக்கும் உபாதையை ஆபத்தான நிலைவருமுன் போக்குகிறது




அமிர்தாஞ்சனம் வலியைப் போக்குவதோடு அல்லாமல் அதன் மூல காரணத்தையும் நீக்குகிறது. அது இரத்த நெருக்கத்தை அகற்றி சுலபமாக இரத்த ஓட்டத்தை மீண்டும் ஏற்படுத்த உதவுகிறது.

ஒவ்வொரு முறையும் சிறிதளவே அமிர்தாஞ்சனம் உபயோகிக்கவேண்டியிருப்பதால் ஒரு பாட்டில் நெடு நாள்வரை நீடிக்கிறது.




அமிர்தாஞ்சனம் லிமிடெட் மதறாஸ்-4, பம்பாய்-1, கல்கத்தா-7.

# நாட்டு வைத்தியம்

ஸ்ரீஹரி

## 125 காதுக்குச் சித்தர் அருளியவை

சொன்னதையே சொல்லிக்கொண்டிருந்தால் கேட்பவனுக்கே அலுப்புத் தட்டும். கேட்டதையே கேட்பதானால் கேட்பவனுக்குக் காது 'புளிக்கும்'.

புளிப்பு என்பது அறுசுவையில் ஒன்று. அது ரஸனேந்திரியத்துக்கு (நாக்குக்கு) விஷயமல்லவா? காது எப்படிப் புளிப்பை அறியும்?

காதுக்குச் சகிக்க முடியாத அனுபவத்தைக் கொடுக்கும் சத்தத்தைப் பற்றிச் சொல்லும்போது காது புளித்துப் போயிற்று என்பது வழக்கு.

'ஏண்டா முகத்தைச் சுளித்துக்கொள்கிறாய்? நான் சொல்வது பிடிக்கவில்லையா?' என்று கேட்கிறோம்.

முகத்தைச் சுளித்துக் கொள்வது எப்போது? முகமென்ன! கண்களைக் கெட்டியாக மூடிக்கொண்டு புருவங்களை சுருக்கிக் கொண்டு வாயைக் கோணிக் கொண்டு...இப்படியொரு நிலை ஏற்படுவது புளியைச் சுவைத்துப் பார்க்கும் போதுதான். பிடிக்காத விஷயத்தைக் கேட்கும்போது இவ்விதக் கோணல்கள்தான் முகத்தில் ஏற்படுவது. அப்போதுதான் காதைக் கெட்டியாகப் பொத்திக் கொள்வது. அதனால்தான் காது புளித்துப் போயிற்று என்று சொல்வது வழக்கில் வரலாயிற்று என்பது எனக்குத் தோன்றுகிறது.

எப்படியானாலும் சொன்னதையே இனியைப்போல் சொல்லிக் கொண்டிருப்பது சொல்பவர் கேட்பவர் இருவருக்குமே ரசிக்காத விஷயம். காது விஷயத்திலும்......

இதற்கு மாறாக இருக்காது என்பது மறுக்கத் தகாது.

ஆகவே பல்லவியைச் சிறிது மாற்ற வேணுமல்லவா? காது விஷயமாகத் தமிழில் உள்ள வைத்திய நூல்களிலிருந்து கிடைக்கும் விஷயங்களைத் தெரிவிக்கும் முறையில் இம் மாற்றத்தைக் கையாளலாமே!

அலரி என்று ஒரு செடி. இதன் பூவைத்தான் கஸ்தூரிப் பட்டைப் பூ என்று பூச்சரங்களில் வைத்துத் தொடுப்பது. இதில் வெள்ளை, மஞ்சள் என்ற இரு வகைப் புஷ்பங்கள் உண்டு. மஞ்சள் புஷ்பத்தின் இனத்தில் செவ்வலரி - குங்கும அலரி என்ற அவாந்தர பேதங்கள் உண்டு. புஷ்பங்களைப் பற்றிய பேதங்கள் எப்படி இருப்பினும் வைத்திய விஷயத்தைப் பற்றிய வரையில் அதிலும் இச் செடியின் வேரை உபயோகிப்பதில் எந்த அலரியானாலும் ஏற்கப்படுவது வழக்கம்.

(1) அலரியின் வேர்ப் பட்டையிட்டுக் காய்ச்சிய எண்ணெயில் 2 - 3 துளிகளைக் காதில் விட்டுப் பஞ்சினால் மூடினால் போதும்; காது வலி உடனே நிற்கும். காதிலிருந்து வழிந்தோடும் சீழ், ஜலம் முதலியவை நிற்கும். காதினுள் புண்ணே இருப்பினும் ஆறிவிடும்.

(2) இந்த எண்ணெயிலேயே சிறிது அபினியையும் இட்டுக் காய்ச்சியதானால் மேற்சொன்ன விதம் உபயோகிக்க அதிக நன்மையைத் தரும். விரைவிலும் குணம் ஏற்படும்.

(3) இருவாட்சி என்று ஒரு பூ. 'அட! இது தெரியாதா?' என்கிறீர்களா? இருவாட்சிப் பூவை அறிந்திருப்பீர்கள். ஆனால் அதிலிருந்து ஒரு எண்ணெயை எடுக்கிறார்கள் என்பதை அறிந்திருக்க மாட்டீர்கள். இந்த எண்ணெயில் ஒன்றிரண்டு துளி காதில் விடக் காதில் உண்டாகும் சீழ் - நீர் கசிவு இவை போவதுடன் அங்குள்ள நாற்றமும் ஒழியும்.

(4) இலைக்கள்ளியின் இலைச் சாற்றினால் மண்டைக்கரப்பான், கிரந்தி ஆகியவையும், அக்கரப்பானின் பரவலால் காதில் ஏற்படும் காது குத்தல், வலி, சீழ் வடிதல் ஆகியவையும் போகும். இலையை வாட்டிப் பிழிந்த சாற்றில் 2 - 3 துளிகளைச் சிறிது சூடுள்ளபோது உபயோகித்தல் வேண்டும்.

(5) திருநூற்றுப் பச்சை என்று ஒரு செடி. இதை ருத்ரஜடை என்று சிலரும் உருத்திரச்சடை என்று வேறு சிலரும் சொல்வர். இதன் இலையைப் பிழிந்த சாற்றில் 2 - 3 துளி விட்டால் காது வலி அல்லது 'திம்' என்று அடைத்து நிற்கும் நிலை ஆகியவை குணமாகும். 'ஆற்றில் குளித்தேன். கிணற்றில் முழுகினேன். அதிலிருந்து ஏற்பட்ட காதின் உபாதை' என்று சொல்லிக் கொண்டு வருவோருக்கு இதை உபயோகித்தால் ஒன்றிரண்டு வேளையிலேயே குணம் ஏற்படும்.



''கடைக்காரனுடன் பேரம் பேசிப் பத்து ரூபாய் சாமானை ஏழு ரூபாய்க்கு வாங்கினீர்களே, நீங்க ஒரு நாளும் பணம் கொடுக்கப் போவது கிடையாது. கடைக்காரன் ஏமாந்துதான் போகப்போகிறான். அதற்கு எதற்குப் பேரம் பேசினீர்கள்?''

''அடே! பணம் போனாலும் பத்து ரூபாய் இல்லே, ஏழு ரூபாய்தானே என்று கடைக்காரன் கொஞ்சம் மனசு சமாதானப்படுத்திக் கொள்வான் பார்! அதற்காகத்தான் பேரம் பேசினேன்!''

(6) ஊமத்தை இலையின் இரசத்தில் ஒன்றிரண்டு துளிகள் காதில் விடக் காதிலுள்ள வலி தீரும். காதிலுள்ள அழற்சி காரணமாகக் காதைச் சுற்றி இருக்கும் வீக்கம் முதலியவைகளில் வீக்கமுள்ள இடங்களில் மேற்பூச்சாகவும் இந்த ரஸத்தை உபயோகிக்கலாம். இதில் மேனுட்டு வைத்தியத்தினர் பெலடோனு என்று சொல்லும் மருந்திருப்பதால் வலி வீக்கங்களை இது தீர்க்குமென்பதில் சந்தேகமே ஏற்பட வேண்டாம்.

(7) கண்டங்கத்திரியின் பழத்தை ஜலத்தில் வேகவிட்டு வெந்தவைகளைக் கசக்கிப் பிழிந்து வடிகட்டி எடுத்த கஷாயம் 4 பங்கு. அத்துடன் சுரை வித்திலிருந்து எடுத்த எண்ணெய் ஒரு பங்கு சேர்த்துக் காய்ச்சவும். கடுகு திரள வரும் பாகத்தில் (மெழுகு பதத்தில்) இறக்கி வடிகட்டிய தைலத்தில் ஒன்றிரண்டு துளிகள் விட்டால் காது வலி தீரும்.

(8) கரிசலாங் கண்ணி என்பதைக் கையாந்தகரை என்பாருமுண்டு. இதில் மஞ்சள் நிறப் பூவுள்ள இனத்தைப் பொற்றலைக் கையாந்தகரை என்பர். இதன் இலைச் சாற்றில் 4 படி. நெல்லிக்காயின் சாறு 4 படி. . நல்லெண்ணெய் 1½படி. இவற்றுடன் அதிமதுரம் 2 பலத்தைக் கல்க்கமாக அரைத்துச் சேர்த்துக் காய்ச்சிய தைலத்தைத் தலை முழுக்குக்கு உபயோகிப்போருக்குக் காது வலி வராது. பிருங்காமலக தைலத்திலிருந்து இது அதிகம் வித்தியாசப் பட்டதல்ல. பிருங்காமலக தைலத்தில் பொற்றலைக் கையாந்தகரையின் சாறுதான் வேணுமென்று விதிக்கவில்லை. மேலும் அதில் பால் சேர்க்க வேணுமென்பது அதிகப் படி. அவ்வளவுதான்.

(9) பொற்றலைக் கையாந்தகரையின் இரசத்தை மட்டும் சில துளிகள் காதில் விட்டாலும் போதும். காது வலி தீர்ந்து விடும்.

(10) வேலை என்பது ஒரு குத்துச் செடி. இதில் நல்ல வேலை, நாய்வேலை என்று இரண்டு இனமுண்டு. இவை வெளுப்பும் கறுப்பும் ஆகும். பூனையின் அடிச்சுவடு போலிருக்கும் இதன் இலை. ஆகவே இதைப் புலிச்சுவடி என்பாருமுண்டு. காட்டுக்கடுகு என்று வேறு சிலர் அழைப்பர். இதன் இலையை வெந்நீர் விட்டுக் கசக்கிப் பிழிந்த ரசத்தில் 2 - 3 துளிகள் காதில் விடக் காது வலி, குத்தல், காதிலிருந்து வழியும் சீழ் ஆகியவை குணமாகும்.

(11) இதன் இலையின் இரசத்துடன் சம எடை எள்ளெண்ணெயும் சேர்த்துக் காய்ச்சியதையும் பூதிகர்ணம் என்னும் (காதில் ஒழுகு சீழ்) வியாதியில் காதுகளில் 2 - 3 துளி வீதம் விட்டு வந்தால் குணமாகும்.

இதுவரையில் சொல்லிவந்த கர்ண ரோகங்களில் எதுவானாலும் சரி. அதை உடனே சிகிச்சிக்காமல் உபேட்சை செய்தாலும் அல்லது சரிவரச் சிகிச்சிக்காவிட்டாலும் கர்ணநாதம் என்ற நோய் உண்டாவதற்கு வழி கோலியதாகும். அந்நிலையிலாவது இதைத் திறம்படச் சிகிச்சித்தல் வேணும். கர்ணநாதத்தையும் திறமையுடன் சிகிச்சிக்காமல் விடுவதால் பாதிர்யம் - செவிடு என்னும் நிலை வந்து விடும்.

இப்படி நெடுநாளைய உபேக்ஷை காரணமாக வந்துற்ற செவிட்டுக்குச் சிகிச்சை செய்வதும் அதைக் குணப் படுத்துவதும் சாத்தியமில்லை.

பிறவி முதல் செவிடு. கர்ண ரோகத்தை உபேக்ஷிப்பதால் வந்துற்ற செவிடு ஆகியவை அசாத்தியம் என்பது சாஸ்திரம். அனுபவமும் அதுவே.

காது நோயை உபேக்ஷியாமலுள்ளவரிலும், வேறு காரணங்களால் கர்ணநாதமென்னும் ரோகம் உண்டாகலாம். அதைச் சிகிச்சை செய்வது அதிக கஷ்டமில்லை. ஆனால் அதையும் உபேக்ஷிப்பதால் செவிடு ஏற்பட்டாலோ...சிகிச்சை செய்து குணப்படுத்துவது முடியாது.

கர்ணநாதமென்றால் என்னவென்று கேட்கிறீர்களா?

ஈறுகளை உறுதியுடனும்
பற்களை ஆரோக்கியத்துடனும்
சுவாசத்தை நறுமணத்துடனும்

# இருக்கும்படி பார்த்துக்கொள்ளுங்கள்

**பளிச்சென்று ஒளிவீசும் வெண்மையும்**
**ஆரோக்கியமுமான பல் வரிசைகளை**
**அடைய வேண்டுமானால்**

# போர்ஹான்ஸ்

**பற்பசையை உபயோகியுங்கள்**




ஈறுகளின் உறுதிக்காக என்றே டாக்டர் ஆர். ஜே. போர்ஹான்ஸ் கண்டுபிடித்து அளிக்கும் விசேஷத் துவர்ப்புப் பொருள் கலந்துள்ள பற்பசை இது ஒன்றுதான்.

Geoffrey Manners & Co. Private Ltd.

TAM. S.27

---



நாள் முழுவதும்
தூய்மையுடன் விளங்க
பாம்பியா லோஷனை
உபயோகியுங்கள்

தொடக்கத்திலிருந்தே பிரஞ்சு முறையில் அதற்கேற்ற தனிப்பட்ட வாசனையுடன் தயாரிக்கப்பட்டுள்ளது. உலக முழுவதும் லக்ஷக்கணக்கானவர்களால், எல்லாக் காலங்களிலும், விசேஷ தினங்களிலும் உபயோகிக்கப்படுகிறது.




POMPEÏA LOTION
keeps you cool & refreshed

வியாபார விவரங்களுக்கு:
இன்டர்நேஷனல் ப்ரேக்ரன்ஸ் பிரைவேட் லிட். கலீனா, சாந்தா க்ரூஸ் (கிழக்குப் பக்கம்) பம்பாய்-25
இவர்களுக்குத் தயவுசெய்து எழுதிக் கேளுங்கள்.

---

# எச்சரிக்கை!



## உங்கள் குழந்தையின் இன்றைய ஜலதோஷம் நாளை ப்ளூ பிராங்கைடிஸ் அல்லது நிமோனியாவாக மாறலாம்

கடும் வியாதி ஆரம்பமாகு முன்னரே உங்கள் குழந்தையின் சளி உபாதைகளை ஒழித்துக் கட்டுங்கள். ஜலதோஷங்களுக்கென்றே விசேஷமாக தயாரிக்கப்பெற்ற இந்த சக்திவாய்ந்த மருந்தைத் தடவுங்கள்.

உங்கள் குழந்தையின் ஆரோக்கியத்தை விளைப்பரீட்சை செய்யாதீர்கள். ஜலதோஷத்தின் அறிகுறிகள் — தும்மல், ஒழுகும் மூக்கு அல்லது தொண்டை உபாதை — தோன்றின உடனே விக்ஸ் வேப்போரப்பை அவனது மார்பிலும், தொண்டையிலும், முதுகிலும் தேயுங்கள். உங்கள சிறுவன் நிம்மதியாக இரவு முழுவதும் தூங்கும் பொழுதே, இந்த நிருபணமான மருந்து சளி உபாதைகளை விரட்டியடிக்கிறது. மறுநாட் காலையில் அவன் ஜலதோஷம் நீங்கி சுகம் பெறுகிறன்.

**விக்ஸ் வேப்போரப் ஜலதோஷத்தை சீக்கிரம் போக்குகிறது . . . 2 விதங்களில்**

**1** மூக்கின் வழியே வேலை செய்கிறது.



விக்ஸ்வேப்போரப் வெளியிடும் சக்தி வாய்ந்த ஔஷத ஆவிகளை. மூக்கிலும் தொண்டையிலும் உள்ள சளியையும் வலியையும் நீக்க, உங்கள் குழந்தை சுவாசிக்கிறன்.

**2** சருமத்தின் மூலமாக வேலை செய்கிறது.



விக்ஸ்வேப்போரப்பின் நிம்மதி தரும் உஷ்ணம் உங்கள் குழந்தையின் மார்பகத்தில் அடைப்பை உடைத்தெறிந்து உங்கள் சிறுவன் துரிதமாக குணமடைகிறன்

புதிய பச்சை டப்பி




பெரிய நீல ஜாடி




# விக்ஸ் வேப்போரப்

மார்பிலும், தொண்டையிலும் முதுகிலும் தேயுங்கள். எல்லோருக்கும் நல்லது.

VR. 5

# தமிழ் கூறும் நல்லுலகம்

சிப்போலை அடுத்துள்ள செங்காட் எஸ்டேட்டில் சென்ற மாதம் ஸ்ரீ ராமர் விழா மிகச் சிறப்புடன் கொண்டாடப்பட்டது. விழாவையொட்டி வீரபாண்டியக் கட்டபொம்மன் நாடகமும் நடந்தது. பேரா மாகாண தகவல் இலாகா உதவி அதிகாரி திரு வி. டி. பிச்சைப் பிள்ளை அவர்கள் இந் நாடகத்துக்கு வந்திருந்தார்.

இந் நாடகத்தில் தோட்டத்தில் வதியும் தொழிலாள வாலிபர்களும் மாணவ மாணவிகளும் பாத்திரமேற்றுத் தத்தம் பாகத்தைச் சிறப்புடனும் வீரத்துடனும் நடித்தனர்.

★

பம்பாய் கல்யாணில் உள்ள ஐடியல் டிராமாடிக் குழுவினர் தங்களது நான்காவது வருடாந்திர தினக் கொண்டாட்டத்தை பிலிம் டிவிஷன் திரு கிருஷ்ணமூர்த்தி அவர்கள் தலைமையில் அக்டோபர் மாதம் 4-ந் தேதியன்று விமரிசையாகக் கொண்டாடினர். திரு கிருஷ்ணமூர்த்தி நாடகக் கலை வளர்ச்சி பற்றி விரிவுரை நிகழ்த்தினர். நெல்லை ஆறுமுகம் குழுவினர் இசை விருந்தளித்தனர்.

★

பூனா அமெச்சூர் நாடகக் குழுவினர் "சாக்ரடீஸ்" என்னும் நாடகத்தை அக்டோபர் 17, 18 தேதிகளில் கர்னல் ஆர். ஜி. நாயுடு அவர்கள் முன்னிலையில் வெகு சிறப்பாக நடத்தினர். திரு எஸ். ஏ. அந்தோணிதாஸ் சாக்ரடீஸாக நடித்தார். இந் நாடகத்தில் பங்குகொண்ட அனைவரும் சபையோரின் பாராட்டுதலைப் பெற்றனர்கள்.

★

பம்பாய் தென்னிந்திய ஆதி-திராவிட மகாஜன சங்கத்தின் மாதாந்திர செயற்குழு கூட்டம் கூட்டுத் துணைப் பொதுச் செயலாளர் திரு அமலன் அவர்கள் தலைமையில் சங்கப் பணி மனையில் சிறப்பாக நடந்தேறியது.

★

தென்னிந்திய சங்கத்தின் ஆதரவில் அக்டோபர் 16, 17, 18 தேதிகளில் மாதுங்கா நாடகக் குழுவினர் வெகு விமரிசையாக 'இதுவே சொர்க்கம்', 'துப்பறியும் சாம்பு', 'பிரஸிடெண்ட் பஞ்சாட்சரம்' ஆகிய மூன்று நாடகங்களை நடித்தனர். திறம்பட நடித்த அமெச்சூர் நாடகக் குழுவினரைப் பாராட்டித் தென்னிந்திய சங்கத்தார் ஒரு வாழ்த்துப் பத்திரம் அளித்துக் கௌரவித்தனர்.

★

பினாங்கு ஈ. அண்டு ஓ. ஹோட்டலில் மலாயாப் பிரதமர் துங்கு அப்துல் ரஹ்மான் அவர்களுக்கு ஸ்தல இந்தியர் சங்கத்தினர் அக்டோபர் நாலாந் தேதி விருந்தளித்துக் கௌரவித்தனர். இந்த வைபவத்தில் குமாரி இந்திரா பரத நாட்டியமாடினர். விருந்துக்கு இந்திய ஹைகமிஷனர் பானர்ஜி! உள்படப் பல பிரமுகர்கள் வந்திருந்து சிறப்பித்தனர்.

# சிரிக்காதே!

### காலதாமதம்!

"கூண்டில் இருக்கும் கைதி உங்களை, 'ஏ' கழுதை என்று வந்தவுடன் திட்டினரா?"

"இல்லை சார்! வந்தவுடன் கொஞ்ச நேரம் என்னை உற்றுக் கவனித்துக் கொண்டே இருந்து விட்டுத்தான் 'ஏ! கழுதை!'" என்றான்.

### விஷயக்ஞன்!

"டேய்! 'இஸ்திரி' போடத் தெரியுமா உனக்கு!"

"ஓ! தெரியுங்க!"

"சரி! இஸ்திரிப் பெட்டி ரொம்பச் சூடாக இருக்கிறது என்பது உனக்கு எப்படித் தெரியும்?"

"போடும்போது துணி கருகிப் போனால் சூடாக இருக்கிறதென்று சுலபமாகச் சொல்லி விடலாமுங்களே!"

"சரி! அது போதும்! போய்த் துணி எல்லாம் இஸ்திரி போடு!"

### பில் விழுங்கி!

"நான் கொடைக்கானலில் இருந்த போது ஒரு காலணா டாக்டர் பில் கொடுக்கவில்லை!"

"ஆமாம்! ஆமாம்! டாக்டர் என்னிடம் சொல்லி ரொம்ப வருத்தப்பட்டுக் கொண்டார். கொடுத்து விடுங்கள்!"

### கருணை உள்ளம்!

"இனிமேல் உங்கள் மனைவி வேலை செய்யக் கூடாது. படுத்தபடியே இருக்க வேண்டும்!"

"சபாஷ்! உடனே போய் அவளிடம் சொல்லுகிறேன். இந்தச் செய்தி அவளுக்கு மகிழ்ச்சியை ஊட்டும்!"

### சரியான கேள்வி!

"நீ என்னை மணந்து கொள்ளாவிட்டால் பிறகு ஆயுசு முழுவதும் வேறு ஒரு பெண்ணைக் காதலிக்க மாட்டேன்!"

"மணந்து கொண்டால்...?"

### யாரோ இவர்?

டிக்கட் பரிசோதகர்: (தலைமறைந்த ஆளைப் பார்த்து) டிக்கட்டை எடப்பா....

தலைமறைந்த ஆள்: நான் பிச்சைக்காரனுங்க... அடுத்த ஊரில் என் மகளுக்குக் கல்யாணமுங்க... தயவு பண்ணுங்க...

டிக்கட் பரிசோதகர் பரிதாபம் மேலிட்டவராய்க் கொஞ்சம் நகர்ந்தார். வாலிபன் ஒருவன் பெட்டிக்கடியில் ஒளிந்திருப்பதைப் பார்த்து அவனையும் டிக்கட் கேட்டார். தலையைச் சொறிந்துகொண்டே, "நான்தானுங்க அந்த மாப்பிள்ளை...." என்று சொன்னான் அவன்.

### யாருக்குத் தேவை?

டாக்டர்: உங்கள் கணவருக்குப் பூரண அமைதி தேவை. இந்தாருங்கள் தூக்க மருந்து.

நோயாளியின் மனைவி: சாப்பிட்ட பிறகு கொடுக்கலாமா?

டாக்டர்: அவருக்கு இல்லையம்மா, அது உங்களுக்குத்தான்.




'சிவோகம்!' என்ற குரல் கேட்டால் வாசலில் நிழல் தட்டும். வெளியில் வந்து பார்த்தால் நிழலை விரட்டிக் கொண்டு அந்த உருவம் வாசல் திண்ணைக்கு விரைந்து வருவது நன்றாகத் தெரியும்.

''வாருங்கள், செண்டு மாமா!'' அடுத்தபடி ஓர் ஆனந்தக் குரல் கேட்கும். தேன்கலந்து கடைந்தாற் போல் ஒலிக்கும் அந்தக் குரல் ஆனந்தவல்லியி னுடையது. வரவேற்புக்கு அங்கீகாரமாக மீண்டும் ஒரு 'சிவோகம்' பிறக்கும். அந்தச் செண்டுவின் திருவாயிலிருந்து.

வாசல் திண்ணையுடன் ஐக்கியமாகிவிடுபவர் அவர். நீள நெடுக இருந்த திண்ணையின் கோடியில் குகை இருளைக் காட்டிக்கொண்டு ஒரு சிறிய அறை இருந்தது. செண்டு வெளியில் போகு முன்பும் வெளியிலிருந்து வந்த பின்பும் அந்த அறைக்குள் நுழைந்து ஏதோ எடுப்பார், வைப்பார். அந்த அறைக்குள் ஒளியில்லை, கலையில்லை; ஆனால் அவரது உயிரே அங்கு தான் இருந்தாற் போலிருந்தது. அவருக்கு வீடென்றும் பேரென்றும் கிடையாது. ஆனால் பேரென்றிருந்த 'நாகலிங்கம்' எனும் ஆறு எழுத்துக்களும் 'செண்டு' என்ற மூன்று எழுத்துக்களில் ஒளித்து மறைந்து விட்டன. அந்த வீட்டில், அந்தத் திண்ணையில்தான் சரண் புகுந்திருந்தார் அவர். ஒரு வேளைப் பகல் சோற்றை ஆனந்தவல்லிதான் சில காலமாகப் போட்டுக்கொண்டு வந்தாள். 'சிவோகம்' என்ற குரல் கேட்கக் காத்துக் கொண்டிருப்பாள் அவள். அது கேட்டதும் அவள் கடமையைத் தொடங்குவாள்.

அன்று 'சிவோகம்' என்று வாசலில் குரல் கேட்டபோது நிழல் தட்டவில்லை. இருளில் தட்டித் தடவிக் கொண்டு திண்ணையில் ஏறப் போனார் செண்டு. சின்னத் திண்ணைப் பக்கமாகக் கனைப்புச் சத்தம்கேட்டு அவர் திரும்பிப் பார்த்தார். நடையிலிருந்து வந்த சிறு விளக் கொளியின் கலப்பினால் இருள் அந்த இடத்தில் மட்டும் சாம்பல் நிறத்தில் குழம்பிக்கொண்டிருந்தது. சின்னத் திண்ணையில் யாரோ...

''யாரது?'' விறைப்பாக இருந்தது செண்டுவின் கேள்வி. 'சிவோகம்' உச்சரிக்கும் நாவின் மென்மைக்கும் இந்தக் கடுமைக்கும் ஒற்றுமை காண முடியாது.

''நான்தான்—''

''நான் தானாவது. இடுப்பொடிஞ்சானாவது!''

''சொல்ல வருவதற்குள் அவசரப்பட்டால்? எப்படிச் சொல்லிப் புரிய வைக்கலாம் என்று யோசித்தேன். இரட்டைத் தெருவிலே பூவோகம் என்று ஒருவர் இருந்தாரே, அவர் மகன் நான்.''

''சிவோகம்! புரியுது, புரியுது! சண்டைக்குப் போனியே அவன்தானேடா நீ?''

''ஆமாம்.''

''பேரு...''

''சேது!''

''ஆமாண்டா, ஆமாண்டா! இப்ப நினைப்பு வந்தது. அது சரி! சண்டைக்குப் போனவனெல்லாம் சண்டாளப் பயல்களுக்குச் சமம்டா. உங்க பரம்பரை சைவமாச்சே. நீ அசைவமாகி, போன இடத்திலே அதையும் இதையும் வாங்கித் தின்னு...''

''அப்படி யெல்லாம் கண்டதைக் கேட்டதைத்தின்னு நான் கெட்டுப் போகலிங்க.''



# கைவோர் ருளர்

''அட ஒரு சிக ரெட் பிடியுமாச்சு மாடா குடிச்சிருக்க மாட்டே?''

''குடிச்சதில்லீங்க.''

'கெடலேன்னு சரிதான். எனக்கென் னடா வந்தது? கெடலேன்னு உங்க பரம்பரை பிழைக்கும். ஆமா, நீ என்ன இப்ப லீவு கீவு வாங்கியாந்தியா, சண்டையை உட்டுட்டு ஓடியாந்துட்டியா? திடீர்னு வந் திருக்கியே.''

' லீவிலேதான் வந்திருக்கேன், ஐயா! 'வார் லீவு'ன்னு மூணு மாசம் கொடுக்கிறாங்க.''

'' இப்படி உங்களுக்கெல்லாம் லீவு கொடுக் கிறதுக்குத்தான் சண்டையை நீட்டிக்கிட்டே போறாறுவளா? எப்போ முடியுமாம்டா சண்டை?''

''திட்டமா ஒண்ணும் சொல்ல முடியாது, ஐயா!''

''ஏன்டா, மகாபாரத யுத்தத்தை விடவா உங்க சண்டை ஒசத்தி, பதினெட்டு நாளிலே ஊதிப்புட்டாங்களேடா, ஊதி!''

ஒரு இளஞ்சிரிப்பைச் சிறு சத்தத்துடன் பரவ விட்டான் சின்னத் தண்ணே ஆசாமி சேது. சின்டு இதற்குள் பெரிய திண்ணையில் தாவி ஏறி, குகை இருள் அறையில் எதையோ வைக்கவோ, எடுக்கவோ போய்விட்டார்!

சேது வானவெளியை நோக்கினான். பிசிரற்ற நீலத் திரையை இழுத்துக் கட்டி யிருந்தாற் போலிருந்தது. நிலா அப்போது தான் பிறந்து கொண் டிருந்தது. அந்தச் சோபன நேரத்தைக் கொண்டாடக் கூடிப் பெருகிக் கொண்டிருந்தன நட்சத்திரங்கள்: இன்று போல் வானத்தையும், மதியையும், நட்சத்திரங்களையும் ரசித்துப் பார்க்க நிமிர் வதற்குப் பொழுது இல்லாதவனாகவே இருந் திருக்கிறான் அவன். சண்டைக்களத்தின் சூழ் நிலையில் அழகாவது ரஸனையாவது!

'சிவோகம்!' என்ற குரல் கேட்டுத் திரும்பி னான் சேது. சின்டு திண்ணையின் முகப்பில் வந்து உட்கார்ந்து கொண்டார்.

''உங்க குடும்பங்கூட இப்போ ரெட்டைத் தெருவிலே இல்லே போலிருக்கே. வெளியூருக்கு எங்கேயோ போயிட்டாங்க போல் இருக் கேடா, புள்ளேயாண்டானே!''

**வை. சுப்ரமணியன்**



# வீட்டு வைத்தியம்



**கணவன் சொல்கிறான்**

ஆபீசுக்குக் கிளம்பி ஐந்தே நிமிடங்களில் நான் திரும்பி வந்ததும் என் மனைவியின் முகத்தில் கேள்விக்குறி எழும்பியது. எதை மறந்துவிட்டேன், பர்ஸையா? பவுண்டன் பேனாவையா? . . . அல்லது திடீரென உடம்புக்கு ஏதேனும் . ?

"ஒன்றுமில்லை, என் சட்டைக்குத்தான் உடம்பு!" என்று கூறி முதுகுப்புறத்தைக் காண்பித்தேன் எடை காட்டும் கருவியிலுள்ளது போல பத்து நயா பைசா நுழையும் அளவுக்கு ஒரு கிழிசல்! உடுத்தியபோது என் கண்ணில் படாத இந்தக் கிழிசல், பஸ் ஸ்டாண்டில் என் நண்பனின் கண்ணில் பட்டது. பெட்டியிலுள்ள மற்ற சட்டைகளுக்கோ காலர்களில் கோளாறு!

"ஒரே நிமிஷம் சரிசெய்துவிடுகிறேன். போய்விடலாம் ஆபீசுக்கு" என்று ஊசி நூலை எடுத்தாள் மனைவி.

"வேண்டாம். சீக்கு என்று லீவுக் கடுதாசு அனுப்பிவிட்டேன் ஆபீசு சிநேகிதன் மூலமா. இன்னைக்கி ஹாய்யாக இருக்கலாம்" என்றேன்.

ஆனால், 'ஹாய்'யாக என்றால் . . . ? நல்ல துணிகளெல்லாம் இன்னும் அழுக்கு மூட்டையில் ஐக்கியமாகியிருக்கையில், ஒரு பார்க்கோ, மரீனாவோ, சினிமாவோ போகமுடியுமா? பகல் தூக்கம் ஒன்றுதான் முடியும்!

கண்ணை மூட முயன்ற சமயத்தில் வாசற்புறம் பேச்சுக் குரல் ஒலித்தது: "உன் கணவருக்கு என்ன உடம்பு?"—இக் குரல் என் மனைவியின் சிநேகிதியான டாக்டர் கண்ணம்மாவினுடையது.

"தலைவலியும் கதகதப்பும்" என்றாள் என் மனைவி. எனக்குப் பகீரென்றது. டாக்டரம்மா என் உடம்பைப் பரிசோதிக்க வந்துவிடவே, "என் உடம்புக்கு ஒன்றுமில்லை என் சட்டைக்குத்தான் உடம்பு . . ." என்று குழறினேன் கண்ணம்மா புன்னகை புரிந்தாள். நிலைமையை சமாளித்துக்கொண்டு அவளை முன்கட்டுக்கு அழைத்துச் சென்றாள் என் மனைவி.

எனக்கும் தூக்கம் கண்ணைச் சுழற்றியது. அப்புறம் என் மனைவி காப்பி சகிதம் என்னை எழுப்பியபோது மணி நான்கு இருக்கும். ஊஞ்சல் பலகை மீது பளிச்சென்று வீற்றிருந்த ஒரு துணி வரிசை என் கண்களைக் கூச வைத்தது. "சலவையாகி வந்துவிட்டதா" என்று கேட்டேன்.

S/P. 4A-30 TM

"ஆமாம்! பருத்தியூருக்குப் போயிருக்காங்க. ராத்திரியிலே அந்த வழியிலே போக முடியாதுன்னுதான் விடிஞ்சு போகலாம்னு இங்கே வந்தேன். அருட்பா சாமி வீட்டிலே தங்க முடியாமே வேறே எங்கே தங்க முடியும்?"

"அருட்பா சாமி சிவபதமடைந்துவிட்டார். தெரியுமில்லே!"

"லெட்டர்லே ஒரு தபா எழுதியிருந்தாங்க எங்க அம்மா. அதைப்பத்தி ஒரு வார்த்தை அவர் மகள்கிட்டே கேட்கத் தோன்றலில்லே எனக்கு. வந்ததும் அடையாளம் கண்டு க்ஷேமம் விசாரிச்சுது அது."

"எது?" என்று வேகமாய்ச் சுழன்றபடி சிண்டு அவன் முகத்துக்கு நேருக்கு நேராக உட்கார்ந்து கொண்டார். குன்றின் மேல் ஒரு சிறு பாறை இருகிக்கொண்டு உட்கார்ந்தாற்போல் இருந்தது சேதுவுக்கு. பாறைமேல் பாறைகளை அவன் தன் யுத்தத்தின் நடமெங்கும் விசித்திர விசித்திரமாகக் கண்டிருப்பவன் அல்லவா?

"அருட்பா சாமியின் மகள் ஆனந்தவல்லி தானே அதன் பேர்?... வந்ததும் நேராக இங்கேதான் வந்தேன். முதல்லே அதுக்குத் தெரியலே. சிப்பாய் வேஷத்தைக் கண்டு பயந்துகூடப் போயிருக்குமோ. என்னமோ! என்னை ஞாபகப்படுத்தினதும் நல்லாப் புரிஞ்சு கொண்டு வெகுவா உபசாரம் பண்ணிச்சுங்க. சாப்பிடணும்னு புடிவாதம் புடிச்சுது. நான் பஸ்ஸை விட்டு இறங்கினதுமே ரோட்டுக் கிளப்பிலே வசமாச் சாப்பிட்டுட்டேன். அரிசிச் சோத்தைக் காணப் போறமான்னு தூக்குச் செத்துக் கிடந்தேன்! ஒரு லோட்டா பாலாச்சும் காய்ச்சித் தரேன்னிச்சு, ஆனந்தவல்லி. திமிரச் சாப்பிட்டு விட்டதிலே தண்ணிகூட இறங்கலே எனக்கு—"

கணையை நெஞ்சில் கொடுத்தாற்போல் 'ஏய்' என்று ஓர் அதட்டல் போட்டார் சிண்டு. பேச்சை நிறுத்தினான் சேது.

"அப்பாகிப்பான்னு சொல்லி அதுகிட்டே போய் வாயைக் கிளறி வைக்காதேடா. நீ வந்த சோலியைப் பார்த்துக்கிட்டுப் போய்ச் சேரு. ராத்திரிக்கி இந்தத் திண்ணையிலே முடங்கிக் கிடந்துக்கிட்டு விடியுமுன்னே எழுந்திருச்சி உன் சுரைக்காய்ப் பையை எடுத்துக்கிட்டு நட. அதைப் பார்க்கக் கூடாது. பேசக் கூடாது. முடிஞ்சு வெச்சுக் கடா! அதும் அப்பாரு காலமாகி மூணு வருஷம் ஆகியும் அதும் துக்கம் தீரல்லே. அப்பான்னு யாரு அதும் காதிலே போட்டு விட்டால் போச்சு. பிரளயம்தான். நானுக் கொண்டு மெல்ல மெல்ல அதும் துக்கத்தை ஆத்தி வர்றேன். அருட்பாசாமி இருக்கும் போதே எனக்குச் சம்பந்தம் இந்தத் திண்ணையோட சரி. அவருக்கப்புறம் நாயமா இந்த வீட்டையே மிதிக்க வேண்டாத நான் அந்தப் பெண்ணுலே இந்த வீட்டோடே இன்னும் அதிகச் சம்பந்தம் வைக்க வேண்டியிருக்கு. அதுக்கு ஒரு கல்யாணம் பண்ணி வைக்கிற பாரத்தை என் கிட்டே தூக்கி எறிஞ்சிட்டுப் போயிட்டாரு அருட்பாசாமி!"

ஒரு கொட்டாவி விட்டுக் கொண்டே தூணில் மெல்ல உடம்பைச் சாய்த்துக் கொண்டு படுத்தார் சிண்டு.

சேதுவுக்கு வந்த தூக்கமும் போய்விட்டது: வானத்தை விரும்பிப் பார்த்த அவ[illegible]ர்வை இப்போது வெறித்துப் பார்க்கும் [illegible]க்கிப் பார்வையாகி விட்டது. பேரொளியைச் சிற்றொளி சூழ்ந்து வானத்தில் புரிவிக்கும் மாயா ஜாலங்களைப் பார்த்து ரசிக்கிற மனநிலை இப்போது அவனிடம் இல்லை. தன் பேச்சை அடக்கப் பார்த்தாரா அந்தச் சிண்டு சாமி, அல்லது தன் இதயத் துடிப்பையே அடக்கிவிடப் பார்த்தாரா என்ற சந்தேகத்தில் இறங்கியது அவன் மனம்.

* * *

பொழுது விடிந்து கொண்டிருந்தது. இருள் தனது ஆட்சிக்குப் பிறகு கழித்துச் சென்றிருந்த சக்தியற்ற கருமையும், உதயம் விரவித் தெளித்துக் கொண்டு வந்த ஒளியின் வெண்மையும் கலந்து ஒரு வெண் புகை நிறத்தைச் சிருஷ்டித்துக் கொண்டிருந்தன. பரந்து சூழப் போகும் தூய வெண்மையை நிர்ணயித்துக் காட்டும் வண்ணம் வீட்டு வாசலில் கோலம் விளங்கிக் கொண்டிருந்தது. கோலமா! 'மொழுக்'கென்றிருந்த தரையின் மேல் முத்துக்கள் உருளாமல் நிற்கச் செய்த அரிய சாதனையின் சின்னமல்லவா அது!

ஆனந்தவல்லிதான் கோலம் இட்டிருந்தாள். இட்ட கோலத்தின் அமைப்பைப் பார்த்து ரசித்தபடி வீட்டுக்குள் திரும்ப அடி எடுத்து வைத்தபோது 'சிவோகம்' என்றபடி சிண்டு துயில் எழுந்தார்.

"நமஸ்காரம் செய்கிறேன், மாமா!"

சொல்லிக் கொண்டே விழுந்து வணங்கி விட்டுச் சின்னத் திண்ணையைப் பார்த்த வண்ணம், "விருந்தாளி வந்திருந்ததே. எங்கே மாமா காணோம்?" என்று கேட்டாள் ஆனந்தவல்லி.

"யார் மூஞ்சியிலேயும் முழிக்கிறதுக்கு முந்தி இதை விட்டுப் போயிடணும்னு நான் நேத்து ராவே கறாரா உத்தரவு போட்டு விட்டேனம்மா அவனுக்கு."

"ஏன் மாமா?"

"அது ஒரு கழிசடை!"

"பூலோகம் மாமா மகனுங்க அவர்."

"தெரியும். அவர் பேரைச் சொல்கிற நாக்காலே இவன் பேரைச் சொல்லக் கூடாது. இந்த வீட்டுப் படியை மிதிக்க அவனுக்கு யோக்கியதை கிடையாது. சண்டையிலே சேர்ந்து அசைவமாகிட்டானும். பெருமையாச் சொல்லிக்கிறான்."

அளப்பது யாரென்று ஆனந்தவல்லிக்குத் தெரியாது. அலைவட்டங்களுக்கு அடியில் சென்று ஆழும் கல்லைப்போல் அவள் தன் எல்லைக்குள் எப்போதுமே இருப்பவள். நேற்றையச் சம்பாஷணையை அவள் கேட்டிருந்தாள்...

ஆனால், அவள் அடிக்கடி கேட்பது 'சிவோகம்' என்ற ஒரு வார்த்தைதான். 'சிண்டு'வுக்குப் பின் மறைந்து விட்ட நாகலிங்கம் ஒரு காலத்தில் சிண்டு முடிந்து விடுவதில் தேர்ச்சி பெற்றிருந்ததனால் அவருக்கு இந்தப் பெயரே நிலைத்து விட்டது. நிலைமை முற்றி, அவர் ஊரை விட்டு ஒருநாள் ஓடும்படி ஏற்பட்டது. பல வருஷங்களுக்குப் பிறகு அவர் திரும்ப அந்த ஊருக்கு வந்தபோது

நேரே அருட்பாசாமியின் வீட்டுக்குத்தான் வந்தார். வரும்போது அவரது திருவாய் 'சிவோகம்' என்று உச்சரித்ததைக் கண்டு மலைத்தார் அருட்பாசாமி. 'சிவோக'த்துக்கும் சிண்டுவுக்கும் பரசிவத் தன்மையின் அடிப்படையில் ஒற்றுமை இல்லையென்பதையும் கண்டு கொண்டார்.

• • •

அருட்பாசாமி வாழ்ந்த காலத்தில் அமோகமாகத்தான் வாழ்ந்தார். சிவப் பித்தராயிருந்த வள்ளலார் இவரை ஒரு பித்தராக ஆக்கியிருந்தார். அடிகளின் 'மகாதேவ மாலை'யைத் தினமும் ஒரு முறை பாராயணம் செய்யத் தொடங்குகையில்தான் அன்றையப் பொழுதுக்குத் தம் உயிர்ப் பிச்சைக்குரிய முதல் மூச்சு தம்மிடம் தொடங்குகிறது என்ற அதீத நம்பிக்கை உடையவர் அவர்.

கடல் போன்ற வீட்டைப் படைத்திருந்தார் அருட்பாசாமி. கடலில் கப்பல் போன்ற மனத்தையும் படைத்திருந்தார். மூன் தலைமுறைச் சொத்துக்களின் ஒரு பெரும் பகுதி அவரையும் வளர்த்து, அவர் கருணையையும் வளர்த்துக் கொண்டிருந்தது. படித்தவர்கள், படிக்காதவர்கள், உள்ளூர்க்காரர்கள், வெளியூர்க்காரர்கள், தெரிந்தவர்கள், தெரியாதவர்கள் எல்லோரும் அவர் வீட்டில் தங்குவது, சாப்பிடுவது என்ற பழக்கங்கள் இரண்டு தலைமுறைகளுக்கு முந்தி ஏற்பட்டு இன்றும் நடைபெறுவன.

அவருக்கு அருட்பாவை அடுத்து வாழ்க்கையில் உற்சாகம் ஏற்படுத்திக் கொண்டிருந்த இன்னொரு அம்சம், கோயில் தொண்டு. கடல் போன்ற வீட்டின் மூன்று புறங்களிலும் நந்தவனம் வைத்துப் பூக்கடல் விரித்திருந்தார். நந்தவனம் முழுதிலுமுள்ள புஷ்பங்களையெல்லாம் தம் கையாலேயே சேகரித்து, மாலைகள் தொடுத்துக் கோயிலுக்குக் கொண்டுபோய்க் கொடுப்பார். இடைவிடாத இந்தத் தொண்டினிடையே அவர் மூச்சு ஒவ்வொன்றும் பூமணத்துடன் கலந்ததாகவே இருக்கும். அவர் புகழ் மணத்தது போல் அவரது நந்தவனத்தின் பூமணம் ஊரைச் சுற்றி வளைத்து மணக்க வைத்தபடி இருக்கும்.

பூவினிடத்தில் மணம் கமழ்ந்து கொண்டிருப்பது போல் அருமை மகள் ஆனந்தவல்லியிடம் அவருக்குப் பாசம் சுற்றிக் கொண்டிருந்தது. அவளுக்கு ஒரு குறைவுமின்றி, நாவைச் சத்தியம் காப்பது போல், காத்து வந்தார். 'அம்மை திருப்பதிகம்' பாடியதன் பரிசாகப் பெற்றதாகக் கொண்டு அவளுக்கு ஆசையுடன் அம்மையின் பெயரையே 'ஆனந்தவல்லி' என்று சூட்டினார். அவள் தன் அபிமானத்தையெல்லாம் தந்தையின் கோயில் தொண்டில் பாதிப் பங்கு பெற்றுச் செய்ததன் மூலம் தெரிவித்துக் கொண்டாள்.

கோயில் தொண்டுக்கு நடுவில் அபூர்வமாகச் சிறிது பொழுது கிடைத்தால் அருட்பாசாமி வாசல் திண்ணையில் வந்து உட்காருவார். நாகலிங்கம், நாகலிங்கமாகவே இருந்த போதும் சிண்டு சாதுவாக மாறி வந்திருந்த போதும் அவர் உருவம் எப்போதும் வாசல் திண்ணையில் காணப்படும். சிண்டுவும் அருட்பாசாமியும் சிநேகம் கொண்டதற்கு அடிப்படை




"ஏம்மா! 'மெல்லியலாள்'னு பொம்மனாட்டின்னு புத்தகத்திலே போட்டிருக்கே! நிஜம் தானா?"

யாக எதுவும் இல்லை: புதரும் பூவும் உறவு கொண்டாடும் நியமம் இயற்கையில் ஏற்பட்டு விட்டதைப் போல் இவர்கள் தொடர்பு ஏற்பட்டது.

சிண்டு பணத்துக்காக மூச்சுவிட்டுக் கொண்டிருந்தார். தரகு வியாபாரம் அவரை ஆகாசத்துக்குத் தள்ளி விட்டது. அந்தத் திண்ணையில் உட்கார்ந்தபடி அவர் பேசுவார். அந்தப் பேச்சில் மாடுகள் மாறும்; வீடுகள் மாறும். மனிதத் தரகும் செய்து ஓசைப்படாமல் எங்கேயாவது கல்யாணங்களை முடித்து வைப்பார். பணம்!—வெள்ளிப் பணத்தில் தான் அவருக்கு நம்பிக்கை. மூட்டையாகக் கட்டி அந்தக் குகை இருளில் எத்தனை புதைத்திருப்பாரோ! வட்டிக்கு நாலு திசைகளிலும் போயிருக்கிறது எத்தனையோ...

அருட்பாசாமிகூடச் சில சமயம் சிரித்துக் கொண்டு அவரிடம் கேட்பார்: "நீர் என்ன குருவியா ஐயா! அது மூக்கிலே இடுக்கிக் கொண்டு வருகிற குப்பை சத்தை மாதிரி பணத்தைச் சேர்த்துக்கொண்டு கிடக்கிறீரே!"

"பணத்தைத் திருடவில்லையே, சாமி நான்! சம்பாதிக்கிறேன். உலகத்தில் சம்பாதிக்கிறவக்கு, சந்தர்ப்பம் இரண்டும் இருந்தால் சம்பாதிக்க வேண்டியதுதானே?"

'ஒரு கும்பிக்கு எவ்வளவு ஐயா சம்பாத்தியம் வேண்டும்?"

"அப்படித் தரித்திர பட்சமா சம்பாதிக்க முடியுமா? நாக்கை ஒரு தரம் புரட்டறேன்! ஒரு பச்சை நோட்டு சலாம் போட்டு வருது. சம்பாதிக்கிற யோகம் இருக்கிறதைக் கெடுத்துப்பானேன் சாமி?"

மூச்சு விடாமலும் இருக்கச் சொல்ல முடியும் அந்தச் சிண்டை; இந்தச் சம்பாத்தியத்தை மறந்து, இருட்டறைப் பக்கம் போகாதே என்றால் கேட்க மாட்டார் அவர்.

ஒரு தடவை அருட்பாசாமியையே இடித்துக் காட்டிவிட்டாரே அவர்!

"சாமி முத்தையனுக்குப் பணம் கொடுத்திருக்கிங்களாமில்லே?"

"ஆமாம். முடை என்றான்..."

''முடை இல்லாத நேரம் எப்ப அவனுக்கு? பெருங்காயம் வச்ச டப்பாவாச்சே அவன்! சேதி தெரியாதுங்களா?''

''என்னவோ கொடுத்தேன்.''

''எவ்வளவு ரூபாய்?''

''இரண்டாயிரம் ரூபாய்.''

''சீட்டு, நாட்டு?''

''அதெல்லாம் ஒன்றும் கேட்கவில்லை நான்; ஓர் அவசர முடைக்கு என்றான். சீக்கிரம் கொடுத்து விடுவான்.''

''கொடுத்துவிடுவான், கொடுத்துவிடுவான், இன்லால்வன்லி கொடுக்கிறதாத்தான் இருக்காளும். சாமி, இப்ப சொல்லுங்க. ஒரு பக்கம் பள்ளம் பறிச்சா மறுபக்கம் மேடு காணும்கிற மாதிரி நீங்க பணத்தைக் கோட்டை விடறதுக்கு நான் பணம் சம்பாதிக்கிறது பொருத்தமாகத்தானே இருக்கு!''

அவர் ஒரு புன்னகை புரிந்து மேற் கொண்டு வளரவிடாமல் அந்தப் பேச்சை முடிச்தார்.

* * *

ஆனந்தவல்லியின் நெஞ்சகத்தில் சேதுவின் நினைவு உதயமாகிக் கொண்டிருந்தது அடிக்கடி. அவனைத் திடீரென்று சந்தித்ததில் ஏற்பட்ட ஒரு சிறு அதிர்ச்சி நினைவின் போக்கில் கனிந்து, அவள் உள்ளத்தில் சரசர வென்று தேன் உணர்வுகளைப் பெய்துவிட்டது. தன் நினைவிலும் பக்கலிலுமாக ஒரு துணைச் சுடர் தோன்றித் தொடர்ந்து வருவதாக அவள் நினைத்தாள். அந்தக் கப்பல் போன்ற வீட்டில் அவள் அருட்பாசாமியின் மறைவுக்குப் பின் ஒற்றை முகத்துடன் எரியும் குத்து விளக்குப் போல் நடமாடி வந்தாள்.

சேதுவை இத்தனை நாள் எப்படி மறந்திருந்தோம் என்று நினைக்க அவளுக்கு ஆச்சரியமாயிருந்தது. பத்து வருஷங்களுக்கு முன்பு ஒரு நாள் அவளது பத்தாவது வயதில் அவனைக் கண்டிருக்கிறாள் அவள். பதினெட்டாம் பெருக்கு விழாவுக்கு அவளுக்கு ஒரு தேர் கட்டித்தர வந்திருந்தான் அவன். தேர் மணித் தோரணங்கள் பூண்டு வெகு அழகாக இருந்தது.

''நிசம் தேர் மாதிரியே இருக்கே!'' என்று வியந்தாள் ஆனந்த வல்லி.

''இது என்னதான் நிசம் தேராட்டம் இருந்தாலும் நிசம்சாமி இதற்குள் ஏறிக்கொள்ளாது. நீ வேண்டுமானால் ஏறிக்கொள், ஆனந்தம்! நான் தேரை இழுத்துப் போய் ஆற்றிலே தள்ளிவிடறேன்'' என்றான் சேது.

'கலகல' வென்று பரல்கள் இறைந்தாற் போல் சிரித்தாள் ஆனந்தவல்லி. அந்தச் சிரிப்பை மனத்தில் வாரிக்கொண்டு போனவன்தான் சேது; மீண்டும் இன்றைக்குத்தான் ஆஜானுபாகுவான அழகனாக, நிமிர்ந்த பார்வையுடன், பரந்த தோள்களுடன் வந்திருக்கிறான். அன்று நினைவுக்கு வித்தாக அமைந்த இந்தச் சம்பவம் இன்று பூங்கொத்துக்களிடையே முழுவதும் மலர்ந்த ஒரு மலர் போல் நிமிர்ந்து எழுந்தது.

அவள் அவனையே நினைத்துக் கொண்டிருந்த போது.....

முத்தையனையே நினைத்துக் கொண்டிருந்த சிண்டு அவனைப் பார்க்கப் புறப்பட்டார்.

''சிவோகம்!''



திருவிதாங்கூர் கொச்சி சமஸ்தானத்து முதல் அட்வகேட் ஜெனரலாகப் பணியாற்றிய வரும் ஸுப்ரீம் கோர்ட் அட்வகேட்டுமான வைக்காடு ஸ்ரீ சுப்பிரமணிய அய்யரின் சஷ்டியப்த பூர்த்தி வைபவம் அக்டோபர் 9-ந் தேதி சிறப்பாக நடைபெற்றது.

''பூசை பண்ண வருகிறீர்களா மாமா?'' (சாப்பிடுவதையும் 'பூசை செய்வது' என்பது சில சைவரது வழக்கம்.)

''ஒரு காரியத்தைத் தலைமேலே எழுதிக் இட்டேன், அது முடியாதவரை இன்மே பூசையுமில்லே, புனஸ்காரமும் இல்லையம்மா.''

''என்ன காரியம் மாமா அது?''

''உன் கல்யாணம்தான், அம்மா! அருட்பாசாமி என் தலையிலே அந்தப் பொறுப்பைப் பெரிய சுமையாய்ச் சுமத்திட்டுப் போயிருக்காரே அம்மா! அவர் உனக்குக் கல்யாணம் முடிக்கச் சொன்ன சமயம் நெருங்கிவிட்டது.''

சூரிய உதயம் போல் சேதுவின் முகம் அவள் முன் உதயமாயிற்று. விளையாட்டுத் தேரில் தன்னை ஏறிக்கொள்ளச் சொல்லிப் பணித்த அவன் இன்று உண்மையாகவே வாழ்க்கைத் தேரில் தன் பக்கலில் ஏறிக்கொள்ளச் சொல்வதைப் போல் உணர்ந்தாள் ஆனந்தவல்லி. அந்த அன்புக் கட்டளை இந்தச் சிண்டு மாமாவின் வாய் வழி வருவதாகவும் அவள் உணர்ந்தாள்.

அவள் முகம் செம்மை சூழ்ந்து தாழ்ந்தது.

''சமயம் நெருங்கிவிட்டதென்று ஏன் சொல்கிறேன், தெரியுமா அம்மா?''

ஆனந்தவல்லி எந்த உணர்வையும் தோற்றுவிக்கச் சங்கடப்பட்டுக்கொண்டு மௌனமாக இருந்தாள்.

''நேத்து வந்தானே, அந்தச் சிப்பாய்க் கழிசடை! அவன் பேச்சும் போக்கும் எனக்கு ஒரு மாதிரியா யிருந்துச்சு.''

அவள் முகத்தின் நாணச் செம்மை திடீரென்று இதயத்தில் பற்றிய மாயத் தீயின் கோரச் செம்மையாக மாறியது. சிண்டு சாமியை நிமிர்ந்து பார்த்தாள்.

''உனக்கும் அவனைக் கண்டால் பத்திக்கிட்டு வருதில்லெ? எனக்குத் தெரியாதா? அவன்தான் ஊரைப் பார்க்க ஒழிஞ்சானே...அது சரி; இந்தக் காகிதத்தைப் படிச்சுப் பாரு.''

ஒரு பழைய எண்ணெய்ப் பசை ஏறிய காகித மடிப்பை அவளிடம் நீட்டினார் சிண்டு; அதைப் பிரித்துப் படித்தாள் அவள் :

'திருச்சிற்றம்பலம். திருநிறைச் செல்வி ஆனந்தவல்லி அறிவது : சகல சௌபாக்கியங்களும் உண்டாகுக. அடிகள் அநுக்கிரஹத்தினால் என் ஜீவனின் எல்லை அறிந்து உனக்குப் பின்னால் சொல்ல வேண்டியதை இந்தத் துண்டுக் கடிதத்தில் எழுதி வைக்கிறேன். சிண்டு சாமி நமது குடும்பத்தில் அக்கறை உள்ளவர். உன் வாழ்வில் விளக்கேற்றி வைக்க அவரிடம் நேரிலும் இந்தக் கடிதத்திலும் கேட்டுக் கொண்டிருக்கிறேன். முத்தையனை மருமகப் பிள்ளையாக நிச்சயம் பண்ணியிருக்கிறேன். மணந்து மங்களமுடன் நீ வாழ்வதாக. சிவமயம்'

நிறை குடமாயிருந்த பால் பாத்திரத்தைத் திடீரென்று கவிழ்த்து விட்டாற்போன்றிருந்தது ஆனந்தவல்லிக்கு. கொட்டிய பாலை இனிக் குடத்துள் செலுத்தவா?... தந்தையின் பெயரைக் காதால் கேட்டாலே உயிர் நாளங்கள் துடிக்கும் அவளுக்கு. இந்தக் கட்டளையை ஏற்றுக் கொள்ள அவள் மனம் விரைந்தது. தன்னுடன் தொடர்ந்து வந்த துணைச் சுடரான சேதுவின் நினைவை அழித்து விட வேண்டியதுதான் என்று தெரிந்ததும் தனித்தாள் அவள்.

''சரிதான் மாமா!'' என்றாள் அவள் தலை நிமிர்ந்து.

'இன்னைக்கே முத்தையனைக் கண்டு உன் சம்மதத்தைச் சொல்லிவிட்டு முகூர்த்தத் தேதி பார்க்கச் சொல்றேன், அம்மா!''

''சொல்லுங்கள் மாமா. அப்பாவின் கட்டளை இது என்றிருக்கும்போது என்னை எதுவுமே கேட்கக் கூட வேண்டாம் நீங்கள்... ஆனால், அந்த முத்தையனைப் பற்றிக் 'கன்னு பின்னு' வென்று அப்பாவிடம் சொல்லக் கேட்டிருக்கிறேனே, மாமா, அப்படி விருந்துமா அப்பா...''

''கல்யாணத்துக்கும் அந்தக் கன்னுபின்னுவுக்கும் சம்பந்தமில்லே அம்மா. கல்யாணம் ஆனாலே அதெல்லாம் சரியாகி விடும். அந்தப் பக்குவம் தெரிந்துதான் அருட்பா சாமி எனக்குக் கட்டளையிட்டிருக்கிறார் இப்படி!''

''சரி!'' என்றாள் ஆனந்தவல்லி. அந்த வார்த்தையில் தன் எதிர்கால வாழ்க்கை முழுவதையும் அடைத்து வைத்துவிட்ட ஒரு வறட்டு நிம்மதியில் ஆழ்ந்தாள்.

இரண்டாயிரம் ரூபாயை அருட்பாசாமி முத்தையனுக்குக் கொடுத்திருப்பதாகச் சொன்ன கணம் முதல் சிண்டுவுக்கு இந்தத் தொகை மீது ஒரு கண்ணும் முத்தையன் மேல் ஒரு கண்ணுமாகத்தான் இருந்தன. அருட்பா சாமி உயிரோடு இருந்த காலத்திலேயே அந்தத் தொகைக்குக் கிட்டி கட்ட எப்போதாவது போவார் சிண்டு.

முத்தையன் ஒரு மோட்டா ஆள். 'இந்த இரண்டாயிரம் ரூபாயைக் கொடுத்தப்ப [illegible] திருப்பி வரும்னு நெனைச்சுக் கொடுத்தது உங்க சாமி? போய்யா வேறே வேலெ இருந்தா பார்த்துக்கிட்டு!'' என்று ஒருமுறை சொன்ன பதிலைப் பல வகையாக மாற்றிப் பல நடவைகள் சொல்லிவிட்டான் அவன். சிண்டு அந்தப் பணத்தை வசூல் பண்ணாமல் விடுவதில்லை என்று சபதமே பூண்டார்.

அவர் நெருக்குவதைப் பார்த்துப் போன வருஷத்தில் ஒரு நாள் வேறொரு 'ஷரா' கண்டு பிடித்தான் முத்தையன்.

''இந்தா, ஐயா, பணம்தானேய்யா வேணும் உனக்கு? அன்னம் தெரியுமாய்யா உனக்கு அன்னம்?''

'தெரியும். பாலையும் தண்ணியையும் பிரிச்சுக் குடிக்கும். அசலையும் வட்டியையும் பிரிக்கிற அனுபவம் எனக்கு உண்டு.''

ரொம்பச் சரியான புள்ளி ஐயா! நீ கொஞ்சம் அன்னம் வேலை செய், ஐயா. இரண்டாயிரத்திலே பாதியை உனக்குக் கொடுத்துத் தலை முழுகுறேன்.''

'தம்பி சொல்றது புரியலை!''

''உனக்கு எங்கே புரியப் போவுது? தமயந்தி மாதிரி ஒரு அழகுப் பொம்மை இருக்கில்லை ஐயா சாமி வீட்டிலே?''

ஆனந்தவல்லியா?''

'' ஆமாம்: அதைக் கல்யாணம் முடிச்சு வை எனக்கு. உன் காட்டிலே அப்புறம் மழைதான்.''

சென்ற வருஷம் உதயமான இந்தத் திட்டம் நேற்றுத்தான் சிண்டுவைப் பொறுத்த வரை பூர்த்தியாயிற்று. சேதுவின் விஜயத்தில் ஏற்பட்ட அவர் மனப் புரட்சி இது. 'திருச்சிற்றம்பலம்' என்று தம் கையாலேயே ஒரு காகிதம் எழுதிக் கசக்கி, அழுக்கேற்றி வைத்துக்கொண்டு, ஆனந்தவல்லியிடம் அதைக் காண்பித்து வெற்றியும் அடைந்துவிட்டார்.

• • •

அந்த வெற்றியை மூட்டை கட்டிக் கொண்டு முத்தையனிடம் சொல்வதற்காக ஓடிவந்தார் சிண்டு.

''வாருங்கள், சாமி! உங்களுக்காகத்தான் காத்துக் கொண்டிருக்கிறோம்'' என்று குரல் கேட்டு நிமிர்ந்தார் அவர். ஒரு போலீஸ் இன்ஸ்பெக்டர் நாலைந்து கான்ஸ்டபிள்கள் சூழ நின்று கொண்டிருந்தார்.

''என்ன? என்னை எதற்கு?....'' என்றார் 'சிண்டு' சுவாமி.

''எதற்கு என்பது உங்களுக்குத்தானே சாமி இட்டமாகத் தெரிந்திருக்க வேண்டும்! உங்களையும் முத்தையனையும் பிணைத்த கேஸ்கள் இரண்டு மூன்றுதான் என்று நாங்கள் எண்ணுகிறோம். அதற்கும் மேலே இருந்தால் உங்களுக்குத்தானே அது தெரியும்!''

சாமியின் கையில் காப்பு ஏறியது. காப்புடன் முத்தையனும் வெளியில் வந்தான்.

இப்போது 'சிவோகம்' என்று சொல்லவில்லை சிண்டு. தன் சக்தியின் மதிப்பு அறிந்து அந்த வார்த்தை முன்பே அவரிடமிருந்து கடைசியாக வெளியேறிவிட்டது. அந்தச் சக்தி ஆனந்தவல்லியையும் சேதுவையும் பிணைத்து வைக்கப் போகிற இன்பச் செய்தியைக் கூற அவளிடம் விரைந்து கொண்டிருந்தது.

Printed and Published by R. Anantha narayanan for the Proprietors Messrs. Bharathan Publications Private Limited at the Kalki Press, Kilpauk Madras 10
Managing Editor, T. Sadasivam.

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

ஸ்வெட்டர் புதிதா?

## இல்லை — லக்ஸினால் சலவை செய்தது!

குளிர் காலத்துக்கான கம்பளித் துணிகள் — ஸ்வெட்டர்கள், கம்பளிச் சட்டைகள், ஸாக்ஸ், குழந்தைகளுக்கான அரிய ஆடைகள் — எல்லாமே மிக மென்மையானவை, குளிருக்கு அடக்கமானவை, அடிக்கடி அணியப்பட வேண்டியவை. ஆவ, மென்மையான லக்ஸ் ஆன்களால் அவற்றை அடிக்கடி சலவை செய்யுங்கள். கம்பளி ஆடைகளின் வர்ணம், வடிவம், மென்மை யாவும் பாதிக்கப்படாத வண்ணம் எல்லா அழுக்குகளையும் அகற்றுவது லக்ஸ். உங்கள் கம்பளித் துணிகளின் ஆயுளை நீடிக்கச் செய்வதற்கு நீங்கள் அவற்றிற்கு அளிக்க வேண்டிய விசேஷப் பராமரிப்பு — லக்ஸ் பராமரிப்பே.




**அழகான ஆடைகளுக்கு நெடுங்காலம் புதுமைத் தோற்றம்
அளித்துக் காப்பது லக்ஸ்**

LX. 140-50 TM

பம்பாயிலுள்ள ஹிந்துஸ்தான் லீவர் லிமிடெடின் தயாரிப்பு